# சங்க இலக்கியம்– பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் மெய்ப்பாடுகள் – ஓர் ஒப்பீடு

பெரியார் பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**ஜெ.முத்தமிழ்ச்செல்வி**
முனைவர் பட்ட ஆய்வாளர்
(பதிவுஎண்: PU/COE/RD4/Ph.D/652/2012)

நெறியாளர்
**பேராசிரியர் முனைவர் தி.இராஜரெத்தினம்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ்த்துறை
பி.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரி
நாமக்கல்



தமிழாய்வுத்துறை
பி.ஜி.பி.கலை அறிவியல் கல்லூரி
நாமக்கல்– 637 207
ஆகஸ்ட்டு – 2017

# நெறியாளர் சான்றிதழ்

**தி.இராஜரெத்தினம்**

இணைப்பேராசிரியர்

தமிழ்த்துறை

பி.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரி

நாமக்கல்

**“சங்க –பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் மெய்ப்பாடுகள்– ஓர் ஒப்பீடு”** என்னும் பொருள் குறித்த இவ்வாய்வேடு பி.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரியில் தமிழ்த்துறையில் 2012–2017ஆம் கல்வியாண்டில் (பகுதிநேரம்) திருமதி. ஜெ.முத்தமிழ்ச்செல்வி அவர்களால் தன்னிலையாக முனைவர் பட்டத்திற்காக எழுதப்பட்டது என்றும் இதற்குமுன் இப்பொருள் குறித்து எவ்வகை ஆராய்ச்சிப் பட்டமும் யாருக்கும் வழங்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**இடம் : சேலம்–11** **நெறியாளர் கையொப்பம்**

**நாள் :**

**தமிழ்த்துறைத் தலைவர்** **முதல்வர்**

# ஆய்வாளர் உறுதிமொழி

**ஜெ.முத்தமிழ்ச்செல்வி**

முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்)

தமிழ்த்துறை

பி.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரி

நாமக்கல்.

பெரியார் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் பெறுவதற்காக அளிக்கப்படும் **'சங்க – பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் மெய்ப்பாடுகள்– ஓர் ஒப்பீடு'** என்னும் பொருள் குறித்த இவ்ஆய்வேடு 2012–2017 ஆம் கல்வியாண்டில் பகுதிநேர ஆய்வாகத் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் தி.இராஜரத்தினம் அவர்களை நெறியாளராகக் கொண்டு எனது சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

இடம் : சேலம்–11

J. Muthamil Selvi

ஆய்வாளர்

நாள் : 17.08.2017

(ஜெ.முத்தமிழ்ச்செல்வி)

# Urkund Analysis Result

**Analysed Document:** J_ Muthamilselvi.pdf (D30005262)
**Submitted:** 2017-08-07 13:13:00
**Submitted By:** nsmaniyan@rediffmail.com
**Significance:** 0 %

Sources included in the report:

Instances where selected sources appear:

**Dr. N. SUBRAMANIAN, Ph.D.**
Prof. and University Librarian
University Library
Periyar University
Periyar Palkalai Nagar
Salem-636 011, T.N. India

## DECLARATION BY THE CANDIDATE

I hereby declare that the thesis entitled SANGA – PATHINENKILKANAKKU AKA NOOLGALIL MEIPPADU ORU OPPIDU submitted by me for the award of Ph.D. degree in committee is my original contribution and it is not plagiarized or copied from any other thesis / books/ any other copy right materials.

J. Muthamilselvi
Signature of the candidate

## CERTIFICATE BY THE SUPERVISOR

I hereby declare that the candidate Mr/Ms J.MUTHAMILSEVI has carried out the Ph.D. programme under my supervision during the period Jan-2012 to Aug-2017 and the thesis entitled SANGA – PATHINENKILKANAKKU AKA NOOLGALIL MEIPPADU ORU OPPIDU submitted by him/her is verified and it is not plagiarized or copied from any other thesis / books/ any other copy right materials.

Signature of the supervisor

முனைவர் தி. இராஜரெத்தினம்,
எம்.ஏ.,எம்.ஃபில், பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர் / ஆராய்ச்சி நெறியாளர்,
தமிழாய்வுத் துறை,
பிஜிபி கலை அறிவியல் கல்லூரி,
நாமக்கல் – 637 207.

## CERTIFICATE BY THE LIBRARIAN

It is certified that the thesis entitled SANGA – PATHINENKILKANAKKU AKA NOOLGALIL MEIPPADU ORU OPPIDU submitted by the Mr/Ms J.MUTHAMILSEVI, Department of Tamil under the supervision of Prof /Dr T.RAJARATHINAM, Department of Tamil is verified for plagiarism through the software and the thesis within the permissible limits of plagiarism rules and the percentage of plagiarism of the thesis is found to be .....0... %.(zero)

8/8/17
Signature of the Librarian

**Dr. N. SUBRAMANIAN, Ph.D.**
**Prof. and University Librarian**
**University Library**
**Periyar University**
**Periyar Palkalai Nagar**
**Salem-636 011, T.N. India.**

CERTIFICATE BY THE R&D COORDINATOR

It is certified that the thesis entitled SANGA – PATHINENKILKANAKKU AKA NOOLGALIL MEIPPADU ORU OPPIDU submitted by the Mr/Ms J.MUTHAMILSEVI, Department of Tamil under the supervision of Prof /Dr T.RAJARATHINAM, Department of Tamil is verified by the anti-plagiarism software and the percentage of plagiarism is within the permissible limit.

18/8/17

Signature of the R&D Coordinator.

CO-ORDINATOR
Research & Development
Periyar University
Salem - 636 011.

# நன்றியுரை

2012–2017 ஆம் கல்வியாண்டுகளில் என்னை பி.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரியில் பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளராக ஏற்று ஆய்வு செய்ய அனுமதி வழங்கிய பெரியார் பல்கலைக்கழகத்திற்கு எனது நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான கருத்துக்களை வழங்கியும், என்னை ஊக்கப்படுத்தியும் இவ்வாய்வேடு உருவாவதற்குக் காரணமான எமது நெறியாளர் முனைவர் தி.இராஜரெத்தினம் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான கருத்துக்களை வழங்கிய பி.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரி தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் திருமதி லலிதா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எனது ஆய்விற்கு உதவிகரமாக இருந்த எனது சகோதரன் கி.வசந்தகுமாருக்கும் என் கும்பத்தினர், மற்றும் எனது நண்பர்கள் அனைவருக்கும் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டினைச் செம்மையுற அச்சிட்டுக் கொடுத்த ஜி.வி.பிரிண்ட் பார்க் உரிமையாளர் சி.கௌதமன் அவர்களுக்கு எனது நெஞ்சம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஜெ.முத்தமிழ்ச்செல்வி

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | – | அகநானூறு |
| ஐங்கு. | – | ஐங்குறுநூறு |
| ஐந்.ஐம். | – | ஐந்திணை ஐம்பது |
| ஐந்.எழு. | – | ஐந்திணை எழுபது |
| கார்.நாற். | – | கார்நாற்பது |
| கலித். | – | கலித்தொகை |
| குறுந். | – | குறுந்தொகை |
| திருக். | – | திருக்குறள் |
| தி.மொ. ஐம். | – | திணைமொழி ஐம்பது |
| தி.மா.நூ.ஐம். | – | திணைமாலை நூற்றைம்பது |
| தொல். | – | தொல்காப்பியம் |
| பக். | – | பக்கங்கள் |
| பா. | – | பாடல் |
| பரிப். | – | பரிப்பாடல் |
| பட்டி. | – | பட்டினப்பாலை |
| புறம். | – | புறநானூறு |
| மெய். | – | மெய்ப்பாட்டியல் |
| நற்றி. | – | நற்றிணை |

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ்மரபைக் காத்து வருவதோடு மட்டுமல்லாமல் மொழியின் வளர்ச்சி நிலையினை உணர்த்த வல்லதாக இலக்கியங்கள் அமைகின்றன. அவ்வகையில் தமிழில் தோன்றிய சங்ககாலத்து இலக்கியங்கள் தமிழரின் வாழ்வியலை உணர்த்துவதாக அமைகின்றன. மேலும், காதலின்சிறப்பு, அவற்றின் பெருமைகள், வளமைகள், பண்பாட்டுக்கூறுகள் முதலானவற்றையும் உணர்த்துகின்றன. மனிதர்களின் உணர்வுகளைப் பிரதிபலித்துக் காட்டும் காலக்கண்ணாடியாகவும் எழுத்து வடிவில் திரையிடப்பட்ட ஓவியமாகவும் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. மக்கள் வாழ்வை ஒட்டி அகப்பொருள், புறப்பொருள் என இரண்டாகப் பகுத்து மொழியப்பட்டது. ஆண், பெண் உறவினை அகப்பொருள் என்றும் அஃது அல்லாத வீரம், புகழ், நிலையாமை, கல்வி போன்றவற்றை புறப்பொருள் என்றும் குறிப்பிட்டனர். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப்பொருட்களுள் அகம் இன்பத்தையும், புறம் ஏனையவற்றையும் குறிப்பதை சங்க இலக்கியங்களில் காணலாம். அகத்திணை மாந்தர்களின் வாழ்வினை காட்டுவதாகவும், அவ்வாழ்வில் பிணைந்து இருக்கக்கூடிய இன்பத்தையும் துன்பத்தையும் வெளிக்காட்டுவதாகவும் அமைகின்றன. அத்தகு உணர்வுகளை மாந்தர்கள் மெய்ப்பாடாக வெளிப்படுத்துகின்றனர்.

### பதினெண்கீழ்க்கணக்குப் பாடல்கள்

சங்க இலக்கியப் பாடல்கள், பதினெண்கீழ்க்கணக்கில் உள்ள அகப்பாடல்கள் ஒவ்வொன்றிலும் மெய்ப்பாடு அமையப் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் கார்நாற்பது ஐந்திணை

ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது மற்றும் கைந்நிலை என்பன அகம் பற்றியவை. இவை சங்க இலக்கியக்கோட்பாட்டின் பிற்கால வளர்ச்சிப் பாடல்கள், தொல்காப்பிய பொருளதிகாரம் சங்க இலக்கியத்தையும் பதினெண்கீழ்க்கணக்கில் உள்ள அக இலக்கியத்தையும் விரிவாக விளக்கிச் சொல்லுவதைக் காணமுடிகிறது.

**தொல்காப்பியர் கூறும் மெய்ப்பாடுகள்**

தலைவன், தலைவியிடம் தோன்றும் காதல் நிலைகளை அகத்திணை மெய்ப்பாடுகளில் தெளிவாகவும், முறையாகவும் வரையறைப்படுத்தியுள்ளார் தொல்காப்பியர். மெய்ப்பாட்டிற்கென தனியோர் இயலையே வகுத்துக்கொண்டு அதில் தொல்காப்பியர் 'நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம் ,பெருமிதம், வெகுளி, உவகை என்பனவற்றை மெய்ப்பாடுகளாகக் கூறுகிறார். இவைத்தவிர மெய்ப்பாட்டின் பல்வேறு நிலைகள் விவரிக்கப்பட்டுள்ளன.

**சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகளும் கூற்றுகளும்**

தலைவன் தலைவியின் ஒப்புமை மெய்ப்பாடுகள் சங்க இலக்கிய அகத்திணைப் பாடல்களில் மிகுதியாகக் காணலாம். சங்க இலக்கியத்தில் அகப்பொருளுக்கும், புறப்பொருளுக்கும் தனித்தனி மெய்ப்பாடுகள் உள்ளன. தலைவனும் தலைவியும் கல்வி, செல்வம், அழகு போன்றவற்றில் ஒத்து விளங்க வேண்டும். இவற்றுள் தலைவன் உயர்ந்து விளங்கினும் தவறில்லை. அகப்பாடல்கள் ஒவ்வொன்றும் ஒரு நிகழ்ச்சிக் கூற்றாகவோ நடக்கும். இக்கூற்றுக்கள் தலைவன் தலைவி முதலியோரின் மெய்ப்பாடுகளையும், பண்பு நலன்களையும் ஒழுகலாறுகளையும் விளக்கி நிற்கும்.

**தலைவியிடம் தோன்றும் மெய்ப்பாடுகள்**

கற்புச்சிறப்பிற்கு மட்டுமின்றி தமிழர் வாழ்வின் உயர்விற்கும் காரணமாக அமைவன கற்புக்கால மெய்ப்பாடுகள். இம்மெய்ப்பாடுகள் இல்லறம் நல்லறமாக விளங்க தலைவியிடம் தோன்றுவது. இம்மெய்ப்பாட்டில் 'தெய்வமஞ்சல்' என்னும் மெய்ப்பாடு தலைவியின் ஆழ்ந்த காதலையும், கற்பின் சிறப்பினையும் காட்டுகிறது. சங்கப்பாடல்களில் அமைந்துள்ள நிலையை ஒவ்வொரு பாடலுடன் பொருத்திக் காணும் பொழுதுதான் இக்கோட்பாட்டின் சிறப்பும் தொல்காப்பியர் இக்கோட்பாட்டிற்கு தந்துள்ள சிறப்பும் அறியமுடிகிறது. இம்மெய்ப்பாட்டியலை அடிப்படையாகக் கொண்டு சங்க கவிதைகளையும் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களையும் ஆராய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வுத்தலைப்பு**

"சங்க பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் மெய்ப்பாடுகள் – ஓர் ஒப்பீடு" என்பது ஆய்வுத்தலைப்பாக அமைகிறது.

**ஆய்வு நோக்கம்**

1. சங்க இலக்கியப் பாடல்களுக்கும் பதினெண்கீழ்க்கணக்கு பாடல்களுக்கும் இடையிலுள்ள தொடர்பினை வெளிப்படுத்துதல்

2. அவ்வாறு வெளிப்படும் தொடர்புகளுக்கு அடிப்படையாக இருக்கும் காரணிகளைக் கண்டறிதல்

3. தொல்காப்பியர் குறிப்பிடும் மெய்ப்பாடுகளைக் கொண்டு சங்க இலக்கியம் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களை ஒப்பிட்டு ஆராய்வதே இவ்வாய்வின் நோக்கம்.

**கருதுகோள்**

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் பயன்படுத்தப்படும் மெய்ப்பாடுகள் சங்க இலக்கியங்களில் பயின்று வரும் மெய்ப்பாடுகளிலிருந்து வேறுபடுவதை நிரூபிப்பதும், அதற்கான காரணங்களை ஒப்பிட்டு ஆராய்வதும் இவ்வாய்வின் கருதுகோள் ஆகும்.

**ஆய்வு மூலங்கள்**

சங்க இலக்கிய அகநூல்கள், மற்றும் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்கள், முதன்மை ஆதாதரங்களாகவும் ஒப்பாய்வு தொடர்பாக வெளிவந்துள்ள நூல்கள், சங்க இலக்கியம் மற்றும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் தொடர்பாக வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், ஆராய்ச்சிகள், இதழ்கள், கட்டுரைகள், அகராதிகள், சொற்பொழிவுகள் ஆகியவை துணைமை ஆதாரங்களாகவும் அமைகின்றன.

**ஆய்வு எல்லை**

ஆய்வு மூலங்களாக எடுத்துக்கொள்ளப்பட்ட எட்டுத்தொகை பத்துப்பாட்டும், பதினெண்கீழ்க்கணக்கில் அகநூல்களும் ஆய்வுக்காக தெரிவு செய்யப்பட்டுள்ள ஒப்பீட்டு நூல்களும், ஆய்வு எல்லையாக அமைகின்றன.

**ஆய்வு முன்னோடிகள்**

சங்க இலக்கியம், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களை பற்றி தனித் தனியாகவும், ஒப்பீட்டும் ஆய்வு நூல்கள் வெளிவந்துளளன. மெய்ப்பாடுகளைப் பற்றி நூல்களும், ஆராய்ச்சிக்கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. அவற்றுள் மு.பொன்னுசாமி எழுதிய சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள் என்ற நூலும்,

முனைவர் அ.வெ.சுப்பிரமணியன் எழுதிய அகப்பொருளில் அச்ச மெய்ப்பாடுகள் என்ற நூலும் திருமதி. ஏஞ்சல்ராணி பதினெண்கீழ்க்கணக்கில் தோழி என்ற நூலும், கதிர் மகாதேவனின் ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம் என்ற நூலும் குறிப்பிடத்தக்கவையாகும். மேலும், ‘சங்க நூல்களில் மெய்ப்பாடுகள் – ம.தமிழ்மதி என்ற ஆராய்ச்சி நூலும் அகநானூற்றில் உளவியல் கூறுகள், ஆய்வாளர் ம.சந்திரசேகரன் என்ற ஆராய்ச்சி நூலும் ஆய்வு முன்னோடியாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

இவ்ஆய்வு சங்க இலக்கியம், பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் காணப்படும் மெய்ப்பாடுகளை ஒப்பிட்டு ஆய்வதையே நோக்கமாக கொண்டுள்ளன. எனவே, இவ்வாய்வு, ஒப்பிட்டு முறை ஆய்வாகவும், விளக்கமுறை ஆய்வாகவும் விளங்குகிறது.

## இயல் பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

1. தொல்காப்பியத்தில் காணலாகும் மெய்ப்பாடுகள்– ஓர் அறிமுகம்
2. சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள்
3. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் மெய்ப்பாடுகள்
4. சங்க இலக்கியம், பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் மெய்ப்பாடுகள் – ஓர் ஒப்பீடு

**1. தொல்காப்பியத்தில் காணலாகும் மெய்ப்பாடுகள்– ஓர் அறிமுகம்**

தொல்காப்பியத்தில் காணலாகும் மெய்ப்பாடுகள் ஓர் ஒப்பீடு என்னும் முதலாமியலில் மெய்ப்பாடு என்பதன் பொருள், மெய்ப்பாடு பற்றி சான்றோரின் கருத்துக்கள், மெய்ப்பாடு குறித்து பிற இலக்கண நூல்கள் தரும் விளக்கம், மெய்ப்பாடும் சுவையும் குறித்த விளக்கமும், எண்வகை மெய்ப்பாட்டிற்கு அகராதிகள் தரும் விளக்கமும், எண்வகை மெய்ப்பாடுகள் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள முறையையும் விளக்கப்பட்டுள்ளது.

**2. சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள்**

களவுக்கால மெய்ப்பாடுகளாக தொல்காப்பியர் குறிப்பிடும் புகுமுகம் புரிதல் முதல் கையறவுரைத்தல் வரை இருபத்தினான்கு மெய்ப்பாடுகள் சங்க இலக்கியத்தில் எவ்வாறு இடம்பெற்றுள்ளன என்பதை குறித்து விளக்கப்பட்டுள்ளன. கற்புக்கால மெய்ப்பாடுகளாக தெய்வம் முதல் புறச்சொல் மாணாக்கிளவி வரை தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ள மெய்ப்பாடுகள் சங்க இலக்கியத்தில் எவ்வாறு இடம்பெற்றுள்ளன என்பதை குறித்து விளக்கப்பட்டுள்ளன.

**3. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் மெய்ப்பாடுகள்**

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் எண்வகை மெய்ப்பாடுகள் குறித்தும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் களவுக்கால கற்புக்கால மெய்ப்பாடுகள் குறித்தும் விளக்கப்பட்டுள்ளன.

**4.சங்க இலக்கியம் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் மெய்ப்பாடுகள் ஒப்பீடு**

ஒப்பிலக்கியத்திற்கான அடிப்படை குறித்தும் ஒப்பாய்வின் பயன்கள் குறித்தும், ஒப்பீட்டுத்துறையில் ஆராய்ச்சிகள் குறித்தும் விளக்கப்பட்டுள்ளன. சங்க இலக்கியம் மற்றும் பதினெண்கீழ்க்கணக்கு பாடலில் பொதுமைக் கூறுகள் குறித்தும் சிறப்புக் கூறுகள் குறித்தும் ஆராயப்பட்டுள்ளன. மேலும், சங்க இலக்கியம், பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் மெய்ப்பாடுகளில் ஒற்றுமை, வேற்றுமை குறித்து ஆராயப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலிலும் கண்ட முடிவுகள், முடிவுரை என்ற இயலில் தொகுத்துக் கூறப்படுகின்றன.

தொடர்ந்து ஆய்வுக்குத் துணை நின்ற துணை நூல்களின் பட்டியல் இடம்பெறுகின்றது.

# இயல்–1

# தொல்காப்பியத்தில் காணலாகும் மெய்ப்பாடுகள் – ஓர் அறிமுகம்

மக்களின் வாழ்க்கை அனுபவங்களிலிருந்து வெளிப்படுவது இலக்கியமாகும். ஒரு நாட்டின் வரலாற்றை அறிவதற்கு அந்நாட்டின் அந்தந்தக் காலங்களில் எழுந்த இலக்கியங்கள் உதவி செய்கின்றன. அக்குறிப்பிட்ட காலத்தில் எழுந்த நூல்கள் அந்தக்காலகட்டத்தில் வாழ்ந்த மக்களின் சமூக வாழ்வினையும் பண்பாட்டு நாகரீக வளர்ச்சியினையும், எடுத்துக்காட்டுவனவாக உள்ளன. அத்தகைய சிறப்பு வாய்ந்த இலக்கியங்கள் தமிழில் ஏராளமாகத் தோன்றியுள்ளன.

நாகரிகத்தின் கருத்துப் பெட்டககங்களாக தமிழ் இலக்கியங்கள் உள்ளன. தமிழ்மொழி இன்றைக்கும் செம்மொழி எனும் உயர்மதிப்பை பெற்றிருப்பதற்கு முதன்மையான காரணியாக விளங்கியது சங்க இலக்கியங்களேயாகும். தமிழ் இலக்கியங்களில் காலத்தால் முற்பட்டதும், மிகப்பழமையானது சங்க இலக்கியமும் தொல்காப்பியமும் ஆகும்.

எட்டுத்தொகை , பத்துப்பாட்டு என்று பகுக்கப்பட்ட இவ்விலக்கியங்கள் தமிழிர்களின் வரலாற்றையும். தென்னிந்தியாவில் வரலாற்றையும் அறியப்பெரிதும் துணைபுரிந்து வருகின்றன. மேலும், இவை இரண்டும் பழங்காலத்தமிழரின் இலக்கிய இலக்கண அறிவை எடுத்து இயம்புவனவாக அமைகின்றன சங்க இலக்கியம் தமிழரின் மன இயல்புகள், நம்பிக்கைகள் போன்ற பிறவற்றையும் நமக்குத் தெரிவிக்கின்றன. இவற்றில் காதல், அச்சம், வருத்தம், அழுகை என உணர்வுகளும் உணர்வுப் போராட்டங்களும்

காணப்படுகின்றன. இவற்றை தொல்காப்பியர் ‘மெய்ப்பாடுகள்’ என்று குறிப்பிடுகிறார். அவற்றைப் பற்றி இங்குக் காண்போம்.

தமிழ் மொழியின் தொன்மையையும் தமிழ் இலக்கியத்தின் சிறப்பையும் நன்கு அறிந்து கொள்ள உற்றத்துணையாக இருப்பது தொல்காப்பியமே. வேறெந்த மொழி நூலுக்கும் இல்லாத பழமையும், பெருமையும் அழகும் அருமையும் அமைந்த ஒரு இலக்கணநூலாகும். அகமென்றும், புறமென்றும் பிரிவு கொண்டமையும், வாழ்வியல் முறையை, நூற்பாக்களுள் வகுத்துச் சொல்வதில் தொல்காப்பிய பொருளதிகாரம் பெரும் பங்கு வகிக்கின்றது. இல்லறத்தை மேற்கொள்ள விரும்பும் ஒருவனும் ஒருத்தியும் எவற்றை ஏற்க வேண்டும் எவற்றை விலக்க வேண்டும் எனத் தொல்காப்பியர் அகத்திணையியல் களவியல், கற்பியல், பொருளியல் என நான்கு இயல்களில் எடுத்துரைக்கிறார்;. “பொருளாவது புறம், அகம் என இருவகைத்து. ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியும் தாமே துய்த்து உணர்த்தலன்றி எல்லோராலும் துய்த்து உணரப்படுதலும் இஃது இவ்வாறு இருந்தது எனப்பிறர்க்குப் கூறத்தக்கதும் ஆகிய அனைத்தும் புறப்பொருள் ஆகும்**1.** என்று புறம் பற்றி அ.அ.மணவாளன் தமது நூலில் விளக்குகிறார்.

சங்க இலக்கியங்களில் பொதுவாக அகக்கருத்துக்கள் மிகுந்து காணப்படுகின்றன. இவற்றை வ.சுப.மாணிக்கம் “சங்க இலக்கியம் காதல் வாழ்வு பற்றிக் கூறும் அக இலக்கியமாகும். அகப்பொருள் இலக்கியம் என்ற பெயர் பெற்றிருப்பினும் இல்லறவாழ்வுக்குத் தொடர்பான உலகச் செய்திகளும், இயற்கைச் சூழல்கள், அரசியல் போரியல் நெறிகளும் உயர்ந்த எண்ணங்களும் நல்ல பழக்க வழக்கங்களும் இவ்விலக்கியத்தில் நிரம்பவும் தெளிவாகவும் பொதிந்து கிடக்கின்றன”[2] என்று தமது நூலில் குறிப்பிடுகிறார்.

தொல்காப்பியம் அகத்திணையை கைக்கிளை, பெருந்திணை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஏழு திணைகளாகப் பகுத்துக் கூறுகின்றது.

''கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்

முற்படக் கிளைந்த எழுதிணை என்ப'' [3]

மாந்தர் கொள்ளும் ஏழுவகைக் காதல் ஒழுக்கம் காரணமாகத் தொல்காப்பியம் அகத்திணைக் காதலை ஏழு ஆகக் கூறுகின்றது.இவை கைக்கிளை, புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல், பெருந்திணை என்ற காம ஒழுக்கங்களை உடையன. ஐந்திணைக் காதல் அறத்தின் அடிப்படையில் இயல்பான உலகினர் ஒப்புக் கொள்ளும் ஒழுக்கத் தன்மையுடையது.

பொருளதிகாரத்தின் ஒன்பது இயல்களில் ஒன்று மெய்ப்பாடு பற்றியதாகும்.தொல்காப்பியர் செய்யுளியலில், செய்யுளுக்குரிய உறுப்புகளைக் கூறும் போதும் மெய்ப்பாடு பற்றிக் கூறுகிறார். இவற்றை ''மெய்ப்பாடு என்பது அகச் செய்யுளில் நாடகக் கூறு கொண்ட இன்றியமையாப் பகுதியாகும் . அஃது இயல்பான பொருளால் எந்த முயற்சியுமின்றி உணரப்படவேண்டும் மன உணர்வுகளைத் தூண்டும் வகையில் ஒரு செய்யுள் இயற்றப்பட வேண்டும் மொழி என்ற ஊடகத்தின் வழியாகப் படிப்பவர்க்குத் தன் அனுபவத்தைக் கவிஞர் தெரிவிப்பதே மெய்ப்பாடாகும்.[4] மெய்ப்பாடு என்பது ஆய்ந்து அறிதல் இன்றி செய்யுள் கூறும் பொருளாலே புறஉடல் குறிகள் தோன்றுமாறு செய்வது என்கிறார்.

'' உய்த்துணர்வின்றி தலைவரு பொருளின்;

மெய்ப்பட முடிவது மெய்ப்பாடாகும்''[5]

யாதானும் ஒன்றைக் கூறியவர் அதன்கண் பொருண்மையை ஆராய்தலன்றி அவ்விடத்து வரும் பொருண்மையானே மெய்படத்தோன்றி முடிப்பது மெய்ப்பாடு. உள்ளத்தே தோன்றும் எண்ணங்களை, உடலின் அசைவு, அசைவற்ற தன்மையினாலும்,உடல் குறிப்புகளாலும் மற்றவர்களைச் சிந்திக்கவும் ஆராயவும் இடம்தராமல் வெளிப்படுத்தல் மெய்ப்பாடாகும்.

மெய்ப்பாடு என்பது நல்நயப் பொருள்கோள் அதாவது இலக்கியத்தின் நல்ல நயமிக்க பொருளைக் கண்டு கொள்ளும் திறமை, அதற்கு நல்ல புலன் அனுபவம் வேண்டும். கண்ணாலும் செவியாலும் ஏனைய உடல், வாய், மூக்காலும் கூட நன்கு உறுதிப்பட்ட உலக இன்ப துன்பங்களை அறியவல்ல அனுபவ உணர்வுள்ள மாந்தர்களுக்கு மட்டுமே இலக்கியச் சுவைகளையும் உணர்ந்து இன்புற முடியும்.

### 1.1.‘மெய்ப்பாடு’– பொருள்

மெய்ப்பாடு என்பதற்கு ‘‘உள்ளத்தில் உள்ள மகிழ்ச்சி, சோகம் போன்ற உணர்ச்சிகளின் உடல் வழியான வெளிப்பாடு (physical manifestations of emotions)’’[6] என்று கிரியாவின் தற்காலத்தமிழ் அகராதி விளக்கம் தருகின்றது. மெய்படு என்பதன் திரிந்த வடிவமே மெய்ப்பாடு ஆகும். மெய் + படு = மெய்ப்பாடு ‘படு’ என்ற வினைச்சொல் நீண்டு முதனிலை திரிந்த தொழிற்பெயராகி நிற்கிறது எனவே மெய்யில் படுதல் மெய்ப்பாடாகும்.

உள்ளத்தே தோன்றும் எண்ணங்களை, உடலின் அசைவு, அசைவற்ற தன்மையினாலும் உடல் குறிப்புகளாலும் மற்றவர்களைச் சிந்திக்கவும் ஆராயவும் இடம்தராமல் வெளிப்படுத்துதல் மெய்ப்பாடாகும். இவற்றை ‘‘உள்ளக்கிடக்கையை மெய்யிற்படுத்தல் மெய்ப்பாடென்பர்’’[7] மெய்ப்பாடு

என்பது உடலைச் சார்ந்து எழுவது. உணர்ச்சியை உடல் வழியாக வெளிப்படுத்துவது. ‘‘மெய்ப்பாடு (emotion) மனிதனிடம் அமைந்துள்ள இன்றியமையாத கூறாகும். அது உடலைச் சார்ந்து எழுவது, தமிழ்மொழியின் காரண காரிய தொடர்பைத் தெரிவிக்கும் சொல்லாக அறிவுக்குப் பொருத்தமாக இது இயல்புடன் அமைந்துள்ளது. உடல் உணர்வுகள் தூண்டப்பெறுவதால் ஏற்பட்டுள்ள நிலையை இது குறிக்கும்’’[8] என்கிறார்.

மனிதர்களின் இன்ப, துன்ப உணர்வுகள் பொதுவானவை இலக்கியங்களைப் படிக்கும் போது அந்தப் பாத்திரப்படைப்புகளில் அமைந்த இந்த உணர்வுகளைத் தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலாக விளக்குகிறார். மெய்ப்பாட்டினைச் செய்யுளுறுப்புகளுள் ஒன்றாக வைத்துள்ளார் மெய்ப்பாடு என்பது மனத்தொடர்பு பற்றியது.

1. நாடகத்தில் நடிப்பவன் செய்தது காண்பவனுக்கு எய்துகிறது.
2. வாழ்வில் நுகர்ந்தவன் வெளிப்படுத்தியது பார்பவனால் உணரப்படுகிறது.
3. இலக்கியத்தில் படைப்பவன் வெளிப்படுத்தியது படிப்பவனால் உணரப்படுகிறது.

எனவே. மெய்ப்பாடு என்பது நாடகத்திலும் வெளிப்படுகிறது வாழ்க்கையிலும் அமைகிறது. இலக்கியத்திலும் உணரப்படுகிறது என்கிற கருத்து அறியப்படுகிறது.

இவற்றை அ.வே.சுப்பிரமணியன் தமது நூலில் ‘‘இலக்கியத்தில் வருகின்ற எண்சுவைகள் பற்றிப்பேசுவது மெய்ப்பாடு ஆகும். மெய்ப்பாடு என்ற கொள்கை மிக ஆழமானது மெய்ப்பாடு தோன்றக் கூறும் காரணங்கள், காலத்திற்கு தக மாற்றமடையலாம். இருவகை நிலத்தில் இயல்வது சுவையே

எனப்பேசும்போது, எந்நோக்கத்தோடு இலக்கிய ஆசிரியன் தன்நூல் உருவாக்குகின்றானோ அந்நோக்கம், அவ்வுணர்வு, அச்சுவை, அம்மெய்ப்பாடு படிக்கின்றவனிடம் கேட்கின்றவனிடம் பார்க்கின்றவனிடம் ஏற்படல் வேண்டும் அவ்வாறு அமைந்தால் தான் அவ்விலக்கியம் வெற்றி பெற முடியும் என்பதை வலியுறுத்துகிறது''[9] என்கிறார்.

**1.2.மெய்ப்பாடு பற்றி சான்றோர் கருத்துக்கள்:**

**இளம்பூரணர்:**

''மெய்யின்கண் தோன்றுதலின் மெய்ப்பாடாயிற்று''[10] என்றும், அதன் அடையாளமாகக் கண்ணீர் அரும்பலையும், மெய்சிலிர்த்தலையும் குறிப்பிட்டுள்ளார்.

**பேராசிரியர்:**

''உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே
புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்றான் புலப்படுதல்''[11]

'மெய்' என்பது பொருள் 'பாடு' என்பது அறிவித்தல், அஃதாவது உலகத்து மக்கள் உள்ளத்தின்கண் நிகழும் நகை முதலிய குறிப்புகள் உள்ளத்தில் நிகழ்ந்தபடியே மற்றவர்க்கு அவர்கள் உடம்பின்கண் நிகழும் வேறுபாடுகளால் புலப்படுத்தல் என்ற கூறுகிறார்.

**செயிற்றியர்**

''உய்ப்போன் செய்தது காண்போர்க் கெய்துதல்
மெய்ப்பாடென்ப மெய்யுணர்ந்தோரே''[12]

நாடக அரங்கில் நடிப்போன் தனது உள்ளத்துணர்வுகளைத் தன் உடம்பின்கண் வெளிப்படத் தோன்றும் விறலால் காண்போர் மனங்கொளச் செய்தல் மெய்ப்பாடாகும். அதாவது அச்சமுற்றவனிடத்து நிகழும் அச்சம் அவனிடத்துத் தோன்றிய சத்துவத்தினாற் காண்போர்க்குப் புலனாகும் தன்மை மெய்ப்பாடாகும்.

**க.வெள்ளைவாரணன்**

“உலகத்தாரது உள்ள நிகழ்ச்சி அவரது உடம்பின் கண் தோன்றும் கண்ணீரருமபல், மெய்மயிர்சிலிர்த்தல், வியத்தல், நடுக்கம் முதலிய புறக்குறிகளால் காண்போர்க்கும் புலனாகுந்தன்மை மெய்ப்பாடென்பர்”[13] என்கிறார்.

**தமிழண்ணல்:**

“பாடலே அம்மெய்ப்பாடு—உருக்கொண்டு வெளிப்புறப்பட்டுத் தோன்றுகிறது. அதுவே மெய்ப்பாடு ‘கவிப்பொருள் உணர்ந்தால் அக்கவியானே சொல்லப்படும் பொருள்கள் வேறு கண்டாங்கு அறிதல் மெய்ப்பாடு’ என்று சிறப்பு விளக்கமும் பொருளை உணர்வதால் வேறு தனித்துக்கண்டாங்கு to create a separate image பெறும் மனவுருவையே அறியச் செய்தல் எனும் போது, படைப்பு வன்மையால் அக்காட்சி தோற்றுவிக்கப்படுவதை உணர்த்துகிறார். இங்ஙனம் அறியச்செய்தலும், அறிதலுமே மெய்ப்பாடென்கின்றன”[14] என்று தமிழண்ணல் விளக்குகிறார்.

கவிச்சுவையும், இலக்கியச்சுவையும் நம் உள்ளத்தில் உணர்ச்சியைத் தோற்றுவிக்கின்றன. உணர்ச்சிக் கேற்ப உடலில் தோன்றும் வேறுபாடுதான் ‘மெய்ப்பாடு’ எனப்படுகிறது.

**மெய்ப்பாடு குறித்து பிற இலக்கணநூல்கள் தரும் விளக்கம்:**

**வீரசோழியம்:**

“மெய்ப்பாடாவது கண்டது போலத்தோன்றும் கருத்து .இவை நாட்டியத்திலும், காப்பியத்திலும், செய்கைத் திறத்தினாலும், சொல்திறத்தாலும் தூண்டப்பட்ட வாசனையின் திண்மையால் அனுபவநிலையில் வந்து ஆனந்தமாக நிற்பன”[15] என்று வீரசோழியம் நூலில் விளக்கம் தருகிறார் ஆசிரியர்.

**தொன்னூல்:**

மெய்ப்பாட்டை ‘சுவையணி’ என்று குறிப்பிடுகிறார். சுவையணி என்பது கடுஞ்சினம், காமம், வியப்பு, அவலம், இழிவு, நகை என்று மெய்ப்பாட்டைக் குறிப்பிடுகிறார்.

**மாறனலங்காரம்:**

தொல்காப்பியத்தை அடியொற்றியே மாறனலங்காரமும் மெய்ப்பாட்டில் தோன்றும் சுவையெட்டு எனக் கூறுகிறது.

“ பொறியுணர் வொடு மொருபொருளிதுயெதிர்”[16]

இந்திரியங்களின் அறிவினோடும் யாதனுமொரு பொருளைக் காணப்பட்ட மனத்துள் அப்பொருள் ஏதுவாக நிகழ்ந்த தன்மை நிகழ்ந்தவாரே புறத்தார்க்கு புலப்படுமாறு மெய்ப்பாடுகள் எட்டால் தோன்றுவது சுவையென்னும் அலங்காரம் என்று குறிப்பிடுகிறார்.

**முத்துவீரியம்:**

“எட்டுவகை மெய்ப்பாடுகளாக சுவையணி பிறக்கும் என்று இந்நூல் கூறுகிறது. அச்சம். வீரம், அவலம், காமம், இழிப்பு , வியப்பு, நகை, உருத்திரம் என எட்டு வகை சுவைகள் குறிப்பிடப்படுகின்றது”[17]

### 1.4. எண்வகை மெய்பாடுகள்

''நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பால் எட்டாம் மெய்ப்பாடென்ப''[18]

மேற்கூறிய எட்டும் மெய்ப்பாடு என்று கூறப்படுகிறது. இவை 'சிறப்பு நிலை மெய்ப்பாடுகள்' என்றும் வழுங்கப்படுகிறது. இலக்கியங்களிலும், உலகியல் வழக்கிலும் சிறப்பாக பேசப்படுதலின் காரணமாக அவ்வாறழைக்கப்படுகிறது. இருதிணைக்கும் பொதுவான மெய்ப்பாடாக இவற்றை பகுத்துக் கூறுகிறார். இவற்றைப் பற்றி தமிழிசைக்கலைக்களஞ்சியம் ''உடலில் தோன்றும் செயல்பாடுகளே மெய்ப்பாடுகள் எனப்படுபவை : மெய்= உடல், பாடுகள் = செயலின் வெளிப்பாடுகள், உணர்ச்சிகள் முகம், கண், கழுத்து, கை, மேனி முதலியவைகளின் செயல்களை ஏற்படுத்துகின்றன மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள் வழியாக நுகர்வுகள் நிகழ்கின்றன.''[19]

இந்த எண்வகை மெய்ப்பாடுகளும் முப்பத்திரண்டு காரணங்களின் அடிப்படையில் தோன்றுகின்றன. ஒவ்வொன்றும் தன்கண் தோன்றுதலும், பிறர்கண் தோன்றுதலும் என்ற கூறுபாட்டினை உடையவைாக உள்ளன.

இவற்றை தமிழண்ணல் ''தொல்காப்பியர் முன்நிற்பன எல்லாம் சங்க இலக்கியம் போன்ற திணையிலக்கியமேயாகும். தனிப்பட்ட உலகப்பொருள்களைப் பாடும் மரபு எதுவும் அவர்முன் இல்லை. அடிப்படையான மெய்ப்பாடுகள் எட்டு, அவை ஒவ்வொன்றும் நான்கு, நான்கு காரணம் பற்றிப் பிறக்கின்றன என்று மிகப்பரந்துப் பட்ட எண்ணற்ற மெய்ப்பாடுகளை ஒரு கட்டிற்குள் கொண்டு வருகிறார் என்கிறார்''[20]

நகை – எள்ளல், இளமை,பேதைமை,மடமை

அழுகை – இளிவு, இழவு , அசைவு, வறுமை

இளிவரல் – மூப்பு , பிணி, வருத்தம் , மென்மை

மருட்கை – புதுமை , பெருமை , சிறுமை,ஆக்கம்

அச்சம் – அணங்கு, விலங்கு , கள்வர் இறை

பெருமிதம் – கல்வி , தறுகண் , இசைமை, கொடை

வெகுளி – உறுப்பறை ,குடிகோள் ,அலை, கொலை

உவகை – செல்வம் , புலன்; , புணர்வு , விளையாட்டு

என வகைப்படுத்தப்பட்டுள்ளன இம்மெய்ப்பாடுகள் அகவாழ்விற்கு பெரிதும் பொருந்தும் எனினும் புறத்திற்கு உரிய மெய்ப்பாடுகளாகவும் இவை காட்டப்படுகின்றன.

### 1.3. எண்வகை மெய்ப்பாட்டின் வகையும், தொகையும்:

தொல்காப்பியர் இரண்டு திணைக்கும் பொதுவாக முதலில் எண்வகையாகப் பாகுபடுத்தி, அதன்பின் சுவை தோன்றும் காரணங்களாக 32 கூறுகிறார். அதன் பின் மற்றொரு முப்பத்திரண்டு காரணங்களை கூறி இவற்றாலும் மெய்ப்பாடு தோன்றும் என்று கூறுகிறார். தொல்காப்பியர் முதல் நூற்பாவில் மெய்ப்பாட்டின் தொகையையும், விரியினையும் கூறுகிறார்;. இதனை,

“ பண்ணைத் தோன்றிய எண்ணாக்கு”[23]

மெய்ப்பாடு என்பது பண்ணை என்பதன் வழியாகத் தோன்றக் கூடியது. அவைமுப்பத்திரண்டு காரணங்களால் தோன்றுகின்றன. அவற்றால் கருதப்பெறும் பொருட்ப்பகுதி பதினாறாக அமைகிறது “நாடகத்தில் தோன்றியது என்றோ கூத்துள் தோன்றியது என்றோ கூறாமல்

‘பண்ணைத்தோன்றிய’ என்கிறார் தொல்காப்பியர், கூத்துள் தோன்றியதேயாயினும் இங்கு பேசப்படுவது செய்யுளுள் இலக்கியத்துள் அமையும் மெய்ப்பாடு பற்றிய என்பதில் எவ்வித ஐயமும் இல்லை என்கிறார் தமிழண்ணல்’’[24]

சுவை அறிதல் மனித இனத்திற்கே உரிய தனிச்சிறப்பாகும் இதனால் தான் பிற உயிர்களுக்குரிய நாச்சுவையிலிருந்து பிரித்துக் கூறப்பட்டன எனலாம். இவ்வாறு கண்ணாலும்,செவியினாலும் நுண்ணிதின் உணரப்பெறும் எண்சுவைகளும் சுவைக்கப்படும் பொருள், சுவை, குறிப்பு, விறல் என்ற வகைகளால் முப்பத்திரண்டாகும்.

1. சுவையும் பொருளும், பொறியும் வேறு வேறு நின்ற வழி அவை பிறக்காது ஆகவே, அவ்விரண்டையும் ஒரு கூறாக்கிக் கொள்ளலாம்.
2. மனக்குறிப்பு இன்றி சத்துவம் தோன்றாது, ஆகவே இவ்விரண்டையும் ஒரு கூறாக்கிக் கொள்ளலாம்.

எட்டு முப்பத்திரண்டாதல்

**32–16** ஆதல்

| | | |
|---|---|---|
| சுவைப்பொருள் | 1 | 1 |
| பொறி உணர்வு | 1 | |
| சத்துவம் | 1 | 1 |
| மனக்குறிப்பு | 1 | |

மெய்ப்பாடுகள் x 8 x 8

32 x 16

எட்டு மெய்ப்பாடுகள் ஒவ்வொன்றும் நான்கு பொருள்களின் வாயிலாகத் தோன்றும். இதனால் இவ்வெட்டுவகை மெய்ப்பாடுகளும் முப்பத்திரண்டாக விரிவடையும் , இதைத்தொல்காப்பியர்,




என்று வகைப்படுத்துகிறார்

**அ.சுவை– மெய்ப்பாடு:**

சுவை என்பது காணப்படும் பொருளால் காண்போர் அகத்தின்கண் உளதாகும் மனநிலை ஆகும். அதாவது இனிப்பு, கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, உறைப்பு என்பன. 'அறுசுவைகள்' இவை நாவாகிய பொறிவழிவாக ஒருவர் உள்ளத்தே தோன்றும் உணர்ச்சிகளாகும்.

உள்ளுணர்ச்சியின்(சுவை) வெளிப்பாட்டையே மெய்ப்பாடென்பர் உள்ளுணர்ச்சிகள் யாரிடமிருந்து எத்தகைய சூழ்நிலையில் எவ்வகையில் வெளிப்படுகின்றன என்று அறிகின்றபோது ஒருவர்பால் வரும் உணர்ச்சி வெளிப்பாட்டையே மெய்ப்பாடு என்று கூறுகிறோம்.இவற்றை அ.அ மணவாளன் அவர்கள் "சங்க இலக்கியம் விளக்கப்பட்டுள்ள முறைமையை நோக்குமிடத்து ஒவ்வொரு பாடலிறுதிக் கண்ணும் உணரப்படுவதாக ஒரு சுவை அமைதலைக் காண்கிறோம் அகப்பொருட்பாடல்களில் உவகை, அழுகை,இளிவரல், மருட்கை,

நகை என்ற சுவைகளும் உணரப்படுகின்றன'' என்கிறார். மெய்ப்பாடு என்பது படிப்பவன் செயலும் கூடியவழி நடப்பது 'சுவை' என்பது அங்ஙனம் மெய்ப்பாடு தோன்றியபின் பெருகிப்பாயும் உணர்வாகும்.''[25]

மெய்ப்பாட்டினை வடமொழியாளர்கள் 'பாவம்', 'சத்துவம்' என்பர். தமிழில் 'சுவை' எனவும் 'மெய்ப்பாட்டுக் குறிப்பு' எனவும் வழங்கப்படுகிறது. தமிழிலும் வடமொழியிலும, ''நகை(ஹாஸ்யம்);, அழுகை (அற்புதம்), அச்சம் (பயாணம்) இளிவரல்(பீபத்ஹம்), மருட்கை(அற்புதம்), அச்சம் (பயாணம்), பெருமிதம் (வீரம்), வெகுளி (ரௌத்திரம்), உவகை (சிருங்காரம்)''[26] இவ்வாறு குறிப்பிடப்படுகிறது.

**1. ஆ.மெய்ப்பாடும் சுவையும்**

மெய்ப்பாடுகள் பொறிவாயிலாகப் பெறும் அக உணர்வுகளோடும், உணர்ச்சிகளோடும் புற உடல் கூறுகளோடும் நெருங்கிய தொடர்புடையன இவை தோன்றுவதற்கு அடிப்படையான உணர்ச்சிகள் முக்கியமாகின்றன. அதாவது மனம் உணர்ந்ததை(சுவை) புறத்தார்க்கு மெய்யின்கண் புலப்படுத்துவது மெய்ப்பாடு ஆகும். இயற்கையாக எழும் உள்ளத்துணர்ச்சிகளின் உண்மை வெளிப்பாடே மெய்ப்பாடாகும்.

'சுவையணி'–பற்றி தண்டியலங்காரம் என்னும் நூலில்

''உள்நிகழ் தன்மை புறத்துத் தோன்ற
எண்வகை மெய்ப்பாட்டின் இயல்வது சுவையே''[28]

என்ற பாடலுக்கு அணி செய்கின்ற சுவையணி நிலையில் வைத்து குறிப்பிடுகிறது. எட்டு வகைப்பட்ட மெய்ப்பாட்டாலும் நடப்பது சுவையென்னும் அலங்காரம் என்கிறார்.

அந்த எட்டு வகை மெய்ப்பாடுகள் எவை என்பதை,

''அவை தாம்

வீரம் அச்சம் இழிப்பொடு வியப்பே

காமம் அவலம் உருத்திரம் நகையே''[29]

இவற்றை

| தொல்காப்பியம் | | தண்டியலங்காரம் |
|---|---|---|
| நகை | – | நகை |
| அழுகை | – | அவலம் |
| இளிவரல் | – | இழிப்பு |
| மருட்கை | – | வியப்பு |
| அச்சம் | – | அச்சம் |
| வெகுளி | – | உருத்திரம் |
| பெருமிதம் | – | வீரம் |
| உவகை | – | காமம் |

தொல்காப்பியம் கூறும் மெய்ப்பாட்டிற்கான நிலைக்களன்கள் தண்டியில் விரிவாகப் பேசப்படவில்லை. இரண்டு நூலிலும் மெய்ப்பாடுகள் செய்யுள் உறுப்புகளாக கூறப்பட்டுள்ளன. வடமொழியை அடியொற்றி தண்டி எழுதப்பட்டாலும் 'சாந்தம்' எனும் தொல்காப்பியத்தை அடியொற்றியே குறிப்பிடுகிறது. எனவே,'சுவை' என்பது மனத்தில் எஞ்சி நிற்கும் உணர்வு என்பதும், அவவுணர்வு மெய்யின்கண் புலப்படுவது மெய்ப்பாடு என்பதும்

அறியப்படுகிறது. எனவே, சுவையும், மெய்ப்பாடும் வேறுவேறானவை என்றாலும் ஒன்றுக்கொன்று தொடர்புடையது. மெய்ப்பாடு தோன்றுவதற்கு அடிப்படை காரணமாக ‘சுவை’ அமைகின்றதென்பதும் இவற்றின்மூலம் அறியலாம்.

**1.5.மெய்ப்பாடுகள் வைப்பு முறை:**

நகை, அழுகை முதலான மெய்ப்பாடுகளின் வைப்புமுறை குறிப்பிடத்தக்கது விளையாட்டு பொருளாகிய நகை முன் வைக்கப்பட்டது. அழுகையோடு தொடர்புடையது என்பதால் இளிவரல் சுவை அதன்பின் வைக்கப்பட்டது. அச்சத்திற்கு மறுதலை வீரம் ஆகும். எனவே, அதன் பின் வீரம் வைக்கப்பட்டது. வெகுளிக்கு மாறுபாடாக இருப்பதாலும் எல்லாவற்றிலும் படிப்பதற்கு சிறந்ததாக இருப்பதாலும் முதலிற் சொல்லப்பட்ட நகைக்கு இயைபுடைத்து ஆதலாலும் உவகை இறுதியில் வைக்கப்பட்டது.

**அ.நகை**(Humar)

மனிதர்களுக்கே உரிய சிறந்த பண்புகளில் ஒன்று நகை. சிரிக்கத் தெரிந்தவன் மனிதன் எனவே, ‘‘நகையாகிய சிரிப்பு மனிதவர்க்கத்திற்கே உரிய சிறப்பான மெய்ப்பாடு ஆயத்தாரோடு கூடிமகிழும் இடத்து நகை தோன்றுதல் இயற்கை அதனால் தான் பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளுள் நகை முதலாக அமைகின்றது’’[22]

க.வெள்ளைவாரணார்,நகையைப் பற்றி ‘‘நகைச்சுவைக்குரிய பொருளைப் புறத்தே கண்டு அதன் வழியே தோன்றும் முறுவல் நகையுடன் அகத்தே மன மலர்ச்சியாகிய மகிழ்ச்சி தோன்றுமாறு வருவது நகை என்னும் மெய்ப்பாடாகும்’’[23]

**அகராதி விளக்கம்:**

நகை எனும் சொல்லுக்கு ‘‘சிரிப்பு, இன்பம், மதிப்பு, இளிப்பு, இகழ்ச்சி, நட்பு, விளையாட்டு, மலர், பல், பல்லீறு,முத்து, அணிகலன், சிரியென்னேவல் என்ற பொருள்களைத் திருமகள் தமிழகராதி தருகின்றது. நகை என்ற சொல்லுக்கு, ‘‘ஆபரணம், இகழ்ச்சி, மகிழ்ச்சி, தோன்றக்கூறுமலங்காரம், இன்பம், எயிறு, ஒளி, களிப்பு, சிரிப்பு, நகையென்னேவல், பல்,பூமொட்டு, மலர்ச்சி, விளையாட்டு’’[30] என்பன மதுரைத் தமிழ்ப் பேரகராதிதரும் விளக்கமாகும்.

நகை எனும் சொல்லுக்கு தமிழிசைக் கலைக்களஞ்சியம் ‘‘நகை என்பது சிரிப்பு, ஒலியில்லா நகைத்தல் வறுமாறு முறுவலித்தல், புன்னைகைத்தல், முகமலர்தல்,முகம் ஒளிசெய்தல் முதலியன என பல வகையின’’[31] என்பன விளக்கமாகும்

**1.நகைதோன்றும் இடங்கள்:**

நகை வெளிப்படுவதற்கான காரணங்களைத் தொல்காப்பியர்,

‘‘எள்ளல் இளமை பேதைமை மடனென்று

உள்ளப்பட்ட நகைநான்கென்ப’’[32]

எனக் குறிப்பிடுகின்றது.

நகை தோன்றும் நான்கு இடங்களை குறிப்பிடுகின்றார். இவற்றுள், எள்ளல் என்பது தான் பிறரை எள்ளி நகுதலும் பிறரால் எள்ளப்பட்ட வழி தான் நகுதலும் என இரண்டாகும். இளமை என்பது தான் இளமையால் பிறரை நகுதலும் பிறரிளமை கண்டு தான் நகுதலும் என இரண்டாம்.பேதைமை என்பது அறிவின்மை. இது தன் பேதைமையால் நகுதலும், பிறன் பேதைமையால்

நகுதலும் என இரண்டு வகையாகும் மடமை என்பதும், தன் மடமையால் நகுதலும் , பிறன் மடமையால் நகுதலும் என இரண்டாகும்.

பேதைமை என்பதற்கும், மடம் என்பதற்கும் வேறுபாடு என்னவெனின், பேதைமை (stupidity) என்பது அறிவு இல்லாமை, உய்த்துணராமை, ஒரு செயல் செய்தற்குரிய அறிவின்மை, மடம் என்பது அறியாமை (Innocence) ஒரு செயல் பற்றிய அறிவிருந்தும் செய்வகை அறியாமை, ‘‘இதற்;கும் நகைச்சுவைக்கும் காரணமாகிய எள்ளல்,இளமை,பேதைமை,மடம் பொருள்களின் நிலைக்களம் பிறர்கண் தோன்றியது என்றோ தன் கண் தோன்றியது என்றோ கூறபடாது, பொதுப்பட நின்றமையால் இவற்றுக்குப் பிறர்கண்ணும் தன் கண்ணும் என இரண்டு நிலைக்களமாதல் கொள்க’’[33] எனக் க.வெள்ளைவாரணன் விளக்குகிறார். உள்ளப்பட்ட நகை என நூற்பாவில் வலியுறுத்தித் தொல்காப்பியர் கூறுவதால் தோற்றத்திற்குரிய காரணங்களாக அகத்தே நிகழும் எள்ளல், இளமை,பேதைமை, மடன் என்னும் இந்நால்வகை மனக்குறிப்புகளும் நுண்ணியதாகப் புலப்படுவதற்குரிய நிலையில் உள்ளன என்பது புலப்படும்.

**எள்ளல் பற்றி வரும் நகை**

தலைவன் பரத்தையரோடு நட்புக்கொண்டிருந்தான் அந்தநட்பிற்குத் துணை நின்ற பாணன் தலைவி மனைக்கு எதிராகச் சென்றான் அப்பொழுது தெருவில் பசுவிரட்ட தன் மனையிடத்து வந்தவனிடம். உங்கள் மனை இதுவன்று அதுவாகும் எனத் தலைவி இகழ்ந்து நகையாடியதைத் தோழியிடம் கூறுவதாக அமைந்தது இப்பாடல்அடிகள்,

''நகை ஆகின்றே தோழி ! நெடுநல்

மணி கண்டன்ன துணி கயம் துளங்க

இரும்பு இயன்றன்ன கருங்கோட்டு எருமை,

ஆம்பல் மெல்அடை கிழிய,குவளைக்

கூம்பு விடு பல் மலர் மாந்தி, கரைய

.........................................................

எம்மனைப் புகு தந்தோனே அதுகண்டு

மெய்ம்மலி உவகை மறையினென்எதிர் சென்று

'இம்மனை அன்று, 'அஃது உம்மனை' என்ற

என்னும் தன்னும் நோக்கி,

மம்மர் நெஞ்சினோன் தொழுது நின்றதுவே''

எனும் இப்பாடலில் பரத்தை வீட்டில் நுழைந்து பழகிய பாணன் பசு விரட்டியதால் தலைவியின் மனையிடத்து ஒதுங்குகின்றான். அச்செயலைத் தலைவி 'நகையாகின்ற தோழி' என்றமையால் இது எள்ளல் காரணமாகப் பிறந்த நகையாகும்.

''நகை நணி யுடைத்தால் தோழி தகைமிக்க

——————————————————————

பின்னுப் புறந்தாழக் கொன்னே சூட்டி

நல்வரல் இளமுலை நோக்கி நெடிது நினைத்து

நில்லாது பெயர்ந்தன்ன ஒருவன் அதற்கே''

வண்டல் விளையாடிக் கொண்டிருக்கும் போது தலைவன் அரும்பினால் கட்டிய கண்ணியை தலைவியின் கூந்தலில் சூட்டி அவளது அழகிய இளமுலைகளை நோக்கி நெடுநேரம் ஆலோசித்து பின் நில்லாது போயினான்.

இது பெரிதும் நகைக்கத்தக்கதாயிருந்து என கூறுவதிலிருந்து இப்பாடலில் தலைவனின் செய்கை நகை உணர்வு தோன்றுமாறு இருந்தாகக் தோழி கூறுகிறாள்.

**1. இளமை பற்றி வரும் நகை**

எல்லா நலனும் பெற்றிருக்கும் தலைவியின் காதலைப் பெறமுயல்கிறான் தலைவன். இடையில் நிற்கும் தோழி கிடைத்தற்கரியவளாகிய இவளின் காதலை அடைதற்குத் தகுதியுள்ளவனோ நீ என்னும் பொருள்படி நகைத்து நின்றான் எனவே தோழி தன் இளமைத் தன்மையினால் தலைவனை நகைப்பது என்ற வகையிலமைந்த அப்பாடல்

''தகாஅது வாழியே குறுமகள் நகா அது
உரைமதி உடையுலமன் உள்ளம் சாரல்''[37]

என்ற அடிகள், தோழியின் நகையினைப் பெறாத தலைவன் கூற்றாக அமைந்துள்ளன.

தலைவியொருத்தி தன் குழந்தையை மடியில் வைத்து அவனுடைய தந்தையின் குறைகளைக் கூறி அவ்வாறு ஒழுகுவாயாக! என்றும் கூறுகின்றாள். இந்நிலையின் தலைவன் தலைவியின் பின்புறம் வந்து மறைந்து நிற்கின்றான் தந்தை நிற்பதைக் குழந்தை பார்த்துவிட்டு, உடனே நகைக்கின்றது. பின் உண்மையுணர்ந்த தலைவி, குழந்தையின் இளமைச் செயல் கண்டு தானும் நகைக்கின்றாள்.

'' திறனல்ல யாங்கழற யாரை நகும்இம்
மகனல்லான் பெற்ற மகன் ?''[38]

என்ற தலைவியின் கூற்றாக வந்த கலியடிகளில் தலைவி கூறி நகைப்பதால் இது குழந்தையின் இளமை கண்டு தாய் நகைப்பதாகும்.

**பேதைமை பற்றி வரும் நகை**

பேதைமை என்பது ஒரு செயல் செய்வதற்கான அறிவின்மை. ஒரு தலைவி தன் தாய் தன் மீது கோபம் கொள்ளுவதன் காரணத்தைத் தன் பேதைமையால் உணராது அது பற்றி நகைக்கின்றாள்.

“ நகை நீ கேளாய் தோழி அல்கல்

வயநாய் எறிந்து வன்புறழ் தழீஇ”[39]

என்ற அகப்பாட்டடிகளில் தலைவி தன் பேதைமையால் தன்தாய் தன் மீது கொள்ளும் கோபத்தை பொருளாகத் தாயின் உணராது சிரித்தத் தோழிக்கு கூறியதால் இது தன் பேதைமைப் பொருட்டு வரும் நகையாகும்.

**மடமை பற்றி வரும் நகை:**

ஒரு செயலை செய்வதற்குரிய அறிவிருந்தும் அவற்றை செய்யாமையே மடமை ஆகும்.

‘சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டில்

தெற்றென இறீஇ யரோஜய மற்றுயாம்

நும்மொடு நக்க வால்வெள் ளெயிற்றே”[40]

என்று குறுந்தொகையடிகளால், தலைவி தன் மடத்தால் தலைவன் உரையை மெய்யெனக் கொண்டு நகைத்ததை அறியலாம்.

**அழுகை(cry)**

மனித மனத்தில் துன்பம் அதிகமாகும் காலங்களில் (density of sorrow) அழுகை பிறக்கின்றது. பலர், அழுகையின் மூலம் தன் தேவைகளைப்

பூர்த்திசெய்து கொள்கின்றனர். இவ்வுலக மக்கள் தங்கள் வாழ்வின் ஏதோவொரு சூழ்நிலையில் இவ்வுணர்க்கு ஆட்பட்டவர்கள் ஆவர். மனிதனின் பிறப்பில் தொடங்கி இறப்பில் முடிவடைகிறது அழுகையைத் தொல்காப்பியர் எட்டு மெய்ப்பாட்டினுள் ஒன்றாகக் குறிப்பிடுவார்.

**அகராதி விளக்கம்:**

அழுகை என்பதற்குத் திருமகள் தமிழகராதி, நெஞ்சின் துயர் தாளாது கண்களில் நீர் சொரிதல்''[41] என்கிறது.

''துன்ப உணர்ச்சியால் கண்ணீர் வடிக்கை:[42] என்கிறது பெருஞ்சொல்லகராதி.

அழுகைக்கு ''எட்டுவகை மெய்ப்பாட்டினுள் ஒன்றான அவலம், அழுதல்''[43] எனும் விளக்கத்தை வரலாற்றுமுறைத் தமிழ் இலக்கியப் பேரகராதி காட்டுகின்றது.

**அழுகை பிறக்கும் இடங்கள்:**

இழிவு, இழவு, அசைவு, வறுமை எனும் நான்கு காரணங்களால் அழுகை பிறக்கும் எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது என்பது அவலம் படிப்போரது உள்ளத்தை உருக்கும் தன்மையுடையதாய் அமைவது இது

''இழிவே இழவே அசைவே வறுமையென
விளிவில் கொள்கை அழுகை நான்கே''[44]

எனும் நூற்பா வழி அறியமுடிகிறது

இழிவு என்பதைப் பேராசிரியர் ‘இளிவு’ என்பர் இளிவென்பது பிறரான் இகழப்பட்டு எளியனாதல். இழவென்பது தந்தையுந் தாயுமுதலாகிய சுற்றத்தாரையும் இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலியவற்றையும் இழத்தல். அசைவென்பது பண்டை நிலைமை கெட்டு வேறொருவராகி வருந்துதல் வறுமை என்பது போகந்துயக்கப் பெறாத பற்றுள்ளம்[45] என்று கூறுவர்.

வெள்ளைவாரணன், “இழிவு என்பது பிறரால் இகழப்பட்டு எளியராகிய தாழ்வு நிலை. இழிவு எனப்பாடங் கொள்வார் இளம்பூரணர் இழிவு என்பது தந்தை தாய் முதலிய சுற்றத்தாரையும் இன்பம் பயக்கும் நிகழ்ச்சி முதலியவற்றையும் இழத்தல், அசைவு என்பது முன்னைய நல்ல நிலைமை கெட்டு வேறுபட்டு வருந்துதல் வறுமை என்பது போகந்துயக்கப் பெறாத பற்றுள்ளம்”[46] என்கிறார்.

இழிவு பற்றி வரும் அழுகை:

“கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பின்
—————————————————————
என்ன கடத்தளோ மற்றே ? தன்முகத்து
எழுதுஎழில் சிதைய அழுதனள் ஏங்கி”[50]

எனும் பாடலில், தன்னைத் தலைவன் எள்ளித்தன் தொடர்பினை விட்டு விட்டான் என்பது கருதிப் பரத்தை தன் முகத்தினது அழகு கெடுமாறு ஏக்கமுற்று அழுகின்றாள். பலமுறை தன் கைகளை நெறித்துக் கொண்டமையாலும் சிவந்த விரல்களையும் திருகிக் கடித்தமையால் முனை மழுங்கிய பற்களையும் உடையவளாய் காணப்படுகின்றாள் எனவே,

பழிதூற்றுதலால் பரத்தைக்குத் தன்கண் தோன்றிய இளிவு காரணமாக அழுகைப் பிறந்;துள்ளது.

**இழவு பற்றி வரும் அழுகை:**

யாதானும் ஒன்றை இழப்பதினாலும் 'அழுகை' ஏற்படும். தலைவன் பொருள் ஈட்டப் பிரிந்தமையால் தலைவி பெரிதும் வருந்தினாள். தான் வருவதாகக் குறித்த பருவம் வந்துத் தலைவன் வராததால் தலைவி, மேகத்திடம், "மேகமே நின்குரல் பாம்பினை அச்சுறுத்துமேயன்றித் தலைவர் மனதைக் கனியச் செய்யவில்லை. ஆகையால் நின்குரல் இனிதன்று என்று மனமழிந்து கூறியது.

''மாலை அந்தி, மால் அதா நண்ணிய
பருவம் செய்த கருவி மாமழை!
அவர் நிலை அறியுமோ, ஈங்கு, என வருதல்
சான்றோர்ப் புரைவதோ அன்றே, மான்று உடன'';[51]

மழை தலைவனை அழைத்துவரும் என்று தலைவி எண்ணினாள் ஆனால், மழைமேகம் 'அவர்நிலை அறிவாயோ' என்பது போல் தனித்து வந்து மழை பெய்து தலைவியின் துயரை மிகுவித்தது தலைவிக்கு பிரிவு ஆற்றாமையால் அழுகை தோன்றியுள்ளது. இவ்வழுகை இன்பம் பயக்கும் நுகர்ச்சியை இழந்தவிடத்துப் பிறந்ததாகும்.

**அசைவு பற்றி வரும் அழுகை:**

அசைவு என்பது தளர்ச்சியாகும், மனமானது தளர்த்தல் தன்னிலையிலிருந்து தாழ்ந்து போதலைக் குறிக்கும். அசைவென்பது பண்டை

நிலைமை கெட்டு வேறொருவராகி வருந்துதல் என்பது உரையாசிரியர்கள் பொதுவான கருத்தாகவுள்ளது.

“தொல்கவின் தொலைய, தோள்றலம்சா அய,
நல்கார் நீத்தனர் ஆயினும், நல்குவர்,
நட்டனர், வாழி! தோழி!”[52]

என்றபாடலில் , தலைவி தன் பழைய அழகு தொலையவும், என் தோள் நலம் கெடவும் இப்போது அருள் செய்யாது என்தலைவர் கைவிட்டாரெனினும் அவர் அருள் செய்வார் என்பது உறுதி என்று தலைவி தன் பழைய நிலை பற்றித் தோழியிடம் கூறுவதால் தலைவியின் மனத்தளர்ச்சி காரணமாக ‘அழுகை’ தோன்றுவதைக் காணலாம்.

மற்றொரு அகநானூற்றுப் பாடலில்,

“வருதும் என்ற நாளும் பொய்த்தன
அரியேர் உண்கண் நீரும் நில்லா”[52]

எனும் பாடலடிகள், வினைமேற் சென்ற தலைவனின் வருகை பொய்த்தமையால் தலைவிக்கு மனத்தளர்ச்சி காரணமாக அழுகை மெய்ப்பாடு தோன்றியுள்ளது.

**வறுமை பற்றி வரும் அழுகை:**

வறுமை என்பது நல்குரவாகும் பொருள் அற்ற நிலை என்பர் பேராசிரியர் ‘வறுமையென்பது போகந்துயக்கப் பெறாத பற்றுள்ளம்’ என்பது குறிப்பிடுவதன் மூலம், பொருளில்லாத நிலையே வறுமை என்பதை உணரமுடிகிறது.

''இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை

சுவைத்தொறும் அழூஉம்தன் மகத்துமுகன் நோக்கி

நீரோடு நிறைந்த ஈரிதழ் மனழக்கணென்''[54]

என்ற பாடலில், பாலில்லாத மார்பினைச் சுவைத்துப் பால் பெறாமையால் அழுகின்ற தன் குழந்தையின் முகம்பார்த்து நீர் நிறைந்த கண்களுடன் இருக்கும் மனையோள்'' என்று கூறப்படுவதால் வறுமையின் காரணமாக ஏற்பட்ட அவலம் எனலாம்.

## இ.இளிவரல்(Disguest)

எண்வகை மெய்ப்பாட்டினுள் மூன்றாவது மெய்ப்பாடாக இளிவரலைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

**அகராதி விளக்கம்:**

இளிவரல் என்ற சொல்லுக்கு, ''திருமகள் தமிழகராதி இழிவு, இழிப்புச்சுவை''[55] என்ற பொருளைத் தருகிறது.

இளிவரலுக்கு இழிவு''[56] என்ற பொருளை வரலாற்றுமுறைத் தமிழ் இலக்கியப் பேரகராதி சுட்டுகிறது. இழிவு என்பதற்குக், ''குறைதல், தாழ்வு, தீட்டு, பள்ளம் , கேடு, இகழ்ச்சி''[57] எனும் பொருளைக் கொடுக்கிறது.

**இளிவரல் தோன்றும் இடங்கள்:**

மூப்பு, பிணி, வருத்தம், மென்மை எனும் நான்கு பொருண்மையால் இளிவரல் பிறக்கும் இதனை,

''மூப்பு பிணியே வருத்த மென்மையொடு

யாப்பு வந்த இளிவரல் நான்கே''[58]

இங்கு மூப்பு என்பது முதுமை காரணமாகத் தோன்றும் தளர்ச்சி. பிணி என்பது நோய், வருத்தம் என்பது பயன்விளையாத வீண் முயற்சி, மென்மை என்பது எளிமை, இயலாமை, ஆற்றலும் பொருளும் இன்றி எளியவராகும் நிலைமை என்று குறிப்பிடலாம்.

**மூப்பு பற்றி வரும் இளிவரல்**

மூப்பு என்பது முதுமை காரணமாகத் தோன்றும் தளர்ச்சி என்றும் பிணி என்பது தீராநோய் என்றும் வருத்தம் என்பது பயன்தராத வீண் முயற்சி என்றும் மென்மை என்பது ஆற்றலும் பொருளுமின்றி எளியராம் நிலைமை''[59] எனக் க. வெள்ளைவாரணன் கூறுகிறார்.

பரத்தையரிடமிருந்து பிரிந்து வந்த தலைவனிடத்து தலைவி உரைப்பதாக,

‘‘ஆக வனமுலை யரும்பிய சுணங்கின்
மாசில் கற்பின் புதல்வன் தாய்என
மாயப் பொய்ம் மொழி சாயினை பயிற்றி எம்
முதுமை யெள்ளல்அஃது அமைகுந்;தில்ல !''[60]

தலைவன் ‘மாசில் கற்பின் புதல்வன் தாயெனக்' கூறியதைத் தலைவி அம்முதுமைக்குப் பொருந்துவதாக்கூறி இளமை நீங்கிச் சென்றது என உரைக்கின்றாள். இது மூப்பின் காரணமாகத் தோன்றிய ‘இளிவரல்' மெய்ப்பாடாகும்.

பின்னாளில் வந்த நாலடியார் இந்த நிலைக்களனை விளக்கும் வண்ணம் இங்குக் குறிப்பிடுகிறார்.

''தாழாத் தளராத் தலைநடுங்காத் தண் குன்றா
வீழா இறக்கும் இவள் மாட்டும் காழ்இலா
மம்மர் கொள் மாந்தர்க்கு அணங்காகும் தன்கைக்கோல்
அம்மானைக்கோல் ஆகிய ஞான்று''[61]

என்ற பாடலில் மூப்பின் இயல்புகள் கூறப்பட்டுள்ளன.

பிணிபற்றி வரும் இளிவரல்:

''மாசு அறக் கழீஇய யானை போல்ப்
பெரும்பெயல் உழ்ந்த இரும்பிணர்த் துறுகல்
பைதல் ஒரு தலைச் சேக்கும் நாடன்
நோய் தந்தனனே – தோழி!
பசலை ஆர்ந்த ,நம் குவளை அம்கண்ணே''[62]

என்று குறுந்தொகைபாடல்களில் தலைவன் பிரிவால் தலைவிக்கு ஏற்பட்ட பசலைநோய் இங்குக் குறிக்கப்படுகின்றது. யானை, தன் தலையிலும், உடலிலும் தானே புழுதியை வாரி இறைத்துக் கொள்ளும். அதன் உடலில் உள்ள புழுதிமுற்றிலுமாகக் கழுவப் பெற்றமைபோல, பெருமழை பெய்து, துறுகல்லின் மாசெல்லாம் அகன்றது. அதுபோல பிறிவாற்றாமையால் தோர்ந்தகாமநோய், தலைவியின் உடல் மெலிவிற்க்கு காரணமாயிற்று தலைவனைப் பிரிவதற்கு முன் குவளை போன்றிருந்த கண்கள் அவன் பிரிவிற்குப்பின் பசலையால் மூடப்பட்டன. துறுகல்லில் உள்ளமாசு நீரால் கழுவப் பெற்றது. ஆனால், தலைவன் பிரிவால் கண்களில் பசலை வளர்வதாயிற்று என்று 'பிணி' பற்றி வரும் மெய்ப்பாட்டினை அறியலாம்.

**வருத்தம் பற்றி வரும் இளிவரல்:**

வீண்முயற்சியால் ஏற்படும் மனஉணர்ச்சி வருத்தம் என்பது இடுக்கன், துன்பம் என்று பொருள்படும், அதாவது பயன் விளையாத வீண்முயற்சி என்று

குறிப்பிடுவர். வினைமுற்றி மீளும் தலைமகன் தேர்பாகனுக்குச் சொல்வதாக அமைந்த ஒரு பாடல்,

"உடம்பு கொலீஇ, வரிநுணல் அகழ்ந்து
நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல்கெண்டி"[63]

என்ற இப்பாடலில் எடுத்தகாரியம் வெற்றி பெற்று மீளும் தலைமகன் தேர்ப்பாகனிடம், தன் நெஞ்சத்திலே என்னை நினைத்து வாழும் தலைவியின் ஊர் காட்டின் கண்ணுள்ள நாட்டின் உள்ளது. என் காதலி நான் விரைவில் அவளிடம் செல்லாவிட்டால் அவள் மிகவும் வருந்துவாள் எனவே பாகனே தேரை விரைவில் ஒட்டுவாயாக என்கிறான். இது வருத்தம் எனும் மெய்ப்பாட்டில் அமைந்துள்ளது.

**மென்மை:**

மென்மை என்பது எளிமை அதாவது ஆற்றலும், பொருளும் இன்றி எளியராகிய நிலைமை 'மென்மை' என்பதற்கு 'நல்குரவு' என்று பொருள் கூறுவார் இளம்பூரணர். மென்மை என்பது 'மிருதுவான' என்னும் பொருளிலல்லாது இளிவரலுக்குரிய பொருளில் கையாளப்பட்டுள்ளது.

"எவ்வி இழந்த வறுமையர் பாணர்
பூஇல் வறுந்தலை போலப் புல்லென்று"[64]

என்ற குறுந்தொகைப், பாடலடிகளில், 'எவ்வி' என்னும் வள்ளல் இறந்தமையால் பாணர்கள் வறுமையுடையராயினர் அவர்களுடைய பொற்பூ அணியப் பெறாத வறிய தலையைப் போல, நீயும் பொலிவிழந்து வருந்துவாயாக, என்று பாணர்களின் வறுமை நிலையையை கூறுமிடத்து இளிவு என்னும் மெய்ப்பாடு தோன்றுகிறது.

### ஈ.மருட்கை (Surprise)

மருட்கை என்பது வியப்புத் தோன்றுமிடத்து உள்ளத்தில் பிறக்கும் உணர்வாகும். தொல்க்காப்பியர் எண்வகை மெய்ப்பாட்டினுள் நான்காவதாகக் குறிப்பிடுகிறார்.

**அகராதி விளக்கம்**

மருட்கை எனும் சொல்லுக்குத் தமிழ் இலக்கணப் பேரகராதி,''வியப்பைத் தோற்றுவிக்கும் பொருள்களைக் கண்டவழி மனதில் விளையும் சுவை''[65] எனப் பொருள் கூறுகிறது.

**மருட்கை தோன்றுமிடங்கள்:**

''புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே''[66]

எனத் தொல்காப்பியம் மொழிகின்றது. எனவே, புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் என்ற நான்கின் மூலம் மருட்கை பிறக்கும்.

''புதுமை– புதிதாகக் கண்டது. பெருமை– மிகப்பெரியது சிறுமை மிக நுண்ணியது. ஆக்கம்– ஒன்று திரிந்த வேறு ஒன்றாகியது. உலக வழக்கினுள் நின்றவாறு நில்லாமல் அறிவைத் திரித்து வேறுபடுத்துவது வியப் பென்னும்''[67] என்று க வெள்ளைவாரணன் குறிப்பிடுகிறார். ஏதாவது புதிதாக ஒன்றை கண்டபோது ஏற்படும் ஒரு வகை உணர்ச்சி. புதிதான இசையை கேட்டதனால் மந்திக்கூட்டம் வியப்பு தோன்றுகிறது.

ஆடுகின்ற மூங்கிலிடத்தே வண்டு துளைத்த துளையிடத்தே மேல் காற்று வீசுமிடத்துப் பிறக்கும் ஓசை குழலிடையாகவும், ஒலிக்கின்ற இனிய

அருவியில் குளிர்ந்த நீரின் பலமத்தளங்கள் ஒன்று சேர்ந்தொலிக்கும் இசையாகவும்,மான்களின் கூட்டம் தாழ ஒலிக்கும் கடுங்குரல் பெருவங்கியத்தின் இசையாகவும். மலைச்சாரலிலுள்ள பூக்களிடத்து வண்டுகள் ஒலிக்கும் ஓசையாழ் இசையாகவும் இருந்தன. இவ்வினிய பல ஓசைகளைக் கேட்ட மந்திக் கூட்டம் வியந்தன. இதனைக் கபிலர்,

"ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கின்;

------------------------------

இன்பல் இமிழ்இசை கேட்டுக் கவிசிறந்து

மந்தி நல்லவை மருள்வன நோக்க"[68]

என்ற அடிகளில் புலப்படுத்துகிறார். இவ்வியப்பு புதுமையிடத்துப் பிறந்ததாகும்.

''தேர்திகழ் வறும் புலம் துழைஇ, நீர் நய்றிது

பதுக்கை நீழல் ஒதுக்கு இடம் பெறாஅ

அருஞ்சுரக் கவலை வருதலின், வருந்திய

நமக்கும் அரிய ஆயின, அமைத்தேள்

மாண்புடைக் குறுமகள் நீங்கு

யாங்கு வந்தனைகொல்''

என்ற நற்றிணை பாடலடிகளில், காதலியைப் பற்றி நினைவுடன் பொருள் வயிற் பிரிந்த தலைவன் சுரத்தின் வழியில் செல்கின்றான். அங்கு உறங்கும் அவன் விழித்ததும் தலைவியின் உருவம் எதிரே தோன்ற வியந்து போயினான். இவ்வியப்பு புதுமையிடத்து பிறந்ததாகும்.

**உ.பெருமை:**

தலைவனின் சிறப்பைக் கூறுதல் தலைவனின் அன்பிலே கலந்து அவனோடு பழகிய தலைவியானவள் அவ்வன்பின் பெருமையினை,

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவின்றே சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"[70]

என்று வியந்து கூறுகின்றாள் இவ்வுலக மக்களால் எல்லையற்ற பொருள்களாகக் கூறப்பட்டவை மூன்று. அவை விரிந்து பரந்த உலக நிலப்பரப்பும், ஆகாயப்பரப்பு, விரிகடல் பரப்பும் ஆகும். இந்த மூன்றும் காதல் அன்பிற்கு உவமையாகக் காட்டப்படுகிறது. இவை தன் கண் தோன்றிய பெருமைபற்றிய வியப்பு ஆகும்.

**சிறுமை:**

தலைவி தன் துயர்கண்டு இரங்காமையாலும், தன்னைவிட்டு நீங்கியமையானும், அருளும் அன்பும் நீக்கியவர் என்று தலைவி தலைவனிடம் குறைகண்டனள்.

" அருளும் அன்பும் நீங்கி துணை துறந்து,
பொருள் வயிற் பிரிவோர் உரவோர் ஆயின்
மடவம் ஆக, மடந்தை நாமே"[71]

அருளும் அன்பும் துறந்து, பொருள்ஈட்டுவதற்காக செல்லும் அறிவைவிட அருளும்; அன்பும் உடையவராகத் தன்னோடு இருந்ததை தலைவி அறிந்து தலைவனின் 'சிறுமை' எண்ணி ஆற்றியிருந்தாள்.

**ஆக்கம்:**

ஆக்கம் என்பது ஒன்று திரிந்து மற்றொன்றான நிலையைக் குறிப்பதாகும். தலைவி கற்புக்கடம் பூண்டமையைத் தன் தாய்க்கு முறைப்படி

வெளிப்படுத்திய பின்னர், தலைவன் திருமணத்திற்கு வேண்டிய செல்வத்தை ஈட்டிக் கொண்டு திரும்பினான்.

''திரை தரு முத்தம் வெண்மணல் இமைக்கும்

தண்ணம் துறைவன் வந்தென,

பொன்னினும் சிவந்தன்று, கண்டிசின்றுதலே''[72]

தலைவன் வரைவிற்குரிய ஏற்பாட்டுடன் வந்தமையால் தலைவியின் பசப்பு நீங்கிற்று என்று ஐங்குறுநூற்றின் பாடலடிகள் 'ஆக்கம்' பற்றி வந்த வியப்பினைக் குறிப்பிடுகின்றது.

**ஊ.அச்சம்**

அச்சம் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் பிறக்கின்ற உணர்வாகும். அச்ச உணர்வு மனித நடத்தைகளில் மாற்றத்தை ஏற்படுத்துகிறது. சிலருக்கு ஏற்படும் அச்சம் ஆக்கத் தடையாகவும் அமைகின்றது. மனித இனத்தில் அச்சம் என்பது அவரவரது மனத்துணிவிற்கேற்ப ஏற்படினும் பொதுவாக எல்லா மாந்தரிடமும் அவ்வுணர்ச்சி ஒரு வகையில் அமைந்திருக்கக் காணலாம். ''அச்சம் என்றவுடன் மனத்திண்மையின்றி எதனைச் செய்தற்கும் அஞ்சியொருங்கும் கோழைமை என்பது பொருளாகாது பழிபாவங்கட்டு அஞ்சும்பண்பே அச்சம் எனப்படுகிறது''[73] என அச்சம் பற்றி விளக்குகிறார். டாக்டர் ராதா தியாகராஜன்.

**அகராதி விளக்கம்**

''அச்சம் என்பது இன்னல் தரும் சூழ்நிலைகளின்''[74] காரணமாக எல்லா உயிரினங்களிடமும் இயல்பாகத் தோன்றும் மனவெழுச்சி என்று வாழ்வியல் களஞ்சியம் விளக்கம் தருகிறது.

“அச்சம் என்பது பயம், உட்கியநிலை (ஒடுங்கிய நிலை), அஞ்சுதல்– அச்சம்”[75] என தமிழிசைக் கலைக்களஞ்சியம் விளக்கம் தருகிறது.

**அச்சம் பிறக்கும் இடங்கள்**

அணங்கு, விலங்கு, கள்வர், தம் இறை எனும் நான்கிடத்து அச்ச மெய்ப்பாடு பிறக்கும், இதனைத் தொல்காப்பியம்.

“ அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்

பிணங்கல் சாலா அச்சம் நான்கே”[76]

என்கிறார்.

அணங்கு என்பன எதிர்வருபவரை வருத்தும் இயல்பினவாகிய பேய்,; பூதம் முதலியனவும் விலங்குகளாவன அரிமா(சிங்கம்) புலி முதலாகவுள்ள கொடிய விலங்குகள், கள்வர் சோர்வு பார்த்துப் பிறரை வஞ்சித்துக் கொடுந்தொழில் புரிவோர் தம் இறையென்றது தந்தை, ஆசிரியன், அரசன், வழிபடுதெய்வம் என இவ்வுரிமை முறையிற்பணி கொண்டு தம்மை ஆளும் தலைவரை அஞ்சத்தக்கனவாகிய இவற்றைக் கண்ட நிலையில் உள்ளம் நடுக்கமுற்று அஞ்சுதல் இயல்பு”[77] என க.வெள்ளைவாரணன் விளக்குகிறார்.

ஜோசப் லெடுஷ் தனது “THE EMOTIONAL BRAIN” என்ற நூலில் உயிர் போகாது தடுத்து உடலைக் காப்பதற்கு வேண்டிய தயார் நிலையில் வைக்க உதவும் அச்சமே மனிதனின் உணர்ச்சிகளில் முதன்மை பெறுகின்றது”[78] என்பதால் அச்சம் மனிதனை இயக்குகின்றது என்று கூறுகிறார்.

**அணங்கு**

அணங்காவன எதிர்ப்பட்டாரை வருத்தும் பேய், பூதம் முதலிய, திருவள்ளுவரும் ‘அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ’ என்று அணங்கு என்னும் சொல்லை பயன்படுத்தியுள்ளமை நோக்கத்தக்கதாகும்.

‘முலை முகம் செய்தன, முள்எயிறு இலங்கின,

தலை முடிசான்ற, தண் தழை உடையை,

அலமரல் ஆயமோடு யாங்கணும் படாஅல்,

மூப்புடை முது பதி தாக்கு அணங்கு உடைய’’ [79]

தலைவியை உன் தோழியருடன் எவ்விடத்தும் செல்லாதே, பழைமை வாய்ந்த இந்த இடங்களில் தாக்கி வருத்தும் தெய்வங்கள் உள்ளன எனத் தாய் அகநானூற்றில் கூறுகிறாள் இங்கு அணங்கினால் ஏற்படும் அச்சம் பற்றி கூறியிருப்பதைக் காணலாம்.

**விலங்கினால் வரும் அச்சம்**

விலங்குகளின்க மூலம் ஏற்படக் கூட பய உணர்ச்சியே அச்சம் குறிஞ்சிப்பாட்டில் தலைவியும் மதங்கொண்டு வந்த யானையைக் கண்டு அஞ்சிய நிலையில் தலைவனைச் சார்ந்தது.

‘‘ துணையறை மாலையிற் கையிணி’’[80]

என்று யானையைக் கண்டு அஞ்சிய தலைவி தலைவனின் கையை இறுகப் பற்றினாள். மேலும்,

இரவுக்குறியில் தலைவன் வரும் வழியைப் பற்றி,

‘‘விடர் முகைச் செறிந்த வெஞ்சின இரும்புலி

புகர்முக வேழம் புலம்பித்தாக்கி

குருதி பருகிய கொழுங்கவுட் கயவாய்

வேங்கை முதலொடு துடைக்கும்

ஓங்கு மலை நாடன் வரூஉம் ஆறே’’[81]

தலைவன் இரவுக் குறியில் தன்னை சந்திக்கும் வரும் வழியின் கொடுமையைத் தோழி கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

சினமுள்ள புலி, யானை போன்ற விலங்குகளின் செயல்கள் இதில் கூறப்பட்டிருப்பதால் , இதனை விலங்கு குறித்த அச்சம் எனலாம்.

**கள்வர் பற்றி வரும் அச்சம்**

கள்வர்கள் மூலம் ஏற்படக்கூடிய பயஉணர்வு தலைவி, தலைவனை கள்வனாக நினைத்து ஏற்படக்கூடிய அச்சத்தை குறிப்பிடுகின்றன.ஒரு தலைவி தலைவனை நோக்கி, நீ கண்ணை மூடித்திறப்பதற்குள் மறைந்து விடும் கள்வன். என்னை விட்டு நீங்கி விடுவாய் என்கிறாள்,

''ஒரூஉ நீயெங்கூந்தல் கொள்ளல்யாம் நின்னை
வெரூஉதுங் காணுங்கடை''[82]

என்ற கலிப்பாட்டடிகளில் அச்சம் தரத்தக்கக் கள்வன் போன்ற தலைவனைக் கண்ட தலைவி அஞ்சியமை கூறப்படுகிறது. ''அச்சம் என்பது இன்னல் தரும் சூழ்நிலைகளின் காரணமாக எல்லா உயிரினங்களிடமும் இயல்பாகத் தோன்றும் ஒரு மனவெழுச்சி இன்னலிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும் அச்சம் வழி செய்கிறது, எல்லா பருவத்தினருக்கும் அச்சம் தோன்றலாம்''[83] என வாழ்வியற் களஞ்சியம் குறிப்பிடுகிறது.

**தெய்வம் பற்றி வரும் அச்சம்**

தெய்வத்திடம் ஏற்பட்ட பயஉணர்வு. குறுந்தொகை பாடலில் தலைவி பேரச்சத்தால் அழிவது சிறப்புறக் காட்டப் பெறும். தலைவி பிரிவைத் தாங்க மாட்டாள் என்பதை உணர்ந்த தலைவன், கடம்ப மரத்தில் உறையும் கடவுள் மேல்

ஆணையிட்டு நின்னைப்பிரியேன் பிரிந்தால் பெருங்கேடு நிகழ்வதாக என்று வஞ்சினம் கூறி இருந்தான். பின்னர் தலைவியை ஏதோ காரணம் பற்றி பிரியநேர்ந்தது. தலைவி பிரிவாற்றாமையால் வருந்த, அவளது தோள் நெகிழ்ந்தது. கடம்பமலைத் தெய்வம் சினங்கொள்ளுமோ, சினங்கொண்டு அவனுக்கு ஏதேனும் தீங்கினை விளைவிக்குமோ என அஞ்சி நடுங்குகிறாள்.

**மன்ற மரா அத்த பேமுதிர் கடவுள்**

கொடியோர்த் தெறூஉம் எனப், யாவதும்
கொடியரல்லர் எம் குன்று கெழுநாடர்!
பசை இப் பசந்தன்று நுதலே
நெகிழ நெகிழ்ந்தன்று தடமென் தோளே![84]

'பேஎமுதிர் கடவுள்' என்பதால் பிறர்க்கு அச்சம் தருவதில் முதிர்ச்சி பெற்றது என்று காட்டுவாள். அகப்பொருளில் அச்சத்தின் தலைமையைக் காட்ட உதவும் சிறந்த பாடல் இது.

அணங்கு, விலங்கு, கள்வர், இறை எனும் நான்கிடத்தும் துன்பம் நேருமோ என உள்ளம் கலங்கி அஞ்சிய செய்திகளைப் பின்வரும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

''கவ்வை நல்லணங் குற்ற இவ்ஊர்க்''[85] (அகம்–20)
''அணங்குடை நெடுவரை யுச்சியின் இழிதரும்;''[86] (அகம்–22)
''உள்ளவன் அறிதல் அஞ்சி உள்ளில்''[87] (அகம்–32)
''இல்லவர் அறிதல் அஞ்சி மெல்லென''[88] (அகம்–34)

அச்ச உணர்வு மேலிட்டுக் காணும் காட்சிகள் இன்னும் பற்பல நற்றிணைப் பாடல்களில் வருவன. அகநாற்றில் 45, 59, 99, 107, 123, 129, 142, 174, 175, 181, 198, 215, 228, 231, 240, 258, 282, 300, 303, 363, 396, நற்றிணையில் , 187, 191, 218, 223, 229, 243, 249, 258, 267, 272, 285, 287, 303, 311, 323, 348, 364, 369, 372, 378 இவற்றில் காண்கிறோம் இன்னும் பல பாடல்களில் அச்ச உணர்வு வெளியாதையும் காணலாம்.

எதனை குறித்து அச்சம் கொள்கிறோம் என்பது தெரியாமலே சிலர் அச்சம் கொள்கின்றனர். இதனை இனம்புரியாத அச்சம் அல்லது பதற்ற நிலை(Anxiety) என்று கூறுவர். சிக்மண்ட் பிராய்டு (Sigmubd Freud) என்பவரின் கோட்பாட்டின்படி கசப்பான உண்மைகளும் பட்டறிவுகளும் ஒடுக்கல்களாக (Repression) நனவிலியில் (The unconscious) புதைந்து கிடக்கின்றன. இவற்றுடன் இயைபுகொண்ட வேறு ஏதாவது அனுபவம் நனவிலியில் இருந்தால் புதைக்கப்பட்ட எண்ணங்கள் மனத்தடைகலை மீறி, நனவு உள்ளத்தை ஆட்கொள்ள முற்படலாம். இவ்வாறு வெளிப்படும் ஒடுக்கப்பட்ட நினைவுகள், உள்ளத்தில் எப்பொழுதும் அச்சத்தை ஏற்படுத்தக் கூடும் இறுதியில் ஏன் இந்த அச்சம் எழுந்தது என்று தெரியாமலேயே ஒருவர் பதற்ற நிலையை அடைகிறார் இத்தகைய அச்சம், இனம் புரியாத அச்சம் ஆகும்”[89] .

**எ.பெருமிதம்(pride)**

பெருமிதம் என்பது ஆற்றல், வீரம் முதலியவற்றால் ஏற்படும் மகிழ்ச்சியான ஒரு உணர்வு. அரிய செயல்களை முயன்று ஆற்றும் வகையில் தான் ஏனையோரினும் உயர்ந்தோனாக விளங்குதல் போல் எனலாம்.

## அகராதி விளக்கம்

வரலாற்று முறைத் தமிழ் இலக்கியப் பேரகராதி ‘‘பெருமிதம் என்ற சொல்லுக்குச் ‘செருக்கு,வீரம், பேரெல்லை எண்வகை மெய்ப்பாடுகளுள் கல்வி முதலிய பெருமைகளில் மேம்படுகை, மேம்பாடு, தருக்கு, உள்ளக்களிப்பு’’[90] ஆகிய பொருள்களைத் தருகின்றது.

‘‘பெருமிதம் வீரத்தைத் தோற்றுவிக்கும் பொருள்களைக் கண்டவழி மனத்தில் விளையும் பொருளாகிய வீரம், கல்வி, தறுகண், இசைமை, கொடை என்ற நான்கு குறிப்புப் பற்றியும் பெருமிதம் பிறக்கும்’’[93] என்று தமிழ் இலக்கணப் பேரகராதி மொழிகின்றது. ‘‘மேம்பாடு உள்ளக்களிப்பு’’ என்ற விளக்கத்தைத் திருமகள் தமிழகராதி கொடுக்கின்றது.

## பெருமிதம் தோன்றும் இடங்கள்

கல்வி, தறுகண், புகழ், கொடை எனும் நான்கிடத்துப் பெருமிதம் பிறக்கும் எனத் தொல்காப்பியம் கூறுகின்றது. இதனை,

‘‘கல்வி தறுகண் புகழ்மை கொடையெனச்
சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே’’[92]

என்ற நூற்பா புலப்படுத்துகின்றது.

‘‘எல்லாரோடும் ஒப்ப நில்லாது பேரெல்லையாக நிற்றல் பெருமிதம் எனப்படும். கல்வி என்பது தவம் முதலாகிய விச்சை தறுகண் என்பது அஞ்சத்தக்கன கண்ட இடத்து அஞ்சாமை. இசைமை என்பது இன்பமும் பொருளும் இறப்பப்பயப்பினும் பழியொடுவருவன செய்யாமை. கொடை என்பது

உயிரும் உடம்பும் உறுப்பும் முதலாகிய எல்லாப் பொருளும்; கொடுத்தல்''[93] என விளக்கம் கூறுகிறார்.

கல்வி என்பது தவமுதலாகிய வித்தை, தறுகண் என்பது அஞ்சத்தக்கன கண்டு அஞ்சாமையாகிய வீரம், புகழ்மை என்பது பழியோடு செய்யாமையாகிய புகழ்ச்சி, கொடை என்பது உயிர், உடம்பு, உறுப்பு எல்லாமும் கொடுத்தல் இவை நான்கும் ஒருவர் பால் அமைந்த நிலையில் அவரிடத்தே பெருமிதம் என்னும் மெய்ப்பபாடு தோன்றுதல் இயல்பு.

**கல்வி பற்றி வரும் பெருமிதம்**

கல்வி என்பது தவம் முதலாகிய வித்தையாகும் கல்வியின் காரணமாகத் தோன்றும் பெருமிதத்தை இவ்வாறு காணலாம்.

''வல்லார்முன் சொல்வல்லேன் என்னைப் பிறர்முன்னர்க்
கல்லாமை காட்டியவளி வாழி – சான்றீர்''[94]

இது கல்வி பற்றிய பெருமிதமாகும் ''சொல்வல்லார் முன்னும் வல்லவனாகிய என்னை'' எனத் தன் பெருமிதம் தோன்றக் கூறினமையால் இது கல்வி பற்றிய பெருமிதமாகும்.

**தறுகண் பற்றி வரும் பெருமிதம்**

தறுகண் என்பது உள்ள உறுதியைக் குறிப்பது தறுகண்.அஞ்சத்தக்கன கண்டவிடத்து அஞ்சாமை, அதாவது உள்ளத்து உறுதியாகிய வீரம் ஆகும்.

''அடன்மாமேல் ஆற்றுவன் என்னை மடன்மாயேன்
மன்றம் படர்வித்தவன்''[95]

இதுதறுகண்மை பற்றிய பெருமிதமாகும் ''போரிலே வெற்றியளிக்கும் குதிரையின் மேல் ஏறி வருகின்ற என்னை, பனைமடலால் ஆகிய குதிரை மேல் ஏறிவரச் செய்தவள்'' என்று கூறுவதில் ''அஞ்சா நெஞ்சமுடைய என்னை'' என அவன் உரைப்பது தறுகண்மை பற்றிய பெருமிதாகும்.

மண்டு அமர் நகையொடு கண்படை பெறாஅது
எடுத்து எறி எஃகம் பாய்தலின்புண்கூர்ந்து
பிடிக்கணம் மறந்த வேழம் வேழத்து''[96]

பகைவர் எறிந்த வேல் நுழைந்ததால் புண்மிகுந்த பெண் யானைகளையும் யானையின் தும்பிக்கை, அடிபட்டபாம்பு துடித்ததைப் போன்று துடித்து அற்ற விழுந்தது. இங்கு தலைவனுக்கு வீரம் என்னும் பெருமித உணர்வு தோன்றுகிறது.

**புகழ்மை பற்றி வரும் பெருமிதம்**

நல்ல செயலைச் செய்வதினால் ஏற்படும் ஒருவித உணர்வு 'ஈதல் இசைபட வாழ்தல்' எனத் தொடங்கும் திருக்குறளில் வரும் இசை என்பது புகழைக் குறித்தல் இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

தலைவன் , இன்னல் நிறைந்த இரவு நேரத்தில் தலைவியை நாள்தோறும் கண்டு மகிழ்ந்து மீண்டான். அவன் வரவுக்கு இருவரும் அஞ்சினர் அதனால் இரவுக்குறி வந்த தலைவனிடத்தில்,

''கழியக் காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்''[97]

எனத் தோழி வரைவு வேண்டுகின்றாள் சான்றோர் பழியோடு வரும் இன்பத்தை விரும்பார் எனக் கூறுவது கற்றாரிடத்துக் காணலாகும் நல்வினையால் பிறந்தபெருமிதமாகும் இன்பமும் பொருளும் மிகுதியாகக் கிடைப்பன என்றாலும் பழியைத்தரும் செயல்களைச் செய்யாமை என்பது இசைமையாகும். ஆகவே இஃது இசைமையிடத்துப் பிறந்த பெருமிதமாகும்.

**கொடை பற்றி வரும் பெருமிதம்**

கொடை என்பது மற்றவர்களுக்கு அளிக்கும் (கொடுக்கும்) திறன் உயிர்,உடம்பு, உறுப்பு முதலிய எல்லாப் பொருளையும் கொடுத்தலாகிய வன்மைத்திறம் எனப்படுகிறது. இதனை கலித்தொகை.

“வையம் பூரவுக்கும் உள்ளத்தேன் என்னை விரவுக்கும்
இன்னா இடும்பை செய்தாள்”[70]

பொய்யற்ற நன்மக்கள் உயர்த்திப் புகழ்ந்த, கீழ்த்திசைக் கண்தோன்றும் மாசற்ற ஞாயிற்றின் மண்டிலத்தை, யான் பெறுதற்கரியவன் என வன்மைதிறம் இப்பாடலில் கூறப்பட்டுள்ளது.

அறநெறி பிறழாது இல்லறம் நடத்துவதும், சிறந்த உறவினரது பல துன்பங்களைத் தீர்த்தலும், வருந்தாத உள்ளத்தோடு ஓரிடத்தில் இருந்தவர்களுக்கு இல்லையாகும் எனக் கருதி நம் தலைவர் பொருள் ஈட்டும் வினையை விரும்பிச் சென்றுள்ளார் எனத் தோழி கூறுமிடத்துப் பெருமிதம் வெளிப்படுகின்றது. இதனை,

“அறந்தலைப் பிரியாது ஒழுகலும்; சிறந்த
கேளிர் கேடு பல ஊன்றலும் நாளும்

வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல்எனச்

செய்வினை புரிந்த நெஞ்சினர்''[99]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன பிறர்க்கு கொடுப்பதற்காகவும் அறம் பேணுவதற்காகவும் தலைவன் பொருளீட்டச் சென்றுள்ளான் என்பது வள்ளன்மையால் பிறந்த பெருமிதமாகும்.

### ஏ.வெகுளி (Anger)

சினம், கோபம், உருத்திரம், வெகுளி என்பன ஒரு பொருள் குறித்த சொற்களாகும். பிறர்தம் கருத்துகளைப் புறக்கணிக்கும் போதும், தீமைகளைக்காணும் போதும் வெகுளி என்ற மெய்ப்பாடு தோன்றுகிறது. ''சினம் வெகுவாக எழும் போது வெகுளி எனப் பெயர் பெற்று விடுகிறது போலும் மானுடம் வெகுண்டெழும் நிலைக்குத் தள்ளப்படும் போது அழிவுக்கு அடிகோலும் போர்கள் நிகழ்கின்றன. எனவே, தம்மையும் அழித்து பிறரையும் அழித்துக் கேடு விளைக்கும் வெகுளி வருமுன்காப்பது அறம்''[100] ஆகும். சினம், அச்சம், அன்பு போன்ற உணர்வுகள் மனவெழுச்சியினால் ஏற்படுவனவாகும்.

### அகராதி விளக்கம்

வெகுளி என்ற சொல்லுக்கு 'சினம்'[101] என்னும் பொருளை வரலாற்று முறைத் தமிழ் இலக்கிய பேரகராதி தருகின்றது.

தமிழ் இலக்கணப் பேரகராதி, ''வெகுளி, வெகுளியைத் தோற்றுவிக்கும் பொருள்களைக் கண்டவழி மனத்தில் விளைவது உறுப்புக்களை வெட்டிக் குறைத்தலும், தாரமும் சுற்றமும் குடிப்பிறப்பும் போன்ற அநியாயச் செயல் காரணமாகச் சினம் மிகுந்து. தன் நிலையை மறந்து கொதித்தெழுந்து கூறும்

சொற்களும் செய்யும் செயல்களும் இச்சுவையின் பாற்படும்''[102] என உரைக்கின்றது.

**வெகுளி தோன்றும் இடங்கள்**

தொல்காப்பியர், உறுப்பறை, குடிகோள், அலை, கொலை என்ற நான்கிடத்தும் வெகுளி பிறக்கும் என்பர், இதனை,

உறுப்பறை குடிகோள் அலைகொலை என்றன
வெறுப்பவந்த வெகுளி நான்கே''[103]

எனும் நூற்பா வழிவுரைக்கின்றார்.

வெள்ளைவாரணன், ''உறுப்பறை உறுப்புகளை அறுத்தல், அஃதாவது யாக்கையின் உறுப்புகளாகிய கையினை வெட்டுதல், கண்ணைத் தோண்டுதல் முதலிய கொடுஞ்செயல்கள், குடிகோள் என்பது பிறரத குடிப்பிறப்பின் அவருடைய சுற்றத்தார்க்கும் கேடு சூழ்தல், அலை என்பது அரசியல் நெறிமுறைக்கு மாறாகக் கோல் கொண்டு அலைத்தல் முதலிய தீத்தொழில்கள் கொலை என்பது பிறருடைய அறிவும் புகழும் முதலிய நன்மைகளை அழித்துப் பேசுதல் இவ்வாறு நால்வகைப்படக் கூறப்பட்ட இக்கொடுந்தொழில்கள் காரணமாக மக்களது மனத்தே வெகுளி தோன்றுவது இயல்பு''[104] என்கிறார்.

**உறுப்பறைபற்றி வரும் வெகுளி**

உறுப்பறை என்பது மனிதனது அங்கங்களை அறுத்தல் என்பதாகும். பேராசிரியர் 'உறுப்பறையென்பது 'கைக்குறைத்தலும்' 'கண் குறைத்தலும்' முதலாயின என்று குறிப்பிடுவார்,' இதன்காரணமாகவும் வெகுளி தோன்றும் என்பதைக் கலிதொகைப் பாடல் வரி,

“முறஞ்செவி மறைப்பாய்வு முரண் செய்த புலிசெற்று”[105]

யானையினது முறம்போன்ற செவியை மறைப்பாகக் கொண்டு பாய்ந்து மாறுபாடு செய்த புலியைச் சினத்து தாக்கியது யானை என்று உறுப்பறை பற்றி வருவதைக் காணலாம். குடிகோள் பற்றி வரும் வெகுளி தாரம், சுற்றம்,குடிப்பிறப்பு முதலியவற்றிற்குக் கேடு சூழ்தல் குடிகோளாகும்.

“சென்ற காதலர் வந்து, இனிது முயங்கி

பிரியாது ஒரு வழி உறையினும், பெரிது அழிந்து

உயங்கினை, மடந்தை ! என்று– தோழி”

இப்போது பரத்தையரிடம் அன்பு கொண்ட தலைவனிடம் எனக்கு எங்ஙனம் அன்பு தோன்றும் என்றும் கூறினாள் தலைவி. இங்கு தலைவன் பரத்தையரிடம் அன்பு கொண்டிருந்த தலைவிக்கு’ குடிகோள் என்னும் வெகுளி தோன்றுவதைக் காணலாம்.

**அலை பற்றி வரும் வெகுளி**

சினத்தினால் தோன்றும் ஒருவகை உணர்ச்சி.

“மீன் முதிர் இலஞ்சிக் கலித்த தாமரை

பெருங்களிற்றுச் செவியின் அலைக்கும் ஊரனொடு

எழுந்த கௌவையோ பெரிதே, நட்பே

கொழுங்கோல் வேழத்துப் புணை துணையாகப்

புனல் ஆடு கேண்மை அனைத்தே, அவனே”[107]

தலைவி, தலைவனைப் பார்த்து பொய்பேசும் உன்போல் இருந்தால் உலகத்தில் மெய்யென்பது எங்கு உள்ளது என சினந்துரைக்கின்றாள். இச்சினம் அலை காரணமாகும் பிறந்ததாகும்.

## கொலை பற்றி வரும் வெகுளி

‘கொலை என்பது கொல்லுதல்’ என்பார் பேராசிரியர், கொலை என்பது அறிவும், புகழும் முதலாயினவற்றைக் கொன்றுரைத்தல் என்பர், இதனை

“உறுதும் பஞ்சா துடல்சின ஞ் செருக்கு
சிறு சொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சம ஞ் சிதையத் தாக்கு முரசமொ
பொருங்ககப் படே எனாயின”[108]

என்ற புறப்பாட்டடிகளில் ஓர் அரசனைப் பற்றி மாற்றரசர்கள் அவன் புகழ் அழியும் இழிசொற்களைக் கூறினர். அது கேட்ட தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டின் நெடுஞ் செழியனின் சினம் வெளிப்படுதலை அறியலாம்.

## ஐ.உவகை(Joy)

எண்வகை மெய்ப்பாட்டினுள் இறுதி மெய்ப்பாடு உவகையாகும். “உவகையானது(இன்பமானது) ஒரு காலத்து ஒரு பொருளால் ஐம்புலன்களும் இன்பம் நுகரும் தன்மையினை உடையதாகும்”[109]

## அகராதி விளக்கம்

உவகையைத் தோற்றுவிக்கும் பொருள்களைக் கண்டவழி மனத்தில் விளையும் பொருள், செல்வம்,புலன், புணர்வு, விளையாட்டு என்ற நான்கு குறிப்புப் பற்றியும் உவகை பிறக்கும்”[110] என தமிழ் இலக்கணப் பேரகராதி கூறுகின்றது.

“மகிழ்ச்சி, அன்பு, மெய்ப்பாடு எட்டினுள் ஒன்று காமம்”[111] என்ற விளக்கங்களை உவகைக்கு வரலாற்று முறைத் தமிழ் இலக்கியப் பேரகராதி காட்டுகின்றது.

**உவகை பிறக்கும் இடங்கள்**

செல்வம், புலன், புணர்ச்சி, விளையாட்டு என்ற நான்கு உவகை எனும் மெய்ப்பாட்டினைத் தோற்றுவிக்கும், இவற்றை தொல்காப்பியர் இவ்வாறு கூறுகிறார்.

''செல்வம் புலனே புணர்வுவிளையாட்டென

அல்லல் நீத்த உவகை நான்கே''[112]

எனத் தொல்காப்பியம் கூறுகிறது.

பேராசிரியர், ''செல்வம் என்பது நுகர்ச்சி, புலன் என்பது கல்விப்பயனாகிய அறிவுடைமை, புணர்வு என்பது காமப்புணர்ச்சி விளையாட்டு என்பது தீதில் பொய்தல்(பொய்யுரைத்தல்)''[112] என்கிறார்.

**செல்வம் பற்றிய உவகை**

ஆக்கத்தின் பெருக்கம் செல்வம், வளமையைக் குறிப்பதும் செல்வம்.

''உரனுடையுள்ளத்தைச் செய் பொருள் முற்றிய

வளமையானாகும் பொருளிது வென்பாய்''[114]

இவ்வரிகளில், ''உரமிக்க உள்ளத்தோடு பொருள் தேடச் சென்று அதனை நிறைவேற்றி வந்த வளமைப் பெருக்கால் பெறும் பயன் இது'' வெனக் கூறுப்படுவதால் இது செல்வம் காரணமாகப் பிறந்த உவகையாகும்.

பட்டினப்பாலையில் சோழநாட்டின் செல்வ வளத்தினைப் பற்றி குறிப்பிடும் போது

''சுடர் நுதல் மட நோக்கின்

நேர் இழை மகளிர் உணங்கு உணாக் கவரும்

கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவி இன்று உருட்டும்
முக்காற் சிறு ஆதர் முன் வழி விலக்கும்
விலங்கு பகை அல்லது கலங்கு பகை அறியா
கொழும் பல் குடிச்செழும் பாக்கத்து
குறும் பல் ஊர் நெடுஞ் சோணாட்டு''[115]

சோழ நாட்டின் செல்வச் செழிப்பை எடுத்துக் கூறுவதன் மூலம் செல்வம் பற்றிய உவகை மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

**புணர்வு பற்றிய உவகை**

தலைவன், தலைவியரிடையே அன்போடு ஏற்படும் காமப்புணர்ச்சி தான் புணர்வு. தலைவன் இரவுக்குறியிடத்துத் தலைவியோடு புணர்ந்து நீங்கினான். புணர்வால் பெற்ற மகிழ்வினைத் தலைவன் தன் நெஞ்சிடம் கூறுவதாக அமைந்தது இப்பாடல்.

''கடல்மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து
உருவுகிளர் ஓர்வினைப் பொலிந்தபாவை
இயங்கற் நன்ன ஒதுக்கினள் வந்து
பெயலலைக் கலங்கிய மலைப்பு+ங்கோதை
.................................................................................................
இயலெறி பொன்னிற் கொங்குசோப்பு உறைப்ப
தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புஉறு நரம்பின்; தீவிய மொழிந்தே''[116]

தலைவி தலைவனை ஆரத்தழுவியதை கூறும் இப்பாடல் புணர்ச்சினால் வெளிப்பட்ட உவகையாகும். யாழ் ஒலி போல இனிய குரலில் தலைவி, அன்புறு சொற்கள் பேசித் தன் தொடி தம் உடலில் தழும்பு உண்டாகுமாறு ஆரத்தழுவிச் சென்றாள்'' எனக் கூறி உவந்தான் இது கண்டு கேட்டு உண்டு உயிர்துற்றரிய ஐம்;புலன்களின் நுகர்ந்தமையால் பிறந்த உவகையாகும்.

''உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல,
நாணுவரை நில்லாக் காமம் நண்ணி,
நல்கினள், வாழியர், வந்தே—ஓரி
பல்பழப் பலவின் பயம்கெழு கொல்லிக்
கார்மலர் கடுப்ப நாறும்
ஏர் நுண் , ஓதிமாஅயோளோ !''[117]

உப்பினால் கட்டப்பட்ட அணையில் தடைபட்டு நில்லாது, அவ்வணைமை உடைத்துக் கொண்டு பெருகிச் செல்லும் பெருமழை வெள்ளம் போன்று, நாணத்தின் எல்லையில் கட்டுப்பட்டு நில்லாது காமக்கடும்புனல் பெருகப் பெற்றவளாய்,இரவில்வந்து இன்பம் தந்து நம் துன்பம். எனப் புணர்ந்து நீங்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது காமப்புணர்ச்சியால் வெளிப்பட்ட உவகை ஆகும்.

**விளையாட்டு பற்றிய உவகை**

விளையாட்டு என்பது ஆற்றில் குளத்தில் நீராடுதல். பேராசிரியர் 'விளையாட்டு என்பது ஆறும்குளமும், காவுமாடி பதியிகந்து வருதல் என்றுரைப்பர்

"கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சி,
பெரும்புனல் வந்த கிருந்துறை விரும்பி,
யாம் அஃது அயர்கம் சேறும், தான் அஃது
அஞ்சுவது உடையள் ஆயின் வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி
முனை ஆன் பெருநிரை போல்"[118]

கூந்தலைப் போன்ற நெறிப்பினையுனடைய ஆம்பலின் முழுமையான செறிந்த இலைகளைத் தழையாடையாக உடுத்தி, பெருவெள்ளம் வரப்பெற்ற பெரிய நீர்த்துறையை விரும்பி, யாம் புனல்விளையாட்டைச் செய்வதற்காகச் செல்லா நின்றோம் புனல் விளையாடு உவகை யடைவதை என்று பரத்தை, தலைவனுடன் புனல் விளையாடி உவகை அடைவதைக் காணலாம்.

"அண்ணல் நெடுங்கோட்டு இழிதரு தெள் நீர்
அவிர் துகில் பரையும் அவ்வெள் அருவி
தவிர்வு இல் வேட்கையேம் தண் பிது ஆடி"[119]

தலைவனின் மலையுச்சியிலிருந்து குதிக்கின்ற தெளிவான நீரையுடைய தூய ஆடைபோன்ற வெண்மையான அருவியில் விருப்புடன் விளையாடினோம் என்று குறிஞ்சிப்பாட்டில் தோழியும், தலைவியும் புனல் விளையாடியதைப் காணலாம். இவற்றில் விளையாடடு (உவகை) மெய்ப்பாடு தோன்றுகிறது.

**தொகுப்புரை**

- தமிழ் மொழியின் பொருள் வகைகளாகிய அகத்தையும், புறத்தையும் பற்றிப் பல்வேறு புலவர்கள் பல்வேறு காலங்களில் பாடிய தனிப்பாடல்களின் தொகுப்பே எட்டுத்தொகையும், பத்துப்பாட்டுமாகும்

பல்வேறு வகையான உணர்ச்சிகளையும் நாம் சங்க இலக்கியங்களுள் கண்டுகளிக்க இயலும், உணர்ச்சிப்பிழம்புகளின் உயிர் ஓவியங்களே சங்க இலக்கியங்கள். சங்கப்புலவர்கள் அகப்பாடடுகளாக பாடியுள்ளவையெல்லாம் பாடிய புலவர்களின் தன்னுணர்ச்சிகளைப் பற்றியன அல்ல, தலைவன். தலைவி தோழி முதலியோரின் உணர்வுகளை மெய்ப்பாடுகளாகப் படைத்துக்காட்டியுள்ளன அகத்திணைப் பாடல்கள் மக்களைப் பொது நிலையிற் கருதிப்பாடப்பட்டனவே தவிர, சுட்டி ஒருவரது இயற்பெயரைக் குறிப்பிட்டுப் பாடப்பட்டன அல்ல. இதன் தாக்கத்தினால் புறத்திணைப் பாடல்களிலும் கூட, பல இடங்களில் மன்னர், வள்ளல்களின் இயற்பெயரைச் சுட்டிக் கூறாமல் பொதுப்படவும் பாடப்பெற்றுள்ளன.

- மனித வாழ்க்கை அக, புற உணர்வுகளை வெளிப்படுத்துக்கூடியது. உள்ளத்தில் தோன்றும் உணர்வுகளும் வெளிப்படுத்தத்தகுந்தவை. ஆனால் காதல் உணர்வு தனித்து நம்முள்ளே நிகழ்க்கூடியது. உயிருக்கும் உடலுக்கும் நல்லதான காதல் வாழ்வு தொடங்கிச் செம்மையான கற்பு வாழ்க்கைக்கு வழி காட்டுவனவாக அமைந்துள்ளன. இம்மெய்ப்பாடுகள் உளவியல், உடலியல், பாலியல் சாாந்தவைகளாகும் என்பதை சங்க இலக்கியங்களை ஆராயும் போது வெளிப்படுகிறது. மனத்தில் தோன்றுகின்றன எண்ணங்களுக்கும், மெய்ப்பாடுகளுக்கும் நெருங்கிய தொடர்பு காணப்படுகிறது. தலைவன், தலைவியின் உணர்ச்சிகளை உள்வாங்கி அவற்றை அவர்கள் வாயிலாகவே வெளிப்படுத்தியுள்ள பாங்கு சிறப்பாக அமைந்துள்ளது. மெய்ப்பாடுகளைப் பயன்படுத்திய முறையும் அதனை வெளிப்படுத்தியுள்ள திறனும்

புலவர்களின் சிந்தனை ஆற்றலை வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளன.

- மெய்ப்பாடு என்பது அக உணர்வுகளை ஆழ்ந்து ஆராயாமலே அனைவரும் அறியப்புலப்படுத்தும் இயற்புற உடற்குறி அதாவது ஒருவரின் உள்ளுணர்வுகளுள் மற்றவர் கண்டும் கேட்டும் அறியப் புறவுடற்குறியால் புலப்படுபவையே மெய்ப்பாடு உருவமில்லாதனவாகிய நகை , அழுகை , இளிவரல், அச்சம், மருட்கை, பெருமிதம், வெகுளி, உவகை போன்ற உணர்ச்சிகளைப் பொறிகள் வாயிலாக உணர்வதற்குத் துணையாவது மெய்ப்பாடுகளாகும். மெய்ப்பாடாவது உள்ளத்து நிகழும் உணர்ச்சிகளின் உண்மை வெளிப்படுத்தும் அல்லது உள்ளத்து நிகழும் உணர்ச்சிகளின் உண்மைத் தோற்றமாகிய புறஉடற்குறியாகும் சங்க இலக்கியப்பாட்டு ஒவ்வொன்றும் மெய்ப்பாட்டுடையதேயாம். மேனாட்டார் முறைப்படி அவற்றை உருக்கவிதைகள் எனலாம். இச்செல்வாக்கு பிற்காலக் காப்பியங்கள் பலவற்றில் காணப்படுகிறது. தமிழ் இல்க்கியத்தில் மெய்ப்பாட்டுச் செல்வாக்கு மிக அழுத்தமாக உள்ளது எனலாம்.

## அடிக்குறிப்புகள்

1. அ. மணவாளன், இலக்கிய ஒப்பாய்வு– பக்–63.
2. வ.சுப. மாணிக்கம், தொல்காப்பிய புதுமை.பக்–127.
3. தொல்காப்பியம், பொருளதிகாரம் அகத்திணை ச.வே.சுஉரை. பக்–354.
4. தமிழண்ணல், சங்க மரபு, பக்–130
5. தொல். பொருள். மெய். இளம்.பக்–196
6. க்ரியாவின் தற்காலத்தமிழ் அகராதி.பக்–860.
7. அ.வெ.சுப்பிரமணியன் அகப்பொருளில் அச்சமெய்ப்பாடு.பக்–8.
8. சரளா ராசகோபாலன், சங்க இலக்கியம்(அகம்)பக்–113.
9. அ.வெ.சுப்பிரமணியன், அகப்பொருளில் அச்ச மெய்ப்பாடு.பக்–13
10. சி.கவிதா ஆய்வாளர், புறநானூற்றில் எண்வகை மெய்ப்பாடுகள்.பக்–10
11. மேலது, பக்–11
12. தொல், பொருள். மெய். இளம். நூ.3
13. க.வெள்ளைவாரணன், தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் உரைவளம். பக்–10
14. ரா.சேதுபதி.திருக்குறளில் தொல்காப்பிய மெய்ப்பாடுகள், பக்–35
15. சி.வை. தாமோதரப்பிள்ளை– வீரசோழியம்–பக்–227
16. சி.கவிதா ஆய்வாளர், புறநானூற்றில் எண்வகை மெய்ப்பாடுகள் பக்–7.
17. மேலும் பக்–8
18. தொல். பொருள், மெய். இளம்.; பக்–3
19. வீ.பா.கா.சுந்தரம், தமிழிசைக்கலைக் களஞ்சியம் (நான்காம் தொகுதி பக்–55)
20. சேதுபதி, திருக்குறளில் தொல்காப்பிய மெய்ப்பாடுகள் பக்–39

21. தொல்.பொருள். மெய். இளம். நூ.1
22. ரா.சேதுபதி,திருக்குறளில் தொல்காப்பிய மெய்ப்பாடுகள் பக்–38
23. அ.மணவாளன், இலக்கிய ஒப்பாய்வு பக்–64
24. ரா.சேதுபதி, திருக்குறளில் தொல்காப்பிய மெய்ப்பாடுகள் பக்–42
25. திரு ஞானசம்பந்தம் தெளிவுரை, தண்டியலங்காம் பக்–19
26. மேலது பக்–114
27. ரா.சேதுபதி, திருக்குறளில் தொல்காப்பிய மெய்ப்பாடுகள் பக்–54
28. க. வெள்ளைவாரணன், தொல்காப்பியம் மெய்பாட்டியல் உரைவளம் பக்–32
29. வ.த.இராமசுப்பிரமணியம்(தொ.ஆ)திருமகள் தமிழகராதி பக்–613
30. சந்தியா நடராஜன்(ப.ஆ)மதுரைத் தமிழ் பேரகராதி இரண்டாம் பாகம் பக்–3
31. வீ.பா.கா.சுந்தரம்,தமிழிழசைக்கலைக்களஞ்சியம் நான்காம் தொகுதி பக்–55
32. தொல். பொருள்.மெய். இளம். நூ.3
33. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம் பக்–33
34. மேலது ப–33
35. அகம். பா.56
36. மேலது பா.18
37. குறுந். பா–75
38. கலித். பா–86
39. அகம்.பா–248

40. குறுந். பா.169

41. வ.த.இராமசுப்பிரமணியம்(தொ.ஆ),திருமகள் தமிழ் அகராதி.பக்.55

42. பெருஞ்சொல்லகராதி(தொகுதி) ப.459

43. வரலாற்று முறை தமிழ் இலக்கியப் பேரகராதி.தொகுதி ஒன்று பக்.174

44. தொல். மெய். இளம்.நூ. 5

45. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம் பக்.41

46. மேலது, ப.46

47. தொல். பொருள். மெய். இளம். நூ –5

48. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.41

49. மேலது ப.46

50. அகம் பா.176

51. நற்றி. பா.238

52. மேலது பா.14.

53. அகம். பா.144.

54. புறம். பா.164.

55. வ.த.இராமசுப்பிரமணியம்(தொ.ஆ) திருமகள் தமிழ் அகராதி ப.65

56. வரலாற்று முறைத் தமிழ் இலக்கியப் பேரகராதி தொகுதி1 பக்.337

57. மேலது.ப. 333

58. தொல். பொருள். இளம்.நூ.6

59. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம் பக்.53

60. அகம். பா.353

61. நாலடியார் பா.14

62. குறுந்;. பா.13

63. நற்றி. பா.59

64. குறுந்.பா.19

65. தமிழ் இலக்கணப் பேரகராதி பக்.104

66. தொல். பொருள். இளம். மெய். நூ.7

67. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம் பக்.62

68. அகம் பா.82

69. குறுந். பா.3.

70. மேலது பா.20 ப.20

71. குறுந்.பா.105

72. ஐங்கு.பா.105

73. டாக்டர் ராதா தியாகராஜன் , அகத்தில் மகளிர் பக்.24

74. டாக்டர் பாலுசாமி(மு.ஆ.) வாழ்வியற் களஞ்சியம்–தொகுதி ஒன்று பக்.122 முதன்மைப்

75. வீ.பா.கா.சுந்தரம், தமிழிசைக் களஞ்சியம் ப.55

76. தொல். பொருள். இளம். மெய். நூ.65

77. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம் பக்.65

78. அ.வெ.சுப்பிரமணி அகப்பொருளில் அச்சமெய்ப்பாடு, பக்.42

79. அகம் பா.7

80. குறிஞ்சி.பாட்.பா.177

81. நற்றி.பா.158

82. கலித். பா.54

83. வாழ்வியற் களஞ்சியம் , தொகுதி ஒன்று பக்.122

84. குறுந். பா.56

85. அகம். பா.20

86. மேலது பா.22

87. மேலது பா.32

88. மேலது பா.34

89. வாழ்வியற் களஞ்கியம் தொகுதி ஒன்று பக்.123

90. தி.வே.கோபாலையர் தமிழ் இலக்கணப் பேரகராதி,பக்.97

91. வ.த.இராமசுப்பிரமணியம்(தொ.ஆ) திருமகள் தழிழ் அகதரதி பக்.732

92. தொல். பொருள். இளம். மெய். நூ.253

93. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம் பக்.66

94. கலித். பா.141.பக்.610

95. அகம்.பா.112

96. முல்.பாட்.பா 67–70

97. அகம் பா.112

98. கலித். பா.141

99. அகம்.பா.173

100. ரா.சேதுபதி திருக்குறளில் தொல்காப்பிய மெய்ப்பாடுகள் பக்–126–127

101. வரலாற்று முறைத் தமிழ் இலக்கியப் பேரகராதி ஐந்தாம் தொகுதி பக்.280

102. தி.வே.கோபாலையர் தமிழ் இலக்கணப் பேரகராதி,பக்.124

103. தொல். பொருள். இளம். நூ.10

104. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம் பக்.73

105. கலித்.பா.52

106. நற்றி. பா.174

107. அகம்.பா.186

108. புறம்.பா.72

109. செந்துறை முத்து, மெய்ப்பாடு பக்.134

110. தி.வே.கோபாலையர் தமிழ் இலக்கணப்பேரகராதி, பக்.33

111. வரலாற்றுமுறைத் தமிழ் இலக்கணப் பேரகராதி தொகுதி ப.231

112. தொல்.பொருள். மெய்.இளம்.நூ.11

113. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம் பக்.74

114. கலித். பா.81

115. பட்டி.பா. பா 20–28

116. அகம். பா.142

117. மேலது பா.200

118. குறுந்.பா.88

119. குறிஞ்சி.பா.51–64

# இயல்–2

# சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள்

தமிழ் நாகரிகத்தின் கருத்துப் பெட்டகங்களாக தமிழ் இலக்கியங்கள் உள்ளன. எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரங்களைக் கொண்ட தொல்காப்பியத்துள், பொருளதிகாரம் தனித்தன்மை உடையது. அகமென்றும், புறமென்றும், பிரிவு கொண்டமையும் வாழ்வியல் முறையை நூற்பாக்களுள் வகுத்துச் சொல்கிறது தொல்காப்பியப் பொருளதிகாரம்.

தொல்காப்பிய மெய்ப்பாட்டியல், இருப்பத்திஏழு நூற்பாக்களை உள்ளடக்கியது. அவற்றுள் முதல் பன்னிரெண்டு நூற்பாக்களிலும், இறுதி ஒரு நூற்பாவிலும் உணர்த்தப்படுவது அகத்திற்கும், புறத்திற்குமான பொதுவான மெய்ப்பாடுகள் இடையில் இடம்பெறும் பதினான்கு நூற்பாக்கள் அகத்தினைக் குரியன. மெய்ப்பாடுகள் மனித வாழ்வில் பருவத்திற்கேற்பச் சிறப்பிக்கின்றன. ஒரு குறிப்பிட்ட பருவத்திற்குப் பின்னர் ஆணும், பெண்ணும் பால் உணர்ச்சி பெறுகின்றனர். இருபாலரும் ஒருவரைஒருவர் உள்ளத்தால் ஈர்க்கப்பெறுகின்றனர். காதலரின் உள்ளக்குறிப்பை வெளிப்படுத்துவதோடு, இருவரும் மாறிப்புக்கு இதயமெய்தவும் உயிருக்கும், உடலுக்கும் நல்லதான காதல் வாழ்வைத் தொடங்கிச் கற்பு வாழ்க்கை பெறுவதற்கும் வழிகோலவுமாக அமைந்துள்ளது.

## 2.1.மெய்பாடுகளும், உணர்ச்சிகளும்

மெய்ப்பாட்டியல் பொருள் இலக்கணத்திற்குரிய மெய்ப்பாடுகளின் இயல்பை உணர்த்துகிறது. மெய்ப்பாடு என்பது மக்களின் உணர்ச்சி

நிலையாகும். உணர்ச்சி ‘Feeling’ எனவும் மெய்ப்பாடு ‘Manifest physical Expression’ எனவும் ஆங்கிலத்தில் குறிப்பிடுகின்றனர். **“உணர்ச்சியும் உள்ளக்கிளர்ச்சியும் மெய்ப்பாடும் ஒன்றோடு ஒன்று தொடர்புள்ளவை. உணர்ச்சியிருந்து உள்ளக்கிளச்சியும், உள்ளக்கிளர்ச்சியிலிருந்து மெய்ப்பாடும் பிறக்கின்றன. உணர்ச்சிதான் மெய்ப்பாட்டின் அடிப்படையாகும். உணர்ச்சியின் வெளிப்பாட்டில் மெய்ப்பாடும் பிறக்கின்றன எனலாம்’’**[1]

**உணர்ச்சி மெய்ப்பாடுகள்**

எண்வகை மெய்ப்பாடுகளையடுத்துத் தொல்காப்பியர் உணர்ச்சிகளும் மெய்ப்பாடுகளும் கலந்த உடைமை முதலாக மிகை ஈறாக முப்பத்திரண்டினை மெய்ப்பாட்டியலில் முதல் நூற்பா மூன்று முதல் பதினொன்று வரை கூறுகின்றனர். இந்த முப்பத்திரண்டில்,

**“ஆங்கவை, ஒருபால் ஆகவொருபாலாக**
**உடைமை, இன்புறல் நடுவு நிலையருளல்**
**தன்மை அடக்கம் வரைதல் அன்பெனாஅக்**
**கைம்மிகல், நலிதல் சூழ்ச்சி வாழ்த்தல்**
**நாணல் துஞ்சலரற்றுக் கனவெனாஅ**
**முனிதல் நினைதல் வெரூஉதல் மடிமை**
**கருதல் ஆராய்ச்சி விரையுயிர்ப் பெனாஅக்**
**கையாறிடுக்கண் பொச்சாப்புப் பொறாமை**
**வியர்த்தல் ஐயம் மிகை நடுக்கெனாஅ**
**அவையும் உளவே அவையலங்கடையே’’**[2]

இவை உணர்ச்சிகளே உள்ளத்தின் கண் நிகழ்வன. புறத்தில் நிகழ்வது இல்லை. உணர்ச்சிகளும், மெய்ப்பாடுகளும் கலந்த இந்த முப்பத்திரண்டும் அகத்திற்கும், புறத்திற்கும் உரியனவாகும்.

**அகத்திணை மெய்ப்பாடு**

தொல்காப்பியம் கூறும் அகத்திணைக்குரிய மெய்ப்பாடுகள் மிகவும் விரிவானவையாகும். இவற்றை இளம்பூரணர் ஒருவகையாகவும், பேராசிரியர் மற்றொரு வகையாகவும் விளக்குகின்றனர். பத்து அவத்தைப் பற்றிய மெய்ப்பாடுகள், பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள், மனன் அழியாவழி நிகழ்வன. கற்பிற்குரியன என்று இளம்பூரணர் பாகுபாடு செய்கிறார். அகத்திணைக்கு உரிய நூற்பாக்கள் பதினான்காகும். இவற்றுள் அறுபத்திரண்டுஅகத்திணை மெய்ப்பாடுகள் சுட்டப்படுகின்றன. இவற்றுள் மெய்யின்கண் தோன்றும் மெய்ப்பாடுகள் போல அல்லாமல், கூற்றுக்கள் போலவும் உள்ளன. காதல் வயப்பட்ட தலைமக்களிடம் தோன்றும் மெய்ப்பாடுகள் போல அல்லாமல், கூற்றுக்கள் போலவும் உள்ளன. காதல் வயப்பட்ட தலைமக்களிடம் தோன்றும் அகத்திணை மெய்ப்பாடுகளை நுணுக்கமாகவும், தெளிவாகவும் முறையாகவும் வரையறைப்படுத்தியுள்ளார் தொல்காப்பியர்.

**“அகத்திணைப் பாடல்களில் வரும் தலைவி அல்லது குறிகோட்படைப்பாய், மனித இனப் பொதுப்படைப்பாய் அடிப்படை உணர்வுகளை வெளிப்படுத்துவதில் ஒரு தன்மையுடைய மிகச்சிறந்த நுட்பமான வேலைப்பாடு மிக்க அச்சில் வார்த்தெடுக்கப்பட்ட படைப்புக்களாய் காட்சி நல்குகின்றன’’**[3] என்று சேதுபதி குறிப்பிடுகிறார்.

அகத்திற்கும், புறத்திற்கும் பொதுவாகிய எண்வகை மெய்ப்பாடுகளைக் கூறவந்த தொல்காப்பியனார், புறத்திணை மெய்ப்பாடு என்ற ஒன்றைக்கூறாது அகத்திணை மெய்ப்பாடு என்ற ஒன்றைக் கூறுவதிலிருந்து இதற்குத் தனிச்சிறப்புள்ளமை புலனாகிறது.

**தொல்காப்பியர் வகுத்த இலக்கணம்**

இலக்கிய மாந்தர் தம் உள்ள மாற்றங்களை மெய்ப்பாடாக்கிக் கூறுவதன் மூலம் பண்டைத் தமிழரின் அகவாழ்வின் பண்பினை தெளிவாக்கியுள்ளவை குறிப்பிடத்தக்கது. உள்ளத்தில் ஏற்படும் உணர்ச்சிகள் எண்ணில்லா தவையாகும். எனவே, காதல் வயப்பட்ட தலைமக்களிடம் காதலுணர்ச்சிகள் அடிப்படையில் தோன்றும் காதல் மெய்ப்பாடுகள் இவ்வுளவுதான் என்று கூற இயலாத என்பதை தொல்காப்பியர்,

**“அன்ன பிறவும் அவற்றொடு சிவணி**
**மன்னிய வினைய நிமித்தம் என்ப’’**[4]

என்ற நூற்பாவில் கூறுகின்றார்.

காதலரிடம் தோன்றும் அகத்திணை மெய்ப்பாடுகள் இவ்வளவு தான் என்று வரையறை செய்கின்றார். அவர் நுட்பமாக வரையறுத்துக்கூரிய அம்மெய்ப்பாடுகள் இலக்கியத்தின் வாயிலாகவும், உலகியல் வழக்கத்திலும் உணர்ந்து ஆராயப்பட்டவை. அம்மெய்ப்பாடுகள் திருமணத்திற்கு முந்திய களவிலும் அதற்கு அடுத்த நிலையலான கற்பிலும் நிகழ்வனவாகும்.

அந்த மெய்ப்பாடுகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. களவுக் காலமெய்ப்பாடுகள்
2. பிரிவுக்கால மெய்ப்பாடுகள்

3. வரைவுக்கு வழிவகுக்கும் மெய்ப்பாடுகள்

4. கற்புக்கால மெய்ப்பாடுகள்

இவற்றின் அடிப்படையிலே சங்க இலக்கிய மெய்ப்பாடுகள் ஆராயப்படுகின்றன. இந்த வகையான மெய்ப்பாடுகள் அகத்திணைக்கே உரிய மெய்ப்பாடுகள் எனலாம். இம்மெய்ப்பாடுகள் தலைவியிடையே பெரும்பான்மையாக தோன்றுகிறது. தலைவனிடம் ஒருசில நிகழக்கூடும். ‘‘அச்சமும் நாணும் மடனும் முந்துறந்த நிச்சமும், பெண்பாற்குரிய தன்மையால் தலைமகள் தன்னிடம் சுரங்குக் காதலை சுரக்குமாதலின் இம்மெய்ப்பாடு பெரிதும் அவன் மாட்டே காணப்பெறும்’’[5] என்று கூறும் ச. சோமசுந்தரபாரதியார் கருத்து இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

**2.2. களவுக்கால மெய்ப்பாடுகள்**

புகுமுகம்புரிதல், பொறிநுதல் வியர்த்தல், நகுநயமறைத்தல், சிதைவு பிறர்க்கின்மை, கூழைவிரித்தல், காதொன்று களைதல், ஊழணி தைவரல், உடைபெயர்த்துடுத்தல், அல்குல் தைவரல், அணிந்தவை திருத்தல், இல்வலியுறுத்தல், இருகையும் எடுத்தல், பாராட்டெடுத்தல், மடந்தபஉரைத்தல், ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல், கொடுப்பவை கோடல், தெரிந்துடம்படுதல், திளைப்பு வினைமறுத்தல், கரந்திடத்து ஒழிதல், கண்டவழி உவத்தல், புறஞ்செய்ச்சிதைதல், புலம்பித் தோன்றல், கலங்கி மொழிதல், கையறவுரைத்தல், என்னும் இருபத்திநான்கு மெய்ப்பாடுகள் தலைவன், தலைவி சந்திப்பு முதல் களவு வெளிப்படும் காலம் வரை மட்டும் ஆறு அவத்தைகளாக நிகழ்வனவாகும். ஒவ்வொரு அவத்தைக்கும் நான்கு மெய்ப்பாடுகளாக வகைப்படுத்துகின்றார் தொல்காப்பியர். இம்மெய்ப்பாடுகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

1. சந்திப்பு முதல், புணர்ச்சி வரை மட்டும் நிகழ்வன (முதல் 12 மெய்ப்பாடுகள்).

2. புணர்ச்சிக்குப் பின் களவு வெளிப்படும் வரை நிகழ்வன (இறுதி 12 மெய்ப்படுகள்)

**1. சந்திப்பு முதல் புணர்ச்சி வரை நிகழ்வன**

தலைவன், தலைவி சந்திப்பு முதல் புணர்ச்சி வரை நிகழும் மெய்ப்பாடுகள் மூன்று நிலையில் நிகழ்வனவாகும்.

அ. முதல் நிலையில் நிகழும் காட்சி மெய்ப்பாடுகள்.

ஆ. இரண்டாம் நிலையில் நிகழும் வேட்கை மெய்ப்பாடுகள்.

இ. புணர்ச்சி விருப்பத்தைப் புலப்படுத்தும் மெய்ப்பாடுகள்.

**அ. முதல் நிலையில் நிகழும் காட்சி மெய்ப்பாடுகள்**

தலைவனும், தலைவியும் முதல் சந்திப்பில் அன்புறும்போது தலைவியின் உள்ளத்தில் காதல் தோன்றுகின்றது என்பதை தொல்காப்பியர்.

**"புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்**
**நகுநய மறைத்தல், சிதைவு பிறர்க்கின்மையொடு**
**தகுமுறை நான்கே ஒன்றென மொழிப''[6]**

என்னும் நான்கு மெய்ப்பாடுகள் தோன்றும். இங்கு ஒருவரை ஒருவர் கண்களால் கண்டு காதலுற்ற நிலையில் மெய்ப்பாடுகள் தலைவியிடம் தோன்றுவதால் இவை 'காட்சி' என்னும் முதல் நிலைக்கண் நிகழும் மெய்ப்பாடுகளாகும். இங்கு தலைவியில் உள்ள விருப்பத்தை குறிப்பிடுவது 'புகுமுகமெய்ப்பாடு' தலைவனும், தலைவியும் ஒருவரையொருவர் எதிர்ப்படுகின்றனர். தலைவன்

விருப்பத்தை தலைவி குறிப்பால் புரிந்து கொள்கிறாள். தலைவனை விரும்பிய தலைவியின் காதல் உணர்ச்சி முறுவலோடு யதார்த்த நோக்காக வெளிப்பட்டது. அவளது உடன்பாட்டுக் குறிப்பை அறிந்த தலைவன்,

**“ஆர நாறும் அறல்போற் கூந்தல்**

**பேரமர் மழைக்கண் கொடிச்சி**

**மூரல் முறுவ மனத இய நோக்கே’’[7]**

எனக் கூறினான். தலைவனை நோக்கிய பொழுதே அவளுக்கு விருப்பமாயிற்று என்பதை, ‘கண்தர வந்த காமம்’ என்று தலைவியே குறிப்பிடுகின்றாள். “கண்களாலும் இதயத்தாலும் தோன்றும் காதல் என்பது உண்மையான அன்புப் பிணைப்பாகும். அது கண்களில் மலர்ந்து இதயத்தில் கனிய வைக்கப்படுகின்றது’’[8] என்பாரின் கூற்று குறிப்பிடத்தக்கது.

தலைவியின் காதல் நோக்கை புகுமுகம் நோக்கைத் தலைவன்,

“கடுஞ்சுரை நல்ஆன் நடுங்கு தலைக் குழவி

தாய்காண் விரும்பின் அன்ன

சா ஆய் நோக்கினள் மா அயோளே’’[9]

எனக் குறிப்பிடுகின்றான். தலைவியின் ஓரப்பார்வையால் தன் உள்ளத்தைப் பறிக்கொடுத்தான் தலைவன். இங்கு அறத்தொடு நிற்கும் தோழி, தலைவியிடம் தோன்றிய புகுமுகம் புரிதல் மெய்ப்பாட்டைக் கூறித் தலைவி தம் கற்புத்திறத்தைச் செவிலிக்கும் புலப்படுத்துகின்றாள்.

புகுமுகம் மெய்ப்பாட்டைத் திருவள்ளுவரும்,

“யான் நோக்குங்காலை நிலன் நோக்கும் நோக்காக்கால்

தான் நோக்கி மெல்ல நகும்’’[10]

எனக் குறிப்பிடுகின்றார். இங்கு தலைவனை விருப்பிய தலைவி தனது கனிந்த காதலை கனிந்த பார்வையிலும் முகமலர்ச்சியிலும் வெளிப்படுத்தியதாகக் குறிப்பிடுகின்றார். இதில் புகுமுகம் புரிதல் மெய்ப்பாடு என்பது சுட்டப்படுவதைக் காணலாம். தலைவி தன் உள்ள விருப்பத்தை 'புகுமுகம் புரிதல்' என்னும் மெய்ப்பாட்டில் வெளிப்படுத்துகின்றாள்.

**பொறிநுதல் வியர்த்தல்**

தலைவிக்கு நாணத்தினால் நெற்றியில் சிறிதாக வியர்த்தல் பொறிநுதல் வியர்த்தல் எனப்படும். தலைவி தன்னை விரும்புகின்றாள் என்பதை அறிந்த தலைவனும் காதல் மகிழ்ச்சியில் மகிழ்வான். புகுமுகம் புக்க தலைவி, தலைவனிடம் தோன்றும் காதல் குறிகண்டு மகிழ்ச்சி கொள்வாள். அவளது உள்ளத்தில் காதல் வெள்ளம் கரைபுரண்டு ஓடும். தலைவன் விரும்பிப் பார்க்க எதிர்பார்வை பார்த்த தலைவிக்கு நாணமும், அச்சமும் ஒருங்கு வந்தடைகின்றன. இந்நிலையில் தலைவியின் உள்ளம் காதலுவகைப் பெருக்கால் போராட, அவளது நெற்றியில் குறுவியர்வைத் துளிகள் தோன்றுகின்றன. இதுவே 'பொறிநுதல் வியர்த்தல்' என்னும் மெய்ப்பாடாகும். பொறிநுதல் வியர்த்தல் என்னும் மெய்ப்பாடு தலைவனுக்கு தோன்றுவது இல்லை. இவற்றை,

"தலைவனுக்கு அச்சமோ மகளிரைப் போன்ற நாணமோ இன்று ஆதலின் அவனுக்கு நுதல் வியர்த்தல் இல்லை என்பார் பேராசிரியர்''[11] தனது உள்ள விருப்பை மலரும் முகத்தாலும், நோக்காலும் தலைவனுக்கு உணர்த்திய தலைவி, அச்சமும் நாணும் ஒருங்கு அடைய நாணிக்கண் புதைக்கின்றாள். அந்நிலையில் தலைவி முகத்திரையை மெல்ல விலக்கிய தலைவன்,

“பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற்பொறி வியர்

உறுவளி ஆற்றச் சிறுவரை திறவென’’[12]

என்கிறான். புகுமுகம் புக்க தலைவிக்குக் காதல் உணர்வு பெருக, நுதல் வியர்க்கின்றது. தலைவியிடம் தோன்றிய இந்த மெய்ப்பாட்டினைக் கண்ட தலைவன், தலைவியின் அக உணர்வை உணர்ந்திருப்பான் என்று உறுதி கூறலாம். அதனையே ஏதுவாக்கித் தலைவியிடம், புழுக்கத்தினால் அவளது நெற்றியில் வியர்வை தோன்றுவதால், அதனைக் காற்றால் ஆற்றுதற்கு அவனை மூடி மறைக்கும் அவளது ஆடையைக் கொண்டு வீசுமாறு தலைவன் கூறுகின்றான். தலைவன் தன்னை நோக்கிய போது, அச்சமும் நாணமும் ஒருங்கு வந்தமையால் வியர்வை பொறித்த நெற்றியினை உடையவளாகக் கூறப்பட்டதை எண்ண முடிகிறது.

**நகுநய மறைத்தல்**

நகுநய மறைத்தல் என்பது, தலைமகனிடம் தோன்றிய குறிப்புகளால் அவனுடன் பேசி மகிழவேண்டும் என்ற விருப்பம் தன் உள்ளத்தே தோன்றிய நிலையிலும் அவ்விருப்பம் புறத்தே வெளிப்படாதபடி மறைத்தலுமாகும். தலைவனைக்கண்டு புகுமுகம் புக்கு, பொறிநுதல் வியர்க்க நின்ற தலைவி, அவன் கூறுவன கேட்டோ, காதல் குறிப்பினை அறிந்தோ தன் உள்ளக்குறிப்பை புலப்படுத்த நகைவந்த வழியும், நகை உணர்வு வெளிப்பாடவண்ணம் மறைப்பாள். இதுவே, நகுநய மறைத்தல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவியின் காதல் வேட்கை, உள்ளத்து உணர்ச்சி, அளவினும் மிகுந்துள்ளது என்பதையே இம்மெய்ப்பாடு காட்டுகின்றது. இயற்கைப்புணர்ச்சிக்கண் தலைவிடம்

தோன்றிய ‘நகுநய மறைத்தல்’ என்னும் மெய்ப்பாடு தலைவன் உள்ளத்தில் நீங்காது நிலைபெற்றது.அம்மெய்ப்பாட்டை தலைவனே,

“இலங்கு முத்துறைக்கு எயிறுகெழு துவர்வாய்’’[13]

என்றும்

“இளையன் முளைவாய் எயிற்றள்’’[14]

என்றும்

“முள்ளெயிற்று முறுவலும் திறந்தன’’[15]

என்றும்

“சுரஞ்செல் யானைக் கல்நூறு கோட்டின்’’[16]

எனக் குறிப்பிடுகின்றான். தலைவி தன்னிடம் தோன்றிய நகுநய மறைத்தல் மெய்ப்பாட்டினால், தலைவனின் உள்ளத்தைக் கவர்ந்தாள். புன்னகை பல வகைப்பட்டிருப்பினும், அனைத்திலும் மேலானது காதலியின் புன்னகையே இங்கு எண்ணத்தக்கதாகும். இந்நிலையில் தலைவன், தலைவியிடம் ‘நீதான் ஒரு தெய்வமகளோ அன்றிப் பிறிதொரு மடந்தையோ’ என்று கேட்க, அந்நிலையில் தலைவியிடம் தோன்றிய காதல் மெய்ப்பாடுகளை,

“சொல்லினி மடந்தை ! என்றனென்; அதனெதிர்
முள்ளெயிற்று முறுவல் திறந்தன;
பல்லிதழ் உண்கணும் பரந்தவால் பனியே’’[17]

தலைவன் அவ்வாறு கேள்வி கேட்டதை கண்ட தலைவி, தன் எண்ணத்தை மெய்ப்பாடுகளால் உணர்த்தினாள். அதாவது உள்ளத்துக் காதலைத் தலைவனுக்குப் புரிய வைத்தாள் என்பது நகுநய மறைத்த வழியும் தலைவி தன் காதல் வேட்கையில் உள்ளம் சிதைந்து, நிறையழிவாள் அங்னம் மறைத்த

வழியும், தலைவன் தலைவியின் காதல் உணர்ச்சியை அவளிடம் தோன்றும் சிதைவு பிறர்க்கின்மை மெய்ப்பாட்டால் அறிந்த கொள்வான். இவற்றை,

"..........................................எத்தொழில்
அரிவேய் உண்கண் பனிவரல் ஒடுங்கிச்
சிறிய இறைஞ்சினன்''[18]

என்ற அகநானூறு அடிகள் புலப்படுத்துகின்றன.

**சிதைவு பிறர்க்கின்மை**

தலைவியிடம் மட்டும் தோன்றும் மெய்ப்பாடு சிதைவு பிறர்கின்மை தலைவியிடம் கண்ட 'சிதைவு பிறர்க்கின்மை' என்னும் மெய்ப்பாட்டைப் பற்றி ஐங்குறுநூற்றுத் தலைவன் கூறுகின்றான். தலைவனைக் கண்டபோது தலைவி நாணித்தலை குனிந்தாள். உள்ளந்தெழுந்த அன்பு வேட்கையில் அவள் உள்ளம் சிதைந்தது. அதனைப் பிறர்க்கு உணர்த்தாமை பொருட்டு நெகிழ்வுற்ற கூந்தலில் முகத்தை மறைத்துக் கொண்டாள்.

இவற்றை,

"இலங்குவளை தெளிர்ப்ப அலவன் ஆட்டி
முகம் புதை கதுப்பினள் இறைஞ்சி நின்றோளே''[19]

என்னும் ஐங்குறுநூற்று பாடலடிகளும்,

"அகமலி யுவகையளாகி முகன் இகுத்து
ஒய்யென இறைஞ்சியோளே''[20]

என்னும் அகநானூற்றுப் பாடலடிகளும் புலப்படுத்துகின்றன. மேலும், உடன்போக்கின் போது தலைவியிடம் தோன்றிய இம்மெய்ப்பாட்டினைத் தான் கண்டவற்றை,

"அணிமான் சிறுபுறம் காண்கம் சிறுநனி
ஏகென ஏகல் நாணி நய்யென
மாகொல் நோக்கமொடு மடங்கக் கொள்ளச்சாஅய்''[21]

என தலைவனே தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளது. இம்மெய்ப்பாடு களவுக்காலத்தில் தலைவியிடம் தோன்றுவது என்பது குறிப்பிடத்தக்கது.

## 2.3. இரண்டாம் நிலைக்கண் நிகழும் வேட்கை மெய்ப்பாடு

தலைவன், தலைவியில் உள்ளத்தை அறிந்து நடந்து கொள்வதுதான் வேட்கை எனப்படும். இயற்கைப் புணர்ச்சியில் தலைவன் தலைவியின் உள்ளத்து வேட்கையை அறியாமல் அவளைத் தொடமாட்டான். மெய்யைத் தீண்டமாட்டான். எனவே காதல் உணர்வுகளைத் தலைவனும் தலைவியும் பார்வையால் மட்டுமே பரிமாறிக் கொள்வர். தலைவியின் உள்ளவேட்கையை அறிந்த பின்னர் தலைமகன் மெய்யுற்றவழி தலைவியிடம் கூழை விரித்தல், காதொன்று களைதல், ஊழணி தைவரல், உடைபெயர்த்துடுத்தல் என்னும் மெய்ப்பாடுகள் தோன்றுகின்றன. இதனை,

"கூழைவிரித்தல் காதொன்று களைதல்
ஊழணி தைவரல் உடைபெயர்த்துடுத்தலோடு
கெழீஇய நான்கே இரண்டென மொழிப''[22]

தொல்காப்பியர் இவ்வாறு குறிப்பிடுகிறார். இந்நிலையில் தலைவனைக் கண்டு அன்பு கொண்ட தலைவியின் உள்ளத்தில் காதல் உணர்வுத் தோன்றி உள்ளம் நெகிழ்வடைகிறது. பொதுவாக கூந்தலில் மயிர்கால்கள் உணர்வுமிக்கவையாகும். வேட்கை உணர்வு மிகுதியால் தலைவியின் கைகளே அவளையும் அறியாது பின்னிய கூந்தலை அவிழ்க்கவும், கற்றவும் செய்கின்றன.

“பின்னவிடு நெறியிற்கிளைஇய கூந்தல்’’[23]

“இருபம்பல் கூந்தல் இருள்மறை ஒளித்தே’’[24]

என்ற அடிகள் தலைவியின் கூந்தல் பின்னல் அவிந்தமையைக் காட்டுகின்றன. இவற்றில் ‘கூழை விரித்தல்’ என்னும் மெய்ப்பாடு தலைவியின் வழித் தோன்றுவதைக் காணலாம்.

**காதொன்று களைதல்**

தலைவன் தலைவியைத் தொடும்போது உள்ள நெகிழ்ச்சியால் காதில் அணியப்பட்ட ஆபரணங்கள் வீழ்தல் ‘காதொன்று களைதல்’ எனப்படும்.

“விறலிழை நெகிழச் சாஅய்தும்’’[25]

என்ற அடி தலைவியின் ஆபரணம் நெகிழும் என்பதை உணர்த்துகிறது.

**ஊழணி தைவரல்**

ஊழணி தைவரல் என்பது புணர்ச்சி வேட்கையினால் சரியாக அணிந்த அணகலன்களை மீண்டும் திருத்தம் செய்வது போது தடவுவாள். முறையாக அணிந்த அணியைத் தடவுதலாகும். புணர்ச்சி வேட்கையுடைய தலைவி, தன் உள்ளத்து உணர்வுகளை, ‘ஊழணி தைவரல்’ என்னும் மெய்ப்பாடு தோன்றத் தலைவனுக்கு புலப்படுத்துவாள். அவளது உள்ளத்து நிகழ்ந்த நிகழ்ச்சி, உடலில் தோன்றிச் செறிவுற அணிந்திருந்த அவளது கைவளையல்கள் நெகிழ்ந்தன. நெகிழ்ந்த வளையல்களைச் சரியாக அணிந்து கொள்வாள் போல் வளையலைத் தடவுவாள் என்பதை

“சூர்ப்புறு கோல்வளை செறிந்த முன்கை’’[26]

எனத் தலைவனே கண்டு கூறுகின்றான். மேலும் பரத்தையிடமும் இம்மெய்ப்பாடு நிகழ்த்தாக நற்றிணை கூறுகின்றது. தலைவனோடு தொடர்பு கொண்ட பரத்தைக்குறுமகள் காதல் வேட்கையால் உடல் குழைவுற்றது. செறிவுற அவள் அணிந்திருந்த வளையல்கள் நெகிழ்வுற்றன. அவள் அவற்றைச் சரியாக அணிவது போல் தேடினாள் என்பதை,

"செறிதொடி தெளிர்ப்ப''[27]

என்னும் பாடலடி உணர்த்துகின்றது.

**உடைபெயர்த்துடுத்தல்**

உடைபெயர்த்துடுத்தல் என்பது ஆடையைக் கலைத்து மீண்டும் உடுத்தல் ஆகும். தலைவனை விரும்பும் தலைவி, தன் உள்ளத்து வேட்கையால், உடுத்திய உடையினைச் சரிசெய்வதும். கலைத்து மீண்டும் உடுத்துவதும் 'உடைபெயர்த்து உடுத்தல்' என்னும் மெய்ப்பாடாகும். தலைவியின் உள்ளத்துணர்வு மெய்ப்பாடாகும் பொழுது, உடல்குழைய உடைசரியும்போது பின் தனது சரிந்த உடையினைத் திருத்தி அணிவாள்.

"கடற்கோடு செறிந்த வளையார் முன்கைக்
கழிப்பூத் தொடர்ந்த விரும்பல் கூந்தல்
கானல் ஞாழல் கவின்பெறு தழையள்''[28]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் விளக்குகின்றது. மேலும், இம்மெய்ப்பாடு பரத்தையிடம் தோன்றியதை,

"தேம்பாய் மராஅம்கமழும் கூந்தல்
துளங்குஇயல் அசைவர கலிங்கம் துயல்வர''[29]

என்னும் நற்றிணை உணர்த்துகின்றது. தலைவன் மார்பில் பரத்தை குறுமகள் ஒருத்திதுயில் கொண்டாள். காம உணர்ச்சியினால் தனது உடலில் அணிந்திருந்த உடைசரிந்து அசைந்து, இச்சரிவினை மீண்டும் சரிசெய்து உடுத்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**இ. புணர்ச்சி விருப்பத்தைப் புலப்படுத்தும் மூன்றாம் நிலை மெய்ப்பாடுகள்**

காதல் வேட்கை மிகுதியால் தலைமக்கள் தனியிடத்துச் சந்திக்கின்றனர். இவர்கள் பகற்குறியிலும், சந்திப்பர். அந்நிலையில், புணர்ச்சிக் குறிப்பாக தலைவி தன் உள்ளத்தில் புணர்ச்சி வேட்கையால் அல்குல் தைவரல், அணிந்தவை திருத்துதல், இருகையும் எடுத்தல் என்னும் நான்கு மெய்ப்பாடுகளால் வெளிப்படுத்துவாள்.

இதனை,

“அல்குல் தைவரல், அணிந்தவை திருத்தல்
இல்வலியுறுத்தல், இருகையும் எடுத்தலோடு
சொல்லிய நான்கே மூன்றென மொழிப’’[30]

என்கிறது தொல்காப்பியம். புணர்ச்சி எண்ணம் தலைவியின் உள்ளத்தில் நிறைந்திருக்கிறது. உணர்ச்சிப்பெருக்கால் அவள் தன்னுடைய சரியும் உடையினைச் சரிசெய்து பெண் குறியைப் பேணுதலே ‘அல்குல் தைவரல்’ என்னும் மெய்ப்பாடாகும். இயற்கைப் புணர்ச்சியில் தலைவியிடம் நிகழ்ந்த ‘அல்குல் தைவரல்’என்னும் மெய்ப்பாட்டினை,

“கடற்கோடு செறிந்த வளையார் முன்கைக்
கழிப்பூத் தொடர்ந்த இரும்பல் கூந்தல்
கானல் ஞாழல் கவின்பெறு தழையள்’’[31]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் உணர்த்துகின்றது. தன் புணர்ச்சி வேட்கையைத் தலைவனிடம் உணர்த்துதல் வேண்டி உள்ளத்து உணர்வுகளை மெய்ப்பாடுகளால் காட்டினாள் தலைவி, அணிந்திருந்த வளையல்களை திருத்தினாள். உள்ளத்து நிகழ்ந்த நெகிழ்ச்சி உடலோடு தொடர்பு கொண்டதாய், அணிந்திருந்த உடையை சரிசெய்ய தனியிடம் தேடினாள் என்பதை காணலாம். இப்பாடல் 'அல்குல் தைவரல்' என்னும் மெய்ப்பாட்டைக் குறிப்பாக வெளிப்படுத்துகின்றது.

### அணிந்தவை திருத்தல்

'அணிந்தவை திருத்தல்' என்பது அணிந்த அணிகலன்களைத் திருத்துதலாகும். புணர்ச்சி வேட்கைமிக்க தலைமகன் தலைவியின் அருகில் நெருங்கி நின்று அவளது வளையல்களையும், பிற அணிகலன்களையும் தொட்டு உரையாடுவான். இச்செயல்களைக் கண்டு மனத்தில் இன்பப் பெருக்கடையும் தலைவி, அவன் செய்கைகளை விரும்பாதவள் போன்று தனது அணிகளை அவ்வப்போது திருத்தம் செய்வது போல் செயல்படுவாள். இது 'அணிந்தவை திருத்தல்' என்னும் மெய்ப்பாடாகும். இத்தன்மை கொண்ட தலைவியின் நிலைபாட்டை,

"வளைசெறிந்த முன்கை''[32]

என்றும்,

"செறிந்த வளையார் முன்கை என்றும் வளரும்''[33]

என்றும் சங்க பாடலடிகள் காட்டும் விளக்கமாகும்.

### இல்வலியுறுத்தல்

'இல்வலியுறுத்தல்' என்பது தனது விருப்பத்தை வெளிப்படையாக கூறாமல், மறுத்து கூறுவது போல கூறுதல். உள்ளத்தால் தலைவனும், தலைவியும் ஒருவரை ஒருவர் நெருங்கி, இன்பம் துய்க்க விரும்புவர், புணர்ச்சி

வேட்கை மிகுந்தாலும் அச்சம், நாணம், மடன் ஆகிய குணங்களை உடைய தலைவி, தன் விருப்பத்தை வெளிப்படையாகக் கூறமாட்டாள். எனவே, அவள் சொல்லளவில் மாறுபட்டுப் புணர்ச்சியை விரும்பாதவள் போல் பேசுவாள். அவ்வாறு பேசினாலும் உள்ளத்தில் புணர்ச்சி எண்ணம் உண்டு என்பதை,

"யாரிவன் என்னை விலக்குவான், நீருளர்
பூந்தா மரைப் போது தந்து விரவுத்தார்க்
கல்லாப் பொது வனை நீமாறு நின்னோடு
சொல்லலேம் யென்றார் அமர்''[34]

என்னும் கலித்தொகைப் பாடல் உணர்த்துகின்றது. இங்கு சுற்றத்தாரை நெருங்கி முன்னிறுத்தித் தலைவன் மறைத்து, கூறினாலும் அவளது காமவேட்கையை உணர்த்தவதாகவே இருப்பதாலேயே இறுதியில் தலைவனோடு புணர்ச்சி இன்பம் துய்க்க உடன்படுகின்றாள் என்பதைச் சங்கப்பாடல்கள் காட்டுவதைக் காணலாம்.

**இருகையும் எடுத்தல்**

இருகையும் எடுத்தல் என்பது தலைவி மறுத்துக் கூறினும் தன் இரண்டு கைகளையும் வேறோர் பற்றிக் எடுத்தல் (எழுப்புதல்) புணர்ச்சி வேட்கையில் துடிக்கும் தலைவன், தலைவியைத் தழுவுகிறான். தலைவியின் உள்ளத்தில் புணர்ச்சியின் எண்ணம் ஊடுருவி நிற்க, உள்ளம் காமத்தின் கொள்கலம் ஆகின்றது. காதல் வேட்கை மிகுதியால் அவளது இருகைகளும் அவளையும் அறியாமலேயே தலைவனை அணைத்துக் கொண்டன.

இதனை,

"முயங்குதோறும் முயங்குதோறும்
அடக்குவம்.........................................
சாரல் நாடன் சாயல் மார்பே''[35]

என்று கூறுகிறாள். இங்கு, தலைவி தன் இருகைகளாலும் தலைவனை அணைத்துக் கொண்டு தனது மார்பின் அகத்தே அடக்கிக் கொண்டாள் என்பது வெளிப்படுகின்றது. மேலும் உள்ளம் இயைந்த உடலுறவும், உடல் இயைந்த உள்ள உறவும் அகத்திணையின் உயிர்ப்பண்பாகும். காதற் காமத்தின் சிறப்புக் குறித்துப் பரிபாடல் பின்வருமாறு உணர்த்துகின்றது.

"காதற்காமம் காமத்துச் சிறந்தது

விருப்போ ரொத்து மெய்யுறு புணர்ச்சி''[36]

அகத்திணை உயிர்நாடியான உள்ள உறவையும், உடல் உறவையும் காட்டுவதாகும் எனக் கொள்ளலாம். மெய்யாக நோக்கின் காதல் என்பதனுள் உடற்கலப்பும் அடங்கும். உடற்கலவியன்றிக் காதல் தன்மை சிறப்புறாது எனலாம். பாலுறவு தான் காதல் என்னும் தகுதிக்கு உரியது என்பதைப் பொருந்திய கூற்றாகக் கொள்ளலாம். இது குறித்துக்கூறும், வ.சு.பா. மாணிக்கம் "களவுக்காலத்தே உடல்கூட்டறவே இல்லை என்றும் அது கூடாது என்றும் கூறுவார் கொள்கைபிழையாம்.அது இயற்கைப்புணர்ச்சிக்கு முரணாகும். கற்புக் கருதிக்களவில் மெய்யுறார் என்பது அறமாகாது''[37] என்பர்.

### 2.3. புணர்ச்சிக்குப்பின் களவு வெளிப்படும் போது நிகழும் மெய்ப்பாடுகள்

தன் உள்ளத்துப் பெருகும் புணர்ச்சி வேட்கையினைத் தலைவி மெய்ப்பாடுகளால் தலைவனுக்கு உணர்த்துகிறாள். அகத்திணையின் பாடுபொருளான உள்ளம் இயைந்த உடலுறவும், உடலிழைந்த உள்ள உறவும் புணர்ச்சிக் காலத்து தலைவியிடம் தோன்றும் இம்மெய்ப்பாடுகளால் சிறக்கின்றன. புணர்ச்சிக்குப்பின் களவுக்காதல் பெற்றோர்க்கும், உற்றார்க்கும், ஊரார்க்கும் தெரியும் போது தலைமக்களிடம் மெய்ப்பாடுகள் தோன்றுகின்றன.

இம்மெய்ப்பாடுகள் நான்காம் நிலைக்குரிய மெய்ப்பாடுகள் என்பர். இவற்றைப் பாராட்டெடுத்தல், மடந்தபவுரைத்தல், ஈரமில் கூற்றம் ஏற்று அலர் நாணல், கொடுப்பவை கோடல் என்னும் நான்கும் 'மெலிதல்' என்பதற்கான மெய்ப்பாடுகள் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

"பராட்டெடுத்தல் மடம்தப வுரைத்தல்

ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல்

கொடுப்பவை கோடல் உளப்படத்தொகைஇ

எடுத்த நான்கே நான்கென மொழிப''[38]

பாராட்டெடுத்தல், தலைவன் தலைவியின் பெருமைகளைப் பாராட்டி உரைப்பது பாராட்டெடுத்தல் என்னும் மெய்ப்பாடாகும். புணர்ச்சிக்குப் பின் தலைமக்களுள் தலைவன், தலைவி ஒருவரை ஒருவர் உள்ளம் மகிழ்ந்து பாராட்டுதல் இயல்பு, தலைமகளின் அழகு, அன்பு, பெருமை, நல்லியல்புகள், போன்றவை பாராட்டுதலுக்குக் காரணமாக அமைகின்றன. இம்மெய்ப்பாடுகள் மனம் ஒன்றிய உயிருக்குயிராகத் திகழும் காதலர்களிடம் தோன்றுவதாகும்."களவு ஒழுக்கத்தில் புணர்ச்சி நிகழ்ந்த பின்னர்த் தலைவனும் தலைவியும் ஒருவர் மற்றவரின் நல்லியல்பினைச் சிறப்பாக படைத்துக் கொள்ளுதல், தலைவன் தலைவி நலத்தை அவளிடம் நேரே பாராட்டுவான்; ஆயின் தலைவி அவன் நலத்தை அவனில்லாத போது தோழியிடம் பாராட்டுவாள்.''[39] எனப் பேராசிரியர் 'பாராட்டெடுத்தல்' எனும் மெய்ப்பாட்டிற்கு விளக்கம் தருகிறார். இவற்றை குறுந்தொகைப் பாடல்அடிகள் மூலம் காணலாம்.

"நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று;

நீரினும் ஆரளவின்றே சாரல்

கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு

பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே''[40]

இயற்கைப் புணர்ச்சியினின்று நீங்கித் தலைமகள் தன்னோடு காதல் கொண்ட தலைவனது அன்பின் பெருமையை இப்பாடல் வெளிப்படுத்துகின்றன. தலைவனோடு தலைவி கொண்ட அன்பு, நிலத்தைவிடப் பெரியது. வானைவிட உயர்ந்தது. கடலைவிட ஆழமானது எனத் தலைவி பாராட்டி உரைக்கின்றாள். மேலும், தலைவனின் பாராட்டு மொழிகளைக் கேட்டு மகிழ்ந்த தலைவி அதனையே,

"பூவொடு புரையும் கண்ணும் வேயென

விறல் வனப்பெய்திய தோளும், பிறையென

மதிமயக்குறூஉம் றுதலும்''[41]

என்று உள்ளம் மகிழ்ந்து கூறுகிறாள் மேலும், தலைவன் தலைவியைப் பாராட்டும் போது,

"குன்றக்குறவன் காதல் மடமகள்

வண்டு படு கூந்தல் தன்தழைக்கொடிச்சி;

முளைவாய் எயிற்றன்

.................................................................

இளையைன் ஆயினும் ஆரணங்கிளளே''[42]

என்று தலைவியின் அழகையும், பண்பினையும் வியந்து கூறுகின்றாள். இது 'பாராட்டெடுத்தல்' என்னும் மெய்ப்பாடாகும்.

**மடந்தப உரைத்தல்**

"மடந்தப உரைத்தல்' என்பது பெண்களது இயல்பாகிய மடம் கெடச் சிலவற்றை தலைவன் கூறுதல் ஆகும். பெண்களுக்கு இயல்பாக உள்ள குணம்

மடம், (அறியாமை) தலைவன் தன் உள்ளத்து வேட்கையினைத் தலைவியிடம் மடம் கெடக்கூறுதலே ‘மடந்தப உரைத்தல்’ என்னும் மெய்ப்பாடாகும். தலைவனின் வரைவு நீட்டிப்பால் வேட்கை மிகுந்த நிலையில் தலைவி தன்மடம் கெட,

“வாராது அவனுறை நீடினேர் வளை

இணையீர் ஓதி றியழத்

துணைநனி யிழக்குவென் மடமையானே’’[43]

என்று கூறுகின்றாள். தலைவன் பிரிந்து மணம்புரியாது நீட்டிப்பின், தலைவியின் உடல் வேறுபாடு புறத்தார்க்குப் புலனாகி தலைவியின் களவொழுக்கத்தை வெளிப்படுத்தியது. அதனால் தலைவி இறந்துவிடுகின்ற நிலைக்குச் செல்லக்கூடும். எனவே, முன்பு இவற்றையெல்லாம் ஆராயது தலைவனோடு கொண்ட அன்பு மடமையால் ஏற்பட்டதாகும் எனத் தலைவி மடப்பம்கெட உரைக்கின்றாள். மேலும், காதல் தோன்றிய காலத்தைத் தலைவன் கூறிய அன்புமொழிகளை நாணத்தால் மறந்தோம் என்றும், காதல் மலர்ந்த நிலையில் அவனது கூற்றை உலகியல் அறிவோடு ஆராய்ந்து தெளிந்து உடன்பட்டொம் என்றும் தலைவி கூறுவதை,

“தான் வரக் காண்குவ நாமெ;

மறந்தே மன்ற நானுடை நெஞ்சே’’[44]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலடிகள் வெளிக்காட்டுகின்றன.

**ஈரமில் கூற்றம்**

ஈரமில் கூற்றம் ஏற்று அலர் நாணுதல் என்பது, தலைவன் தலைவியின் களவு ஒழுக்கத்தை ஊரார் பழித்துக் கூறுதலைக் கேட்டு தலைவி நாணம்

அடைதலே இம்மெய்ப்பாடாகும். களவு ஒழுக்கத்தில் தலைவிக்கும், ஊர் அலர் கூறும் புறஞ்சொல்லின் ஊர் அலருக்கு நாணாத ஆண்களைப் பற்றி,

"மாணா ஊர் அம்பல் அலரின் அலரின்க

நாணும் நிறையும் நயப்பின் பிறப்பிலி''[45]

என்னும் கலித்தொகை பாடற்பகுதி வெளிப்படுத்துகின்றது. "மறைஒழுக்கத்தை சமுதாய மக்கள் பார்த்துக் கொண்டிரார், சுற்றப்புறக் குளவிகள் கொட்டாது விடா எண்ண ஊசிகள் துளையாது போகா. ஆதலின் காதற்களவுக்கு உலகியல் இல்லை என்று தலைவன் கூறுகிறான்.''[46] என்று வ.சுப.மாணிக்கம் கூறுகிறார். இக்கூற்றுக்கேற்பத் தலைவி குறியிடம் வந்தாள், எனினும் ஊர் அலருக்கு அஞ்சி நாணத்துடன் வந்த தலைவியிடம் தோன்றிய 'ஈரமில் கூற்றம் ஏற்றலர்' நாணம் என்னும் மெய்ப்பாட்டினைத் தலைவி வெளிப்படுத்தியதை அறியமுடிகிறது.

**கொடுப்பவை கோடல்**

கொடுப்பவை கோடல் என்பது தலைவன் கொடுகக்கும் பரிசுப்பொருள் எதுவாக இருந்தாலும் அவற்றை தலைவி ஏற்றுக்கொள்ளுதல். உள்ளத்தால் ஒன்றிய காதலர்களின் அன்பு வெளிப்பாட்டைப் புலப்படுத்துவது இம்மெய்ப்பாடாகும். தலைவன் தன் அன்பிற்குரிய தலைவியைச் சந்திக்கும்போது காதல் பரிசாகத் தருவனவற்றை உள்ளமகிழ்ச்சியோடு தலைவி ஏற்றுக் கொள்வாள். உறவின் பிணிப்பை வலுப்படுத்த நினைக்கும் தலைவியின் அன்பு உள்ளத்தை இம்மெய்ப்பாடு காட்டுகின்றது. "அசோகின் தளிரால் ஆகிய ஆடை''[47] குவளைமலர் மாலை''[48] ஆகிய இரண்டையும் அளிக்க அவற்றைத் தலைவி அன்புப் பரிசாக ஏற்றுக் கொண்டாள். உடன்போக்கின் போது

தலைவன் காட்டுமல்லிகை “பாதிரிப்பூ’’[49] என்னும் இரண்டையும் தலைவியின் கூந்தலில் வைத்துவிட்டான். முல்லைச்சரமும் கண்ணியும் சூடிவந்த ஆயர்மகன், அவைகளைத் தலைவிக்கு காதல் பரிசாக அளித்தான். அவற்றை உவகைப் பெருக்கோடு தலைவி பெற்றுக் கூந்தலில் வைத்துக் கொள்கிறாள் . இதனை,

“புல்லினத்து ஆயர்மகன் சூடி வந்ததோர்
முல்லையொரு காழும் கண்ணியும் மெல்லியல்
கூந்தலுள் பெய்து முடித்தோள்’’[50]

என்னும் கலித்தொகை பாடற்பகுதி எடுத்துரைக்கின்றது. வாய்ப்புக்கிட்டிய போதெல்லாம் இரவென்றும் பகலென்றும் பாராது தலைவனைச் சிந்தித்த தலைவி, அன்னையின் இற்செறிப்புச் செயலால் தனிமையில் உறைகின்றாள். தலைவனோடு கூட்டம் பெறாமையால் இற்செறிப்புற்ற நிலையில் தலைவியிடம் தோன்றும் மெய்ப்பாடுகளை,

“தெரிந்துடம் படுதல், திளைப்புவினை, மறுத்தல்,
கரந்திடத்து ஒழிதல், கண்ட வழி உவத்தலொடு
பொருந்திய நான்கே ஐந்தென மொழிப ’’[51]

எனக் கூறுவர் தொல்காப்பியர். இவை ஐந்தாம் நிலைக்குரிய மெய்ப்பாடு என்பர்.

**தெரிந்துடம்படுதல்**

தலைவனின் கூற்றுக்கு தலைவி ஆராய்ந்து உடன்படுதல் தான் தெரிந்துடம்படுதல் என்னும் மெய்ப்பாடாகும். “களவில் புணர்ச்சிக்குப் பின்னர் தலைவன் வழங்கும் அன்புக் கையுறைகளை ஏற்ற தலைவி, ஊரில் உள்ளவர் தூற்றும் பழிச்சொற்களுக்கு நாணி, இச்செய்தியைத் தோழி வாயிலாகச்

செவிலிக்கு அறிவித்தலே தக்கது என்று தனக்குத் தலைவனொடு தொடர்புண்டாய செய்திகளைக் கூற முறையாக அறத்தொடு நிற்பது தெரிந்துடம்படுதல்'[52] என்று விளக்கம் தருகிறார் தி.வே.கோபாலையர். தெரிந்து உடம்படுதல் என்பது தலைமகன் கொடுப்பவை கொண்ட தலைமகள் ஆராய்ந்து உடம்படுதல். தலைவன் கூறுவன அனைத்துமே காதல் நிலையில் ஒருமைப்பட்ட தலைவிக்கு இன்பம் அளிப்பன. அவனது கூற்றுக்களைத் தெளிவுபடுத்தி உடன்பாடு கொள்ளும் தலைவி, அவன் சொற்படி நடக்கவும் முற்படுவாள் தலைவன் திருமணத்தை நீடித்தபோதும் முன்பு,

"அம்மவாழி, தோழி! பாசிலைச்
செருந்தி தாய இருங்கழிச் சேர்ப்பன்''[53]

எனக்கூறி அவன் கூற்றுக்கு உடன்படுகிறாள். இது 'தெரிந்து உடன்படுதல்' என்னும் மெய்ப்பாடு ஆகும்.

**திளைப்பு வினை மறுத்தல்**

திளைப்பு வினை மறுத்தல் என்பது விளையாட்டைத் தலைவி மறுத்தல். தோழிகளோடு விளையாடும் தலைவி வேட்கை நலிதலால் அவ்விளையாட்டு வினையை மறுத்தலாகும். தலைவனோடு காதல் கொள்வதற்கு முன்பு, எவற்றையும் அறியாத தலைவி மனத்திற்கு மகிழ்ச்சியை அளிக்கும் பாவை, அலவனாட்டு, அம்மானை, பந்து விளையாட்டு போன்ற விளையாட்டுகளில் ஈடுபடுவாள், காதல் கொண்டபின் நேரும் களவுப்பிரிவின் கண் ஆற்றாத் தனிமையில் உள்ளம் அழிவாள் தலைவி. அவளது எண்ணங்கள் அனைத்தும் அன்பிற்குரிய காதலனைப் பற்றியதாகவே இருக்கும். எனவே,

மகிழ்ச்சிக்குரியனவாக இருந்த செயல்கள் அனைத்தும் இப்போது வெறுப்பாள் இது 'திளைப்பு வினை மறுத்தல்' என்னும் மெய்பாடாகும்.

காதல் வயப்பட்டுத் தனிமையில், ஆற்றாமையால் தலைவி, முன்பு திளைத்த கிளிக்கு மழலை பயிற்றல், பந்து கழங்கு விளையாடல் அறவே வெறுத்தொதுக்கினாள். அளி, அன்பு, சாயல், இயல்பு போன்றவற்றிலிருந்து அவள் மாறுபட்டாள் என்பதை,

"கிளியும் பந்தும் கழங்கும் வெள்யோள்
அளியும் அன்பும் சாயலும் இயல்பும்
முன்நாள் போலாள்''[54]

என்றவாறு கூறுகிறது அகநானூறு.

**கரந்திடத்து ஒழிதல்**

'கரந்திடத்து ஒழிதல்' என்பது தலைமகள் பெற்றோரால் இற்செறிக்கப்பட்ட வழி, தலைவனது கூட்டத்தை மறுத்த ஏதத்திற்கு நாணியும், அஞ்சியும் தலைவன் முன்னர் வெளிப்படாது மனையிலேயே மறைந்திருப்பாள். தலைவனைக் காணும் வேட்கையில் சிலவற்றை கூறவும் செய்வாள். இது 'கரந்திடத்து ஒழிதல்' என்னும் மெய்ப்பாடாகும்.

இற்செறிப்பால் தானுற்ற துயரைத் தலைவி நான் என் காதலனைக் காணாது துயரம்மிக்க நெஞ்சத்தோடு அழிந்து இல்லையாகின்றேன் என கூறுகின்றாள். மேலும், அன்னையின் காப்பு மிகுதியால் களவில் தலைவியின் ஏக்கம் அதிகமாயிற்று என அவள் பலவாறு எண்ணுகின்றாள். முன்பெல்லாம் நெய்தல் மலர் பறிக்க அனுப்பிய அன்னை, களவுக் காதலை அறிந்த பின்னர்

தற்பொழுதெல்லாம் யாதொரு பிழையும் செய்யாத என்னை நெய்தல் மலர் பறிக்க செல்லுமாறு விடுவதில்லை என்ற தன் ஏக்க மிகுதியை வெளிப்படுத்துகின்றாள்.

“இருவேம் ஆகிய உலகத்து

ஒருவேமாகிய புன்மை நாம் வயற்கே’’[55]

எனக் களவு நிலத்தலைவி, தன் துயர மிகுதியைத் தோழியிடமும் ஆற்றாமை அடைந்த நிலையைத்தன் நெஞ்சிடமே கூறவும் செய்வாள் இதுவே கரந்திடத்து ஒழிதல் என்னும் மெய்ப்பாடாகும்.

**கண்டவழி உவத்தல்**

கண்டவழி உவத்தல் என்பது தலைமகனைக் கண்ட தலைவி மகிழ்தலாகும். களவு ஒழுக்கத்தால் இற்செறிப்புள்ள தலைவி, தன் காதலன் நினைவாகவே இருப்பாள். தலைவன் வரைவோடுவரின் நன்று எனவும் நினைப்பாள். தலைவனின் பிரிவாற்றாது தனித்திருக்கும் தலைவி, தலைவனைக் கண்டபோது பெரும்மகிழ்ச்சியடைவாள். இதுவே, ‘கண்டவழி உவத்தல்’ என்னும் மெய்ப்பாடாகும். இற்செறிப்புற்ற தலைவி, அன்னையின் அருங்காவலைப் பொருட்ப்படுத்தாமல் வந்த தலைவனைக் கண்டபோது,

“நுண்மணல் அடைகரை நிம்மோடு ஆடிய

தண்ணந் துறைவன் மறைஇ

அன்னை அருங்கடி வந்துநின் றோனே’’[56]

என உவந்து கூறுகின்றாள். மேலும், இற்செறிப்புற்ற தலைவியின் நிலையினை அறிந்து தலைவனே தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான். ‘யாம் வந்திருக்கின்றோம்’ என்று தலைவியிடத்து யாராவது சென்று கூறினால், தலைவன் வந்துள்ளான்

என்று மகிழ்ந்து களிப்பினால் மயங்குவாள் என்கின்றான். இது 'கண்டவழி உவத்தல்' என்னும் மெய்ப்பாடு ஆகும்.

இயற்கைப் புணர்ச்சியால் மனமொன்றிய காதலர், இற்செறிப்பு முதலியவற்றால் சந்திக்கவியலாது தவிக்கின்றனர். தலைவனோடு கூட்டம் நிகழாமையால், தலைவி தனிமையில் பொலிவிழந்து புலம்பித்தோன்றுவாள். மனம் துயருற, கூறுவதறியாது கலங்கிக் கூறுவும் செய்வாள் இற்செறிப்பால் தனிமையில் உறையும் தலைவியிடம் நிகழும் மெய்ப்பாடாக,

"புறஞ்செயச்சிதைத்தல் புலம்பித்தோன்றல்
கலங்கி மொழிதல் கையறவுரைத்தலொடு
புலம்பிய நான்கே ஆறென மொழிப''[57]

என்று தொல்காப்பியர் ஆறாவதாகக் கூறுகின்றார்.

**புறஞ்செயச்சிதைத்தல்**

'புறச்செயச்சிதைத்தல்' என்பது தலைமகள் கனவில் தலைவனைச் சந்திக்க இயலாத சூழ்நிலையில் பெரிதும் துயரத்தில் இருப்பாள். பிரிவு ஏக்கம் அவள் உள்ளத்தை வாட்டும். உடனிருக்கும் தோழியர் தலைவியின் உள்ளத்தை அறியாது புறத்தே அவளை அழகுபடுத்துவர். அந்நிலையில் அவள் நினைவு முழுமையும் தலைவனைப் பற்றியதாகவே இருக்க, உள்ளச் சிதைவுடையவளாகக் காணப்படுவாள். தலைவனை கூடப் பெறாமையால் தன் அகத்தே மகிழ்ச்சியின்றி சோர்ந்து இருப்பாள். இதுவே, 'புறச்செயச்சிதைத்தல்' என்பதாகும்.

"நல்கவின் தொலையவும் நறுந்தோள் நெகிழவும்''[58]

என்று என் தோழியின் நன்மைமிக்க அழகு அழியவும், நறிய தோள்கள் மெலியவும் கழன்று விழுதலை அயலார் அறியவும், என்று தலைவியின் நிலையை தோழி கூறுவதைக் காணலாம். தலைவியிடம் தோன்றிய 'புறஞ்செயச் சிதைத்தல்' என்னும் மெய்ப்பாட்டைத் தோழியே கண்டாங்கு கூறுகின்றாள்.

**புலம்பித்தோன்றல்**

புலம்பித் தோன்றல் என்பது பொலிவு அழிந்து தோன்றல் என்பதாகும். தலைவன் பிரிவால் வாடும் தலைவியைத் தோழியர் அழகுபடுத்தும் பொழுது தலைவனோடு கூட்டமின்மையால் வருத்தமுற்ற தலைவி பொலிவிழந்து காணப்படுவாள். சுற்றத்தார் சூழ்ந்திருப்பினும் தலைவன் இல்லாததால் தான் தனியாள் என்று கூறவும் செய்வாள் இதுவே 'புலம்பித்தோன்றல்' என்னும் மெய்ப்பாடாகும்.

"புள் பிறர் அறியவும் புலம்புவந்து அலைப்பவும்
உள்கரந்து உறையும் உய்யா அரும்படர்''[59]

தலைவி தான் அடைந்த நோயை மற்றவர்கள் அறியாதபடி மறைந்து ஒழுகினாள். தலைவி தன் தலைவனை நினைத்த போது தன் தாய் முதலிய சுற்றத்துள் இருப்பினும் தனித்திருப்பவளாக உணர்வாள். அத்தனிமையுணர்ச்சியே அவளைப் பெரிதும் வருத்தும் இதனையே 'புலம்புவந்து அலைப்பவும்' என்றாள் இந்நிலை 'புலம்பி தோன்றல்' என்ற மெய்ப்பாடு தோன்றுவதை காணலாம்.

**கலங்கி மொழிதல்**

'கலங்கி மொழிதல்' என்பது தலைவி கலக்கமுற்றுக் கூறுதலாகும். தனிமையால் வருந்தும் தலைவி கூற்றத்தினர் வினவ, அவள்கையும் களவுமாக.

பிடிப்பட்ட கள்வரைப் போன்று மனத்தடுமாற்றமடைந்து கூறுதல் 'கலங்கி மொழிதல்' என்னும் மெய்ப்பாடாகும். இற்செறிப்புற்ற தலைவி, கலங்கிய நெஞ்சினளாய் மனத்தடுமாற்றத்தோடு,

" மாலை வந்தன்று மன்ற
காலையன்ன மாலை முற்துறத்தோ''[61]

எனக் கலங்கி மொழிகின்றாள்.

இற்செறிப்புற்ற தலைவி தன் தலைவனுடன் கூடி மகிழ்ந்திருக்கும். வாய்ப்பின்றித் தனித்திருந்து கலங்கிய நெஞ்சினளாகக் காணப்படுவாள் பிரிவின் ஏக்கத்தால் கண்துயில் மறுத்தாள். தலைவியிடம் தோன்றிய இம்மெய்ப்பாட்டை,

"அம்மவாழி தோழி நாமழ
நீல இருங்கழி நீலங் கூம்புள்''[60]

என்று ஐங்குறுநூற்றுப் பாடலடிகள் புலப்படுத்தும்

**கையறவு உரைத்தல்**

'கையறவு உரைத்தல்' என்பது செயலறவு தோன்றக் கூறுதலாகும். பெற்றோர்கள் தம் குடிப்பெருமையை கருதி கடமையுணர்வால் களவுத்தலைவியை வீட்டுக் காவலில் வைப்பார்கள் தனிமையில் வாடும் தலைவியின் எண்ணங்கள் அனைத்தும் தலைவனைப் பற்றியதாகவே இருக்கும் களவுத் தலைவனோடு கூட்டமின்மையால் துயரம்மிகுந்து மனச்சோர்வு அடைவாள். மனத்திற்கினிய செயல்களையெல்லாம் விட்டொழிவாள் சில வேளை செயலறவு தோன்றக்கூறவும் செய்வாள். இதுவே

‘கையறவு உரைத்தல்’ என்னும் மெய்ப்பாடாகும். காப்பு மிகுதிக்கண் ஆற்றாமை மிக்குற்ற தலைவி தன்கையிற் வினையை,

“பூ இடைப் படினும் யாண்டு கழிந்தன்ன
நீர் உறை மகன்றில் புணர்ச்சி போலப்
பிரிவரிதாகிய தண்டாக்காமமோடு
உடனுயிர் போகுகதில்லை கடனறிந்து’’[62]

என தோழிக்குக் கூறுகின்றாள். இம்மெய்ப்பாடுகளை பெண்பாலர் அனைவருக்கும் பொதுவானது எனலாம். இம்மெய்ப்பாடுகள் புணர்ச்சி இல்லாதபோது தோன்றுதலாகும். பெரும்பான்மை என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறாக தொல்காப்பியர் குறிப்பிடும் களவுக்கால மெய்பபாடுகள் இருபத்து நான்கும் களவுக்காலத்தில் இருவரிடமும் தோன்ற வேண்டும் என்ற நியதி இல்லை. தலைவன், தலைவி சந்திப்பின் போது இருவரும் மனம் ஒன்றுவதற்கு முதல் நிலையாகக் கூறப்பட்ட ‘புகுமுகம்புரிதல்’ முதலான நான்கு மெய்ப்பாடுகளும் தோன்ற வாய்ப்புண்டு. இருபத்தி நான்கு மெய்ப்பாடுகளுள் ஒருசில மெய்ப்பாடுகள் காதல் வாழ்வு தொடங்கிய பின்பும் தோன்றலாம். இலக்கிய வழக்காறும், உலகியல் வழக்காறும் அறிந்த மெய்ப்பாடுகளையே தொல்காப்பியர் களவுக்கால மெய்ப்பாடுகளாகத் தந்துள்ளார் எனக்கூறமுடியாது.

**II பிரிவுக்கால மெய்ப்பாடுகள்**

இம்மெய்ப்பாடுகள் புணர்ச்சிக்கு நிமித்தமாகாதன என்று கூறினாலும், அவற்றை மிகவும் ஆராய்ந்து உணர்ந்தால் புணர்ச்சி நிமித்தம் ஆகும். பிரிவுத்துயரில் காதலர் அளப்பரிய காதற்பெருக்கை ஒருவரிடம் ஒருவர் கொண்டுள்ள அன்புப் பிணைப்பைக் காட்டுவதாகும். காதலரின்

உணர்ச்சிகளைச் சிறப்புற எடுத்துக்கூறும் அகப்பாடல்களில் பிரிவால் தோன்றும் துயரத்தை காட்டும் பாடல்களே பெரும்பான்மையன இப்பாடல்களில் காதலை எல்லையாக மட்டும் காட்டுபவையாக,

“இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல்
எதிர்பெய்து பரிதல், ஏதம் ஆய்தல்
பசியட நிற்றல், பசலை பாய்தல்
உண்டியிற் குறைதல், உடம்பு நனி சுருங்கல்
கண்துயில் மறுத்தல், கனவொடுமயங்கல்
பொய்யக் கோடல், மெய்யே யென்றல்
ஐயஞ்செய்தல், அவன் தமர் உவத்தல்
அறனழித்துரைத்தல், ஆங்கு நெஞ்சழிதல்,
எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல்,
ஒப்புவழி உவத்தல், உறுபெயர் கேட்டல
நலத்தக நாடிற் கலக்கமு மதுவே’’[63]

மேற்கண்ட இருபது மெய்பாடுகளைப் பிரிவுக்கால மெய்ப்பாடுகளாகத் தொல்காப்பியர் கூறுகின்றார். அவைகளில் அவன்தமர் உவத்தல், ஒப்பு வழி உவத்தல், உறுபெயர் கேட்டல் என்னும் மூன்று மெய்ப்பாடுகளும் துயரங் கலந்த உவகை மெய்ப்பாட்டைச் சார்ந்தன. ஏனைய பதினெழு மெய்ப்பாடுகளும் பிரிவுத்துயரத்தால் தோன்றுவனவாகும்.

**இன்பத்தை வெறுத்தல்**

இன்பத்தை வெறுத்தல் என்பது ஒப்பனை செய்தல் முதலானவற்றை வெறுத்தலாகும். தென்றல், நிலவு முதலியனவற்றை வெறுத்தலும் ஆகும்.

தலைவனோடு கூடியிருங்கும் போது இன்பத்தை கொடுத்த அனைத்தும் பிரிவிக்காலத்தில் தலைவிக்கு வெறுப்பளிக்கின்றன. யாழும், குழலும், நிலவும், மலரும் முதலான இன்பத்திற்கு ஏதுவான பொருள்கள் கண்டவழி, அவற்றை வெறுத்துரைத்தலே ‘இன்பத்தை வெறுத்தல்’ என்னும் மெய்ப்பாடுஆகும். உடனுறைவோர்க்கு இன்பத்தைத் தரும் மாலைப்பொழுது பிரிவில் துயருறும் தலைவிக்கு இன்னா மாலையாகின்றது. மாலைதன் துயரை மிகுதிப்படுத்துவதாக உணருகின்றாள் தலைவி. எனவே, மாலைக் காலத்தை,

“உயிர்செலத் துணை தரும்மாலை’’[64]

என்றும்

“கையுறு மாலையோடு பொருந்தி’’[65]

என்றும்

“புண்கண் மாலை’’[66]

என்றும்

“கொலை குறித்தன்னமாலை’’[67]

என்றும்

“அருள்இல் மாலை’’[68]

எனப்பலவாறு வெறுத்துரைக்கின்றாள். மேலும், பருவங்கண்டு ஆற்றாதவளாய் தலைவி தலைவனோடு இருந்தபோது இன்பத்தை மிகுவித்த குயிலோசை, அருவிநீர் ஓசை, பூவிலை மடந்தை ஓசை முதலியவற்றை வெறுத்துக் கொடிது எனக்கூறுகின்றாள் எனலாம்.

**துன்பத்துப்புலம்பல்**

காதலர் பிரிவாற்றாது துன்புறும்போது தான்பெறும் துன்பத்தை வாய்விட்டுக் கூறிப்புலம்புதல் துன்பத்துப்புலம்பல் என்னும் மெய்ப்பாடாகும்.

“நின்னுறு விழுமம் களைந்தோள்

தன்உறு விழுமம் நீற்துமோ! எனவே’’[68]

பிரிவுற்ற நிலையில் மெலிவுற்ற தலைவி,

“யானே தோழி நோய்ப்பாலனே’’ [69]

என்றும்

“அந்த நீளிடை அழப்பிரிந்தோரே’’[70]

என்று தன் துயரத்தை வாய்விட்டுக்கூறி புலம்புகிறாள்.

**எதிர்பெய்து பரிதல்**

எதிர்பெய்து பரிதல் என்பது பிரிவின் கண் தலைவி, தலைவனையும், தேர் முதலானவற்றையும் கண் முன்னர்க் கற்பனையில் காணும் உருவளித்தோற்றம் ஆகும். பிரிவுக்காலத்தில் தலைவி தலைவனது உருவளித் தோற்றம் கண்டும், தலைவன், தலைவியின் உருவெளித்தோற்றம் கண்டும் இரங்குதல்‘எதிர்பெய்து பரிதல்’ என்னும் மெய்ப்பாடாகும்.

“திண்டேர் வலவ கடவுஎனக் கடைஇ

இன்றே வருவர் ஆன்றி கம்பனி என’’[71]

எனும் அடிகளில் தலைவன் வினைமுடித்துத் திட்பமான தேரினை விரைவாகச் செலுத்தி இன்றே வருவார் எனக் கூறுமிடத்துக் கற்பனையில் காணும் உருவெளித்தோற்றம் வெளிப்படுகின்றது.

மேலும்,

“புறாவின் காண்வர வாரள மகளோ நீயே’’[72]

என தலைவியை எதிர்பெய்து கொண்ட தலைவன் வருந்திக் கூறுகின்றாள்.

**ஏதம் ஆய்தல்**

ஏதம் ஆய்தல் குற்றம் ஆய்தலாகும். தலைவன் மீதுக்கொண்ட அன்பால் தலைவிக்கு ஏற்படும் அச்ச உணர்வு. களவுக் காலத்தில் தலைவனும் தலைவியும் விழையும் கூட்டத்திற்கு இடையூறுகள் பலநேரிடும் அத்தகைய இடையூறுகள் பலவற்றை ஆராய்தல்‘ஏதம் ஆய்தல்’ என்னும் மெய்ப்பாடாகும். தலைவன் வரும் வழியில் ஏற்படும் இன்னல்களை ஆராய்வாள் தலைவி. ‘இரவுக்குறிக்கு வரும் தலைவனுக்கு விலங்குகளால் ஏதாவது நேரிடுமோ? அக்கொடிய வழியை எவ்வாறு கடப்பாரோ? என்ற நிலைகளில், ‘ஏதம் ஆய்தல்’ மெய்ப்பாடு தலைவியிடம் தோன்றும் தலைவன் வாராமைக்குரிய காரணங்களை ஆராயும் தலைவி அலராவதற்கு அஞ்சினன் என்றும், அலரால் நேரும் வீதம் குறித்தும்.

“எந்தை அறிதல் அஞ்சிக்கொல்?

அதுவே மன்ற வாராமையே’’[73]

எனத் தந்தையின் வலிமையும் கொடுமையையும் அறிந்து, தனக்கு வரம் ஏதம் குறித்தும் உரைக்கின்றாள். தலைவனைத் தன் உள்ளத்தே வரைந்துகொண்ட தலைவிபால் தோன்றும் இம்மெய்ப்பாடு அவளது அன்பு மிகுதியைக் காட்டுவதாகும்.

**பசியட நிற்றல்**

பசி வருத்தவும் தலைவனின் பிரிவால் தலைவி அதற்குதளராது உணவை மறுத்தல் ‘பசியடநிற்றல்’ என்னும் மெய்ப்பாடாகும். பிரிவுத்துயரால் இன்பத்தை வெறுத்துத் துன்பத்துப் புலபும் தலைவி உணவையும் வெறுத்து ஒதுக்குவாள்.

“.......................................................... இனியான்

உண்ணலும் உண்ணேன்; வாழலும் வாழேன்’’[74]

பசி தோன்றினும் உண்ணாது தன் உள்ளத்துணர்வை உறுதி கொண்டு உண்ண மறுக்கின்றாள். இவையே பசியடநிற்கின்றாள் என்பதை வெளிப்படுத்துகின்றன. இவளது பட்டினி நோன்பினை அறிந்த தோழி,

“தண்ணந் துறைவன் நல்கின்

ஒண்ணுதல் அரிவை பாலாரும்மே’’[75]

என செவிலிக்கு தெரிவிக்கின்றாள். தலைவியின் கற்புத்திறத்தை இம்மெய்ப்பாடு உணர்த்துகிறது.

**பசலை பாய்த்தல்**

தலைவன் பிரிவால் தலைவி எய்தும், ‘பசலை பாய்தல்’ என்பது ஒருவகை மெய்ப்பாடு. தலைவன் பிரிவால் தலைவிக்கு நேரும் பசலை பற்றியும், அவன் வந்த போது அது மறைவது குறித்தும் சங்கப்பாடல்கள் புலப்படுத்துகின்றன. பசலையால் தலைவியின் தோள்கள் நலிவுறும், நிறம் கெடும். தலைவியின் தோல் நலத்தைப் பசலை அழிக்கும் தன்மையை,

“நலங்கவர் பசலை’’[76]

என்றும்

“ஆர்ப்பது போலும் பொழுது, என்அணிநலம்

போப்பது போலும் பசப்பு’’[77]

என்றும்

“பழநலம் இழந்து பசலைபாய’’[78]

முறையே ஐங்குறுநூறு, கலித்தொகை, நற்றிணையடிகள் புலப்படுத்துகின்றன. பசலையால் தலைவியின் மாமைக்கவின் உண்ணப்பட்ட நிலையை,

“கன்றும் உண்ணாது கலத்தினும் படாது,

நல்லான் தீம்பால் நிலத்துக்காக ஆங்கு

எனக்கும் ஆகாது என்னைக்கும் உதவாது

பசலை உணி இயர் வேண்டும்

திதிலை அல்குல் என் மாமைக் கவினே’’[79]

குறிஞ்சிப்பாட்டில்,

‘விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோய்’’[80]

என்கிறார் கபிலர். தலைவனது பிரிவு தலைவியின் அணிகலன்களை நெகிழச் செய்ததோடு, பசலை நோயையும் உண்டாக்கியது. அதில் பசலை பாய்தல் புலனாகிறது. தலைவியின் அகநோய் மிகுதியையும், அதனால் தலைவியிடம் தோன்றிய பசலை பாய்தல் கண்கழலுதல் ஆகிய மெய்ப்பாடுகள் வெளிப்படுவதையும் உணரலாம்.

**உண்டியிற் குறைதல்**

உண்டியிற் குறைதல் என்பது உணவை குறைந்து உண்ணுதல் பிரிவாற்றாத தலைவி வழக்கத்திற்கு மாறாக அளவு குறைந்து உண்ணுதல், தலைவி தலைவன்மேல் கொண்ட காதல் மிகுதியால் உணவை உண்ணாது குறைந்த அளவே உண்ணுவாள் என்பதை,

“பொன்செய் வள்ளத்துப் பால் கிழக்கிருப்ப’’[81]

என்னும் நற்றிணைப் பாடலடியில் வெளிப்படுகிறது. தலைவியிடம் ‘உண்டியில் குறைதல்’ மெய்ப்பாடு தோன்றியமைக் குறிப்பாக உணர்த்தப்படுகிறது.

**உடம்புநனி சுருங்கல்**

'உடம்பு நனி சுருங்கல்' என்பது உண்ணாமை காரணமாகத் தன் உடம்பு சுருக்கம் உறுதலாகும். பிரிவாற்றாமையால் காதலர்கள் உணவு உட்கொள்ளாதிருத்தலுண்டு. இதனால் உடல்மெலிவுறும் பிரிவுத் துயர் மிகுதியே இம்மெய்ப்பாடு தோன்றக் காரணமாகிறது.

இதனை,

"பெருந்தோள் நெகிழவும்

உண்ணா உயக்கமொடு உயிர்செலச்சா அய்''[82]

என்னும் அடிகளால் புலப்படுகின்றது. 'வளைநெகிழ,' 'இடைநெகிழ' 'தொடிநெகிழ' என்னும் தொடர்கள் உடம்பு நனிசுருங்கல் மெய்ப்பாடு தலைவிக்குத் தோன்றியமை வெளிப்படுத்துகின்றன.

**கண்துயில் மறுத்தல்**

'கண்துயில் மறத்தல்' என்பது உறங்காமையாகும். பிரிவுத் துயரத்தால் காதலர் உறக்கம் கொள்ளாமையே 'கண்துயில் மறுத்தல்' என்னும் மெய்ப்பாடாகும். இம்மெய்ப்பாடு தோன்ற அடிப்படையே காமநோய். தலைவி தனது காமநோய் மிகுதியால் இரவில் 'கூறுப்புகுகின்ற இரவும் துயில் கொள்ளாது' எனக்கூறுகிறாள். தலைவியின் மேனியழகும் இம்மெய்ப்பாட்டால் அழிந்து விடுகின்றது.

இதனை,

"மீன்கண் துஞ்சும் பொழுதும்

யான் கண் துஞ்சேன் யாதுகொல் நிலையே **?**''[83]

என்று நற்றினை இலக்கியம், தலைவி கூற்றாகக் கூறுகிறது.

**கலித்தொகைத் தலைவியும்**

'நெஞ்சாறு கொண்டாள்; அதற்கொண்டும் துஞ்சேன்''[84]

என்று கூறுகின்றாள். பாசறைத் தலைவன், தலைவியை நினைக்கும் தோறும் துயில் கொள்ளாத நிலையை,

"அஞ்சில் ஓதியை உள்ளுதெறும்

தஞ்சாது அலமரல் நாம் எதிர்த்தனமே''[85]

என்ற அடிகள் உணர்த்துகின்றன. இம்மெய்ப்பாடுகள் தலைமக்களிடையே பிரிவுத்துயரால் தோன்றுகின்றன.

**கனவொடு மயங்கல்**

'கனவொடு மயங்கல்' என்பது கனவை நனவெனக் கருதி மயங்குதலாகும். காதல் மிகுதியே கனவு தோற்றக் காரணமாயிற்று எனலாம்.

இதனை,

"அலந்தாங்க அமையலென் என்றானைப்பற்றி, என்

நலம் தாராயோ ? எனதொடுப்பேன் போலவும்,

கலந்து ஆங்கே என் கவின் பெற முயங்கி

'புலம்பல்ஓம்பு' என, அளிப்பான் போலவும்''[86]

என்னும் கலித்தொகை அடிகள் புலப்படுத்துகின்றன. பிரிவின் கண்ணே நனவில் தோன்றும் இடையறாத நினைவால், கனவில் காதலரைக்கண்டு விழித்தபின் கனவுக்கும் நனவுக்கும் வேறுபாடு அறியாது மயங்கல் இயல்பு, அத்தகைய நிலையே 'கனவோடு மயங்கல்' என்னும் மெய்ப்பாடாகும்.

**பொய்யாக் கோடல்**

'பொய்யாக் கோடல்' என்பது தலைவன் கூறும் உண்மையைக் காதல் மிகுதியால் பொய்யாகக் கொள்ளுதலாகும். தலைவன் ஒருவன் தன் மனதிற்கினிய தலைவியிடம், காதல் மொழிகளைப் பேசும் போது பிரியேன் என அவளிடம் சூளுரை செய்து கொடுத்தான் ஆனால் உறுதிக் கூறியவாறு அவனால் பிரியாதிருக்க முடியவில்லை. தான் உரைத்த சூளுரையைப் பேணவில்லை. பொய்த்துவிட்டான் என்பதை,

"'இலங்கும் அருவித்து, இலங்கும் அருவித்தே
வானின் இலங்கும் அருவித்தே தானுற்ற
சூள் பேணான் பொய்த்தான் மலை''[87]

என்று கலித்தொகை பாடல்கள் மூலம் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

**மெய்யே என்றல்**

தலைவன் பொய் கூறினாலும் அவற்றை தலைவி மெய் (உண்மை) என்று நினைப்பது மெய்யே என்றல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவன் அன்பிலன் எனத்தோழி இயற்பழிக்க, தலைவியின் கூற்றுக்களில் இம்மெய்ப்பாட்டின் வெளிப்பாடு உள்ளது.

"......................................... நாடன்
இனியன் ஆகலின் இனத்தின் இயன்ற
இன்னாமையினும் இனிதோ
இனிதெனப்படூஉம் புத்தேள் நாளே''[88]

எனத் தலைவி இயற்பட மொழிகின்றாள். கார்காலம் வந்தும் தலைவன் வரவில்லை எனினும், வந்துவிடுவான் என்றாள் தலைவி,

“கானம் காரெனக் கூறினும்

யானதே றேனவர் பொய் வழங்கலரே’’[89]

எனக் கூறித் தலைவன் தன்னிடம் பொய் கூறியிருக்கமாட்டான் எனத் தனது நம்பிக்கையை வெளிப்படுத்துகின்றாள். இங்கு மெய்யே என்றல் என்னும் மெய்ப்பாடு தோன்றுகிறது.

**ஐயம் செய்தல்**

ஐயம் செய்தல் என்பது தலைவியிடம் தோன்றும் ஐயம். தலைவன், தம்மை வரையாது விடுவாரோ எனத் தலைவி ஐயுறுதலும், பிரிவிடத்துத் தலைவன் மீதுள்ளகாதல் மிகுதியால் குறித்த பருவம் வந்தவழியும் தூது வாராமையால் தன்மை மறந்தாரோ என ஐயுற்று மனம் வருந்துதல் ஐயம் செய்தல் என்னும் மெய்ப்பாடாகும்.

“பிரிதல் வல்லியர், இதுநத் துறந்தேற்

மறந்தும் அமைகுவர் கொல் ?லென் றெண்ணி’’[90]

என்ற அடிகள் பிரிந்த தலைவன் எம்மை மறந்து இருப்பாரோ ? எனத் தலைவி ஐயுற்றதை வெளிப்படுத்துகின்றன.

**அவர்தமர் உவத்தல்**

‘அவர்தமர் உவத்தல்’ என்பது தலைவி, தலைவனின் உறவினர்களை கண்டபோது மகிழ்வது. தலைவி தலைவனது சுற்றத்தாரைக் கண்டவழி உவத்தல் இம்மெய்ப்பாடாகும்.

“செய்வன சிறப்பின் சிறப்புச் செய்துஇவ்விரா

எம்மொடு சேர்ந்து சென்றீ வாயால், செம்மால்’’[91]

என்ற பாடற்பகுதியினுள் தலைவனின் புதல்வனைக் கண்டு பரத்தை மகிழ்ந்ததாக உரைக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

**'அறன் அழிந்துரைத்தல்'**

அறன் அழிந்துரைத்தல் என்பது தலைவி அறத்தினை அழித்துக் கூறுதலாகும். அறத்தினையே வெறுத்துக்கூறுதல் 'அறனழிந்துரைத்தல்' என்னும் மெய்ப்பாடாகும். சூளுரைத்தவாறு தலைவன் தலைவியை மணந்து கொள்வது தான் அறம். ஆனால் வரைவு நீட்டித்தமையால் தலைவன் பொய் கூறினான். என்கிறாள் தலைவி, அதனால் அறத்தையே வெறுத்தாள் போல,

"யாரும் இல்லைதானே கள்வன்
தான்அது பொய்ப்பின் யானெவன் செய்கோ்''[92]

என வரைவு வேட்கை உணர்ச்சியால் உரைக்கிறாள் தலைவி.

**எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல்**

எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல்' என்பது யாதாயினும் ஒரு பொருளைக் கண்டவிடத்துத் தலைமகனோடு ஒப்புமை கொள்ளுதலாகும். சிறைப்புறத்தே மழையில் நனைந்து வந்த தலைவனைக் கண்ட தலைவி, அவனை மழையில் நனைந்த மனையோடு ஒப்புமைப்படுத்தி,

"ஆரம் நாறும் மார்பினன்
மாரியானையின் வந்து நின்றனனே''[93]

எனக் கூறுகின்றாள். பொருள்வயிற் பிரியும் தலைவனிடம்,

"கணைகழி கல்லாத கல்பிறங்குஆர்இடை
பணைஎருத்து எழில் ஏற்றின் பின்னர்ப்
பிணையுங் காணீரோ ? பிரியுமோ, அவையே''[94]

எனக் கூறுகின்றான். தலைவனை எருதுக்கும், தன்னைப் பிணைமானுக்கும் ஒப்புமை கொண்டு கூறுதலால் எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல் என்னும் மெய்ப்பாடு வெளிப்படுகிறது.

**ஒப்புவழி உவத்தல்**

ஒப்பு வழி உவத்தல் என்பது தலைவனோடு மற்றவர்களை ஒப்புமைப்படுத்தி மகிழ்தல். ஒப்புமை உண்டாகிய வழி, உவமை கொண்டு, அதனால் உவகை தோன்றுவது 'ஒப்புவழி உவத்தல்' என்னும் மெய்ப்பாடாகும். கண்டவர் 'காமுறும் காட்சியழகு உடையவன்' என தன் தலைவனைத் தலைவி ஒப்புமை கூறி உவத்தல்,

"ஐய காமரு நோக்கினை, 'அத்தத்தா' என்னும்நின்
தேமொழி கேட்டல் இனிது மற்று இன்னாதே''[95]

எனக் கூறுகின்றாள் இவை 'ஒப்புவழி உவத்தல்' என்னும் மெய்ப்பாடாகும்.

**உறுபெயர் கேட்டல்**

'உறுபெயர் கேட்டல்' என்பது தலைவனின் பெயர் கேட்டு மகிழ்தலாகும். தலைவன் பெயரும் புகழும் பிறர் கூறக் கேட்டு தலைவி மகிழ்ச்சி அடைவதே 'உறுபெயர் கேட்டல்' என்னும் மெய்ப்பாடாகும். தலைவன் இருக்கும் இடம், ஊர், மலை, புகழ் இவற்றைத் தோழி, எடுத்துரைக்க தலைவி மகிழ்வடைந்தமையைப் பெரும்பாலான சங்கப்பாடல்கள் காட்டுகின்றன. தலைவியின் மனத்தகத்தே உறையும் தலைவனது நாட்டின் மலையைப் பாடும்போது தோழி இடையே புகுந்து.

“அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே’’[96]

எனக் கூறுகின்றான். தலைவி, தலைவனின் உறுபெயர் கேட்டு மகிழ்கின்றாள். இவை தவிர குறிஞ்சிப் பாடல்களில் வெறியாட்டு, வெள்ளைப்பாட்டு நிகழ்வுகளின் போதும் தலைவியிடம் இம்மெய்ப்பாடு தோன்றுகிறது.

**கலக்கம்**

கலக்கம் என்பது மனம் கலங்குதலாகும். பிரிவுத்துயர் மிகுதியால் மனம் கலங்கிய காதலர், ஆற்றாமையால் சொல்லத்தகாதன சொல்லுதல் ‘கலக்கம்’ என்னும் மெய்ப்பாடாகும். வரைவிடைப்பிரிவின் ஆற்றாமையால் நலம் இழந்து உயிர்போகும் அளவுதுயர் உறுபவளாக கூறுகின்றாள் தலைவி. காப்பு மிகுதிக்கண் தலைவனுடன் கூட்டம் பெறாத தலைவி,

“துயரத்தால் மெலிவதைவிட இறந்துபடுதல் நன்று’’[96]

“இறந்துபாடு எய்தாது உயிர்வாழ்வது செய்வோம் ஆயினோம்’’[97]

என்றும் கூறுகின்றாள். பிரிவுக்காலத்தில் தலைவி தன் மனக்கலக்கத்தைச் சாதலை எல்லையாக நிறுத்திக் கூறுகின்றமையால் இம்மெய்ப்பாடு தோன்றியதாகப் பாடியது. சங்கக் காலத்தலைவன் தலைவியரின் மெய்யன்பினைப் புலப்படுத்துவதாக உள்ளது.

## 2.5.வரைவுக்கு வழி வகுக்கும் மெய்ப்பாடுகள்

வரைவு என்பது திருமணம். களவுக் காதலர் கற்புவாழ்வில் அடியெடுத்து வைக்க திருமணம் இன்றியமையாததாகும். தமிழ்க்காதலில் வ.சுப. மாணிக்கம்.

வரைவின் சிறப்புக்கருதி, ‘மறைவுக் காதலர்கள் ஊரில் இருப்பினும், ஊர்விட்டு ஓடினும் வரைவு என்னும் பெருவேலிக்கு உட்பட்டுக் கணவன் மனைவி என்று பலர் வெளிப்படையாகச் சொல்லும் இயல்பு நிலையை ஒருநாள் அடைதல் வேண்டும். இந்நிலைபேறு அடையும் இன்பக் கனவைத்தான் பெற்றோரும் போற்றி வரவேற்பர். சமுதாயம் நல்லொழுக்கம் என்ற உடன்பாடு அளிக்கும் களவின் முடிவு, கற்பு என்பது அகத்திணை வலியுறுத்தும் அறங்களுள் தலையனானது’’[98] என்று கூறுவது குறிப்பிடத்தக்கது.

**வரைவு உணர்ச்சி மெய்ப்பாடுகள்**

களவுக் காலத்தில் தலைவனோடு ஒன்றியிருந்த தலைவியின் உள்ளத்தில் களவு பற்றிய ஊராரின் புறவோட்டங்களால் வரைவு வேட்கையின் உணர்ச்சிமிகும். இதனை மெய்ப்பாட்டுக் குறிப்புகளால் தலைவி தோழிக்கும், தலைவனுக்கும் உணர்த்திக் காட்டுவாள். தோழியும் தலைவியின் மெய்ப்பாட்டுக் குறிப்புகளால் அவளவு வரைவு வேட்கையை உணர்ந்து வரைவு வேண்ட முற்படுவாள். வரைவு வேட்கைக்குரிய மெய்ப்பாடுகளாக,

“முட்டுவயிற் கழறல், முனிவு மெய்நிறுத்தல்
அச்சத்தின் அகறல், அவன் புணர்வுமறுத்தல்
தூது முனிவின்மை, துஞ்சிச் சேர்தல்
காதல் கைம்மிகல், கட்டுரையின்மையென்று
ஆயிரு நான்கே அழிவில் கூட்டம்’’[99]

என்பனவற்றை தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். இவை காதல் வாழ்வில் பிறர் அறிய மகிழ்ச்சியான இல்லற வாழ்க்கைக்கு வழிவகுப்பன எனலாம்.

**முட்டுவயிற் கழறல்**

'முட்டுவயிற்கழறல்' என்பது களவு இடையீடுபட்டபோது அதற்கு வருந்தாமல் 'இவ்வாறாகிநின்றது' எனத் தலைவனைக் கழறி உரைத்தலால் வெளிப்படும் மெய்ப்பாடாகும்.

அகநானூற்றில் வரும்,

"இரும்பிழி மகா அர் அழுங்கல் மூதூர்
விழவுஇன்றுஆயினும் துஞ்சாதாகும்
..................................................................................
..................................................................................
பல்முட்டின்றால் தோழி நம் கனவே''[100]

என்ற அடிகள் படித்து இன்புறத்தக்கன. இப்பகுதியை உள்ளடக்கிய பாடலுள் ஊர்துஞ்சினும், அன்னை துஞ்சாள், அன்னை துஞ்சினும், ஊர்காவலர் துஞ்சான், காவலர் துஞ்சினும், நாய் குரைத்தல், நாய் குரையாது உறங்கினும் , நிறைந்த நிலாவொளிர்தல், நிலவு மறையினும், கூகை குழறல், கூகை குழறதாயினும் கோழி கூவுதல் என்னும் களவொழுக்கத்தில் ஏற்படும் முட்டுப்பாடுகளையெல்லாம் தலைவியால் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. இது. ஊராரும், சேரியாரும் களவொழுக்கத்தைஅறியுமுன் வரைவு கொள்ள வேண்டும் என்ற முனைப்பின் வெளிப்பாடேயாகும். தலைவனும் காமுற்றோர் உடனுறைதற்குப் பல இடையூறுகள் உண்டென உணருமாற்றை 'உடனுறை அரிதே காமம்' என்னும் குறுந்தொகை அடிகள் கூற்றுவழி அறியலாம்.

**முனிவு மெய்ந்நிறுத்தல்**

'முனிவு மெய்ந்நிறுத்தல்' என்பது வந்த துன்பத்தைப் பிறர்க்குப் புலனாகாமல் மெய்யின் நிறுத்தலாகும். அதாவது வரைவு நீட்டிக்கும் தலைவனுக்குத் தலைவி தன் உள்ளத்து வெறுப்பை மெய்ப்பாடு குறிப்பால் உணர்த்துவது 'முனிவு மெய்ந்நிறுத்தல்' என்னும் மெய்ப்பாடு ஆகும்.

"நோமென் நெஞ்சே நோமென் நெஞ்சே''[101]

என்று தலைவி தான் உற்ற துன்பத்தை தன் நெஞ்சிற்கு உணர்த்துகின்றாள். மேலும், இனிய இல்லற வாழ்க்கையை விரும்பும் தலைவியானவள், தலைவன் அறியும் வகையில்,

"இன்னுயிர் கழிவதாயினும் நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காம நோயெனச் செப்பாதீமே''[102]

என வாழ்க்கையை முனிந்து கூறுகின்றான்.

**அச்சத்தின் அகறல்**

'அச்சத்தின் அகறல்' என்பது யாருக்கும் தெரியாமல் கூட்டத்தினின்று அகன்று செல்லுதல். தலைவனின் களவொழுக்கத்தில் தலைவி, ஊராரின் அலருக்குத்தான் அஞ்சுவதாகக் தலைவி கூறுதலும், தலைவன் வழியில் துன்பம் நேருமோ என அஞ்சுவதாகக் கூறலும்'அச்சத்தின் அகறல்' என்னும் மெய்ப்பாடாகும். ஊரார் கூறும் அலர்மொழிக்கு அஞ்சும் தலைவி தனது நிலையை,

“புன்னை அம்சேரி இவ்வூர்

கொன்னலர்தூற்றும் தன் கொடுமையானே’’[103]

எனும் வரிகள் உணர்த்துகிறது. இதில் அச்சத்தின் அகறல் எனும் மெய்ப்பாடு புலப்படுத்தப்பட்டுள்ளது. அவ்வாறே,

“மாரிவானம் தலைஇ நீர்வார்பு

இட்டு அருங்கண்ணபடுஇமு இயலின

இருளிடை மதிப்புழிநோக்கு அவர்

தளரடி தாங்கிய சென்ற தின்றே’’[104]

என்ற அகப்பாடற்பகுதியிலும் இரவின் இருளினால் அவனுக்குத் துன்பம் வருமோ எனத் தலைவி அஞ்சியது உரைக்கப்பட்டுள்ளது.

**அவன்புணர்வு மறுத்தல்**

அவன்புணர்வு மறுத்தல் என்பது தலைமகன் புணர்ச்சிக்கண் வாராக்காலத்திலும் மனம்கலங்காது நிற்கும் நிலையாகும். பகற்குறி வருவானை இரவுக்குறி வாவென்றும், இரவுக்குறி வருவானைப் பகற்குறி வாவென்றும் உரைப்பர் இருகுறியும் மறுத்து உரைத்தலும் உண்டு. இருகுறியும் மறுத்துக் களவின் கூட்டத்தை விலக்கும் வரைவின் வேட்கையின் வெளிப்பாடே ‘அவன் புணர்வு மறுத்தல்’ என்னும் மெய்ப்பாடாகும்.

“பசப்ப உடல்மெலிவுத் துன்பத்தேடு தலைவன்

இரவுக்குறி வருதலுக்குத்தலைவி வருந்துவாள்’’[105]

எனக் கூறியும் அவன் கூட்டத்திற்குத் தடைவிதிப்பாள். இருகுறியிலும் தலைவன் தலைவியை அடைவது மிகவும் அரிது என்பதை உணர்த்தி மறுப்பாள் தோழி.

"அரவு இரைதேடும் ஆரிருள் நடுநாள்''[106]

எனத் தனது ஆற்றாமையை கூறி, இரவுக்குறியும் அலர் கூறிப் பகற்குறியும் என இருகுறியிலும் அவன் கூட்டத்தை மறுக்கும் தலைவி பற்றி அகப்பாடல்களில் காணலாம்.

**தூதுமுனிவின்மை**

தூதுமுனிவின்மை என்பது தலைவி தூது விட்டபோது வெறுக்காமை ஆகும். வரைவு வேட்கை கொண்ட தலைவி, தன் நிலையைத் தலைவனுக்கு உரைக்க எண்ணி, நாரை, கிளி, வண்டு, மேகம், புள் போன்றவற்றைக் கண்டு தன்னை விரைந்து வரைவு கொள்ளுமாறு தலைவனிடம் தூதினை முனியாது உரைக்க வேண்டி அணுகிச் செயல்படல் 'தூது முனிவின்மை' என்னும் மெய்ப்பாடாகும். இருவகை குறியிலும் வரும் தலைவன் வரவு இடையீடுபட்தனால் அவற்றை கண்ட தலைவி வரைவு வேண்டுகிறாள்.

"கிள்ளாய் இம்மலைக் குறவர் மகள் மீண்டும்
திணைபுனங் காவல் செய்ய வந்துள்ளாள்
என மட்டும் சொல்வாயாக''[107]

எனக்கிள்ளையைத் தூது விடுகின்றாள்.

தலைவி,

"மாலைப்பொழுதில் வருந்துவதை உணறுமாறு சொல்லுதி''[108]

என்று தான்படும் துன்பத்தைத் தலைவனிடம் கூறி, நாரையை தூது விடுகின்றாள். இவ்வாறு தலைவி தூதுவிடும் பல குறிப்புகள் உண்டு.

**துஞ்சிச் சேர்த்தல்**

துஞ்சிச் சேர்தல் என்பது வரைவு இல்லாமல் இருக்கும் தலைவன் வரவால் தலைவி மகிழாது தன் உள்ளத்து வருத்தத்தை வெளிப்படுத்துதல், துஞ்சிச் சேர்தல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவன் வந்து நின்றமையை அறிந்தும் உள்ளம் மகிழாததை,

"எம்மலைத்தனன் கொல்தானே – தன்மலை
ஆரநாறும் மார்பினள்
மாரி யானையின் வந்து நின்றனனே''[109]

எனக் கூறுகின்றாள் தலைவி. அதாவது அவனிடம் செல்ல இயலாத நிலைமை இருந்ததைக் கூறி இரங்குகிறாள்.

**காதல் கைம்மிகல்**

காதல் கைம்மிகல் என்பது காமம் மிகுந்ததால் நிகழும் நிகழ்ச்சியாகும். வரைவு நீட்டிப்பால் காதல் மிகுதியால் பெற்ற தலைவியின் வருத்தம் அதிகமாயிருக்கும். இந்நிலையில் நெட்டுயர்த்தல், காமம்மிக்க நிலையைத் தாங்காது எடுத்துரைத்தல், புலம்புதல் என்பனவும் நிகழும் இவையும் 'காதல் கைம்மிகல்' என்னும் மெய்ப்பாடாகும். தலைவியின் காமம் தன்னளவையும் கடந்து மிகும் என்பதை,

"மன்றுபாட வந்து மனை மடிந்தன்றே
கொன்றோரன்ன கொடுமையோரன்றோ
யாமங் கௌவரின் கனைஇக்காமங்
கடலினு முறை இக்கரை பொழியும்மே
எவன்கொல் வாழி தோழி''[110]

என்ற பாடற்பகுதி உணர்த்துகிறது. இதில் யாமப்பொழுதில் மிகுதியாக இருக்கும் கடல்அலை பெரிதாக ஆரவளப்பது போல தனது காமமும் எல்லையும் கடந்து போகும் எனத்தலைவி எடுத்துரைக்கின்றாள். மேலும், காமம் மிக்கவழி தலைவியின் உயிர்போய் விடும் என்பதைத் தோழி,

"காமம் கடவ''[112]

காமம் கடையிற் காதலர் படர்ந்து''[113]

தலைவியிடம் தோன்றிய காதல் கைம்மிகல் மெய்ப்பாட்டை எடுத்துரைத்து வரைவு வேண்டுவது சுவைமிக்கதாகவுள்ளது.

**கட்டுரையின்மை**

'கட்டுரையின்மை' என்பது கூற்று நிகழ்த்தாமல் உள்ளக்கருத்தினை மறைத்து அமர்ந்திருத்தலாகும். அச்சம், நாணம், மடம், என்னும் பண்புகள் காரணமாகத் தலைவி தலைவனிடம் ஒருபோதும் தன் வரைவு வேட்கையினை 'என்னை வரைவு கொள்' என உள்ளக்கருத்தினை உரையாது வரைவு வேண்டித் தூண்டல் 'கட்டுரையின்மை' என்னும் மெய்ப்பாடாகும் இம்மெய்ப்பாடு வெளிப்படுமாற்றைத் தலைவன்,

"யான்தன் அறிவன் தான் அறியலளே;

யாங்கு ஆகுவள் கொல் தானே

பெருமுது செல்வர் ஒருமட மகளே ?''[114]

எனக் கூறுகின்றான்.

**2.6.கற்புக்கால மெய்ப்பாடுகள்**

தமிழர்கள் அகவாழ்க்கையைக் களவு, கற்பு எனப் பிரிக்கும் மரபு அகத்திணையில் காணலாம். களவு ஒழுக்கம் கற்பு வாழ்க்கையாக மலர

வேண்டும் என்பது தமிழர்களின் அகத்திணை நெறியாகும். கற்பு என்பது தமிழர் நெறியின் தலையாய நெறியாகப் போற்றப்பட்டது. கற்பு என்பது தலைவியின் தாய் தந்தையர் மூலம் திருமணச்சடங்கு முறையால் தலைவன் ஏற்றுக் கொள்வதாகும்.

"கற்பெனப்படுவது கரணமொடு புணரக்

கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்

கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்ளவதுவே''[115]

என்பர் தொல்காப்பியர். உள்ளத்தால் இணைந்த தலைவனும் தலைவியும் மற்றவர்கள் போற்றும் கற்பியல் வாழ்வு நிகழ்த்துவதற்கு உரிமை பெறும் செயல்முறைதான் திருமணச் சடங்காகும். சங்கப்பாடல்கள் பலவற்றில் இல்லற வாழ்வு சிறப்புற காட்டுப்படுகிறது. திருமண வாழ்வை தொடங்கிய தலைவியிடம் அன்பும், அருளும் நிறைந்தது மட்டுமல்லாமல் நற்பண்புகள் மற்றும் நல்லநெறிகளின் துணையோடு சங்ககாலத் தலைவி வாழ முற்பட்டாள். தலைவியின் அன்பும் இனிமையும் நிறைந்த சொற்களால் தலைவனோடு உரையாடுகிறாள். தலைவனுடன் இணைந்து வாழ நினைக்கிறாள். இவ்வாழ்வு மேன்மையினை,

"அன்பும் மடனும், சாயலும் இயல்பும்

என்பு நெகிழ்க்கும் கிளவியும், பிறவும்

ஒன்றுபடு கொள்கையொ போராங்கு முயங்கி

இன்றே இவணம் ஆகி நாளை''[116]

என்னும் அகப்பாடல்களால் அறியமுடிகிறது. இல்லற வாழ்வை நன்றாக மேற்கொள்ளும் தலைவியைச் சிறப்பிக்கும் வகையில் 'கற்பு மேம்படுவி' 'மனைக்கு விளக்கு மனைமுதல்' என்னும் தொடர்களால் அவள்

பாராட்டப்படுவது குறிப்பிடத்தக்கதாகும். திருமண வாழ்க்கையில் நிகழும் கற்புக்கால மெய்ப்பாடுகளைத் தொல்காப்பியர்,

“தெய்வம் அஞ்சல், புரையறத்தெளிதல்
இல்லது காய்தல், உள்ளது உவர்த்தல்
புணர்த்துழி உண்மை பொழுது மறப்பாக்கம்
அருள்மிக உடைமை, அன்புமிக நிற்றல்
பிரிவாற்றாமை, மறைந்தவை யுரைத்தல்
புறஞ்சொல் மாணாக்கிளவியொரு தொகைஇச்
சிறந்த பத்தம் செப்பிய பொருளே’’[117]

என்று குறிக்கின்றார்.

**தெய்வம் அஞ்சேல்**

‘தெய்வம் அஞ்சல்’ என்பது தெய்வத்திடம் தோன்றும் ஒருவித அச்சஉணர்வு தெய்வத்தின் முன்னிலையில் தலைவன், தலைவியை பரியமாட்டேன் என கூறுகிறான். அச்சூளுரை பொய்யாகி, தலைவியை பிரிய நேர்ந்ததால் தலைவனை தெய்வம் வருத்தும் எனக்கருதி அவனுக்கு எவ்வகை தீங்கும் நேராமல் இருக்கத் தலைவி தெய்வத்திடம் அஞ்சி வழிபடுவாள். இது ‘தெய்வம் அஞ்சல்’ என்னும் மெய்ப்பாடாகும்.

பொருள்வயிற் பிரிந்த தலைவனுக்காக ஞாயிற்றிடம் வழிபடுவதைக் காணலாம்.

“புனையிழாய் ஈங்கு நாம் புலம்புறபொருள் வெஃகி
முனை என்னார் காதலர் முன்னிய ஆரிடைச்

சினைவாடச் சிறக்குறின் சினம் தணிந்தீகளன

கனைகதிர்க் கனலியைக் காமுறல் இனயவதோ''[118]

என்னும் கலித்தொகை அடிகள் புலப்படுத்துகின்றன. மேலும் தன் கற்பின் திறம் வெளிபடத் தலைவனுக்கு தீங்கு வருமென்று அஞ்சி வாழ்த்தி வணங்குவதை காணமுடிகிறது.

**புரையறத் தெளிதல்**

தலைவி தனக்குரிய இல்லற நெறிமுறைகள் இவைகள்தான் என்பதை தெரிந்து கொள்ளுதலே 'புரையறத் தெளிதல்' என்னும் மெய்ப்பாடாகும். இரவு நேரத்தில் விருந்தினர் வந்தாலும் முகம் மலர்ந்து மகிழ்வோடு இனிது வரவேற்று உபசரிக்கும் பண்புடையவள் தலைவி என்பதை,

"அல்லிலாயினும் விருந்துவரின் உவக்கும்

முல்லை சான்ற கற்பின் மெல்லியற் குறுமகள்''[119]

என்னும் குறுந்தொகை அடிகள்மூலம் காணலாம். குறிஞ்சிப் பாட்டில் இரண்டு இடங்களில் புரையறத் தெளிதல் மெய்ப்பாடு காணலாகின்றது. தாம் நடத்தவிருக்கும் இல்லற வாழ்வு குறித்து,

"விருந்துண்டு எஞ்சிய மிச்சம் பெருந்தகை

நின்னோடு உண்டலும் புரைவதென்றாங்கு

அறம்புணை யாகத் தேற்றி''[120]

விருந்தினர் உண்டு சென்றான் எஞ்சிய அடிசிலைப் பெருந்தகையை உடைய தலைவி இட, தலைவன் உண்டான். இவ்வாறு அவர்கள் நடத்தும் இல்லறம் அவர்களை மேலும் சிறப்பிக்க விளங்கியது.

**இல்லது காய்தல்**

தலைவனிடம் இல்லாத பண்பினை இருப்பதாக நினைத்து அவனிடம் ஊடல் கொள்ளுதல். அதாவது தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தை வெறுக்கும் தலைவி, அவன்பால் இல்லாதனவற்றை உள்ளனவாகக் கொண்டு பொய்யாக வெறுப்பாள். இதுவே'இல்லது காய்தல்' என்னும் மெய்ப்பாடாகும்.

தலைவன் பரத்தையொழுக்கம் மேற்கொண்டபின் ஒன்றும் இல்லாதனவற்றை எல்லாம் கூறி சினம் கொள்கிறாள் தலைவி. தலைவன் அத்தலைவியிடம் இவ்வாறு கூறுகிறாள்.

"செய்யாத சொல்லிச் சினவுவது ஈங்கெவன்
ஐயத்தால் என்னைக் கதியாதி''[121]

வெளியே சென்று வந்த தலைவனிடம் ஊடல் கொள்கிறாள். தலைவி குதிரை, யானை, காடை முதலியவற்றைத் தலைவி பல வகைப் பரத்தையாக உருவகஞ் செய்து தலைவன் மேல் சினம் கொள்கிறாள்.

காலம் தாழ்த்தி வீட்டிற்கு வந்த தலைவன் தலைவியிடம் தான் ஆற்றில் நீராடி வந்ததால் காலந்தாழ்ந்து வருவதாகக் கூறுகின்றான். தலைவியோ அவன் கூறியதை வைத்தே இவ்வாறு கூறுகிறாள்.

"ஒஓ புனலாடினாய் எனவும் கேட்டேன் புனலாங்கே
நீணீர் நெறிகதும்பு வாரும் அறலாக
மானெழில் உண்கண் பிறழும் கயலாகக்
கார்மலர் வேய்ந்த கமழ்பூம் பரப்பாகம்
நாணுஞ் சிறையழிந்து நண்பகல் வந்த அல்
யாணர்ப் புதுப்புனல் அடினாய்''[122]

என இல்லாதவற்றை கூறி சினம் கொள்கிறாள் என்பதை கலித்தொகை அடிகள் சுவையாகக் காட்டுகின்றன.

**உள்ளது உவர்த்தல்**

தலைவனிடம் உள்ள நல்ல பண்புகளையும் வெறுத்து ஒதுக்குதல்.. அது தலைவன் செய்கின்ற நல்லசெயலை வெறுத்தலாகும். தலைவன் செய்த பரத்தைமை ஒழுக்கத்தினால் தலைவனை வெறுக்கும் தலைவி, தலைவனிடமுள்ள வேறுசில நற்பண்புகளையும் வெறுப்பவள் போல் கூறுவதால் இது 'உள்ளது உவர்த்தல்' என்னும் மெய்ப்பாடாகும். இவற்றை ஐங்குறுநூற்று பாடல் மூலம் காணலாம்.

"அம்ம வாழி தோழி மகிழ்நன்
ஒருநாள் நம்மில் வந்த தற்கு எழுநாள்
அழுப என்பவன் பெண்டிர்
தீஉற மெழுகின் நெகிழ்விணர் விரைந்தே''[123]

என தலைவன் மேல் சினம் கொள்கிறாள். மேலும் புதல்வனைப் பிரியாதவனாக இருந்த தலைவன் ஒருசமயம் அவனையும் பிரிந்துபோய் பரத்தையோடு உறவாடிவிட்டு இரவினும் அங்கே தங்கியிருந்து காலையிலே வந்தான் என்பதை அறிந்த தலைவி அவனோடு மனமாறுபட்ட உவர்ந்து மொழிகின்றாள். தலைவியிடம் தோன்றிய இம்மெப்பாட்டை,

"உடலினேனல்லேன் பொய்யாதரைமோ
யார்அவள் மகிழ்ந! தானே தேரோடு
தளர் நடைப்புதல்வனை யுள்ளிநின்
வளமனை வருதலும் வெளவியோளே''[124]

**புணர்ந்துழி உண்மை**

புணர்ந்துழி உண்மை என்பது புணர்ச்சிக் காலத்தில் தலைவி மனதில் தோன்றிய உண்மையைக் கூறுதல். புணர்ச்சிக் காலத்தில் தலைவனோடு ஊடல் கொண்டால் என்பதை மறந்து மனதில் தோன்றியதைக் கூறி தலைவனுக்கு ஏற்ப மகிழ்ந்திருப்பாள். அவனது செயல்களை மறந்திருப்பாள். இதுவே 'புணர்ந்துழி உண்மை' என்னும் மெய்ப்பாடாகும். "புறத்தொழுக்கத்தலைவன் கொடியனாயினும் அவன் மார்பு குளிர்ந்து துயிலைச் செய்யும் இனிய சாலை உடைத்து எனத் தலைவி கூறுகின்றாள்''[125]

இது புணர்ச்சிக்காலத்து மனமொன்றிக் கூறுகின்றமையைப் புலப்படுத்துகிறது.

**பொழுது மறுப்பாக்கம்**

'பொழுது மறுபாக்கம்' என்பது பகற்குறியும், இரவுக்குறியும் தலைவனுக்கு மறுத்துக் கூறுதல். களவின் கண் பகற்குறியும், இரவுக்குறியும் என வரையறுத்தார் போல் இல்லாமல், மறுப்புவந்த போதுஅப்பொழுதினைப் பற்றி நிகழும் மனநிகழ்ச்சியாகும். கற்பில் நீங்காது உடனுறையும் தலைவி களவுக்காலத்தில் பொழுது வரம்பினை மறுத்துக் கூறுதல் 'பொழுது மறுப்பாக்கம்' என்னும் மெய்ப்பாடாகும்.

"........................................ ஆங்கிவள்
இடைமுலைக்கிடந்து நடுங்கல் ஆனீர்
தொழுது காண்பிறையின் தோன்றியாம் நுக்கு
பெரிய நோன்றினிர் நோகோ யானே''[126]

என்னும் குறுந்தொகைப் பாடல் தலைவியிடம் தோன்றி ‘பொழுது மறுப்பக்கம்’ என்னும் மெய்ப்பாட்டைக் காட்டுகின்றது.

“புல்லிய கேளிர் புணரும் பொழுது உணரேன்

எல்லிஆக, ‘எல்லை’ என்று ஆங்கே பகல்முனிவேன்

எல்லிய காலை யிராமுனிவேன் யானுற்ற

அல்லல் களைவர் கிலேன்’’[127]

இதனுள் ‘பகல்முனிவேன்’ ’இரா முனிவேன்’ என்பன பொழுது மறுப்பதால் இம்மெய்ப்பாட்டை வெளிப்படுத்துவதாயிற்று எனலாம்.

**அருள்மிகவுடைமை**

‘அருள்மிகவுடைமை’ என்பது தலைமகள் மட்டும் அருள்புலப்பட நிற்கும் நிலையாகும். இல்லறவாழ்வில் இனிதொழுகும் தலைவி, கொண்ட தலைவனோடும் சுற்றத்தாரோடும் அருளுடையவளாக விளங்க வேண்டும். தலைவி அருளால் நிரம்பிய நெஞ்சினளாக தோன்றுவதின் வெளிப்பாடாகத் தோன்றுவதே அருள்மிகவுடைமை என்னும் மெய்ப்பாடாகும்.

“புகழுமுன்னர் நாணுப

பழியாங்கு ஒல்பவோ காணுங்காலே’’[128]

ஒழுக்கம் தவறி பழிக்குரிய செயலைத் தலைவன் மேற்கொண்டாலும் தலைவியானவள் தலைவன் மேல் குறையாத அன்பு வைத்திருந்தால் என்பதை இப்பாடல் வெயிப்படுத்துகின்றது. தலைவிக்கு தலைவன் மீது கொண்ட காதலினால் தலைவன் செய்யும் தவறை மன்னிப்பளாக நடந்துகொள்கிறாள்.

“நடுங்குதுயர் களைந்த நன்னராளன்’’[129]

என்னும் அகநானூற்றுப் பாடலடி எண்ணத்தக்கது. முன்னர்க் கனவில் தலைவனின் அருளையே வேண்டிய தலைவிக்குக் கற்பில் தலைவனின் அருளைப் பெரும் நிலை ஏற்படும் போது இம்மெய்ப்பாடு தோன்றுகிறது.

**அன்புதொக நிற்றல்**

'அன்புதொக நிற்றல்' என்பது மிகுதியான அன்பை கொண்டு இல்லறத்தை நடத்துதல் அன்புதொக நிற்றல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவன் களவிலும் கற்பிலும் தலைவியிடம் செலுத்திய அன்பு ஒன்றாக விளங்கியதால் இவ்வாறு தலைவி கூறவதாக அமைந்துள்ளது.

"தட்டை பறையின், கறங்கும் நாடன்
தொல்லைந்திங்கள் நெடுவெண்ணிலவின்
மணந்தனன் மன்னன் எம் தோளே;
இன்றும் முல்லை முகை நாறும்மே''[130]

எனக் கூறுகின்றாள். இதில் தலைவன் பழியுடையன் அல்லன் என்றும், தன்னை மறவாது தலைவனிடம் கூறுக எனப்பாணனை வேண்டுவதும் தலைவி, தலைவன்பால் கொண்ட 'அன்பு தொக நிற்றலுக்கு' சான்றாகின்றது.

குறிஞ்சிப்பாட்டில், பசுவினைப் புணர்ந்த காளையை போன்று எல்லையில் உள்ள பலரும் நீருண்ணும் துறையிலே நிறுத்திப் பிரிந்து சென்றான். இதில் தலைவன் தலைவியின் மீது கொண்ட ஆழ்ந்த அன்பு வெளிப்படுகின்றது.

"துணைபுணர் ஏற்றின் எம்மொட வந்த
துஞ்சா முழவின் மூதூர் வாயில்

உண்துறை நிறுத்துப் பெயர்ந்தன்ன''[131]

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

பட்டினம் பாலையில், கடியலூர் உருந்திரங்கண்ணனார்,

"வாரிருங் கூந்தல் வயங்கு இழை ஒழிய

வாரென் வாழிய நெஞ்சே''[132]

அணிகலன்களை அணிந்த அழகினை உடையவள் தலைவி. அவளை விட்டுப் பிரிந்து, தன் நெஞ்சோடு செல்வதை விரும்பவில்லை என்று தலைவன் கூறுவதிலிருந்து தலைவனின் அன்பு வெளிப்படுவதைக் காணலாம்.

**பிரிவாற்றாமை**

'பிரிவாற்றாமை' என்பது கற்புக்காலத்தில் தலைவனின் பிரிவை எண்ணி வருத்தமடைதல் களவுக்காலத்தில் தலைவனின் பிரிவை ஓரளவு பொறுத்துக் கொள்ளும் தலைவி, கற்புக்காலத்தில் பொறுக்க இயலாதவளாய்த் தன் பிரிவுத்துயரத்தை வெளிப்படுத்துதல் 'பிரிவாற்றாமை' என்னும் மெய்ப்பாடாகும். இம்மெய்ப்பாடு முல்லைப்பாட்டில்,

"பருவரல் எவ்வம் களைமா யோயெனக்

காட்டவும் காட்டவும் காணாள் கலுழ்சிறந்து

பூப்போல் உண்கண் புலம்பிமுத்து உறைப்பா''[133]

என்கிறார் நப்பூதனார். தலைவனைப் பிரிந்த தலைவி மனத்தடுமாற்றத்தால் வருத்தமடைந்தாள். முதிர்ந்த பெண்டிர் பலமுறை காரணங்கள் காட்டித் தேற்றினர். அவற்றை மனத்தில் கொண்ட தேற்றியிராமல் மனம் கலங்கினாள். அவளது பூப்போலும் அழகியமை தீட்டிய கண்களிலிருந்து முத்துப்போன்ற துளி துளிர்கிறது. இதில் பிரிவின்கண் ஆற்றாமை புலனாகின்றது.

இம்மெய்ப்பாடு கலித்தொகையில் உண்டு.

"இடனின்றி யிராத்தோர்க் கொன்றீயாமை யிளிவெனக்

கடனறிந்து செயல்சூழ்நத பொருள் பொருளாகுமோ

வடமீன் போற்றோழுதேத்த வயங்கிய கற்பினள்

தடமென்தோள் பிரியாமை பொருளாயினல்லனதா''[134]

என்ற பாடற்பகுதி சான்றாகிறது. தலைவனின் பிரிவுத்துயரத்தினால் தலைவி இறந்துவிடுவாள் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள். மேலும் எவற்றைக் கொண்டும் உன்னுடைய பிரிவுத்துயரை தவிர்க்க இயலாது என்றும் தோழி கூறுகிறாள். தலைவன் மீது தலைவி கொண்ட ஆழ்ந்த அன்பே பிரிவாற்றாமை மெய்ப்பாடு தோன்றக் காரணமாகிறது என்பதை அறியலாம்.

**மறைந்தவை உரைத்தல்**

'மறைந்தவை உரைத்தல்' என்பது களவுக்காலத்தில் நிகழ்ந்தவற்றைக் கற்புக்காலத்துக் கூறுதலாகும். அதாவது கற்பின்கண் தோன்றும் மனக்குறிப்பைப் கூறுதலே 'மறைந்தவை உரைத்தல் என்னும் மெய்ப்பாடாகும். களவுக்காலத்தில் தலைவன் செலுத்திய அளவற்ற அன்பை நினைக்கின்றாள். அதனால் பிரிவிலும் தன்னுடை மேனிநலம் குறையாது இருக்கின்றாள். பரத்தையிடம் இருந்து பிரிந்து வந்த தலைவனை ஏற்குமாறு வாயிலாக வந்த தோழியிடம் தலைவி இவ்வாறு உரைக்கிறாள்.,

"கழங்கா டாயத் தன்று நம் அருளிய

பழங்கண் ணோட்டமும் நலிய

அழுங்கினன் அல்லனோ அயர்ந்ததன் மணனே''[135]

என்கிறார். இயற்கைப் புணர்ச்சிக் காலத்தில் கழங்காடும் என் மீது கொண்ட நினைவானது வருத்தத்தை தோற்றுவித்ததனால் தலைவன் பரத்தையோடு

விரும்பிய மணத்தைத் தவிர்த்தான் எனத் தலைவி களவில் நிகழ்ந்த நிகழ்வைக் கற்பில் கூறியது ‘மறைந்தவை உரைத்தல்’ எனும் மெய்ப்பாட்டைப் புலப்படுத்துகிறது.

**புறஞ்சொல் மாணாக்கிளவி**

தலைவது மறைந்த ஒழுக்கத்தைப் பற்றி மற்றவர்கள் கூறிய புறஞ்சொல் மாணாக்கிளவி ஆகும். புறஞ்சொல்லின் தீமை குறித்து எழுந்த சொல்லினைத் தொல்காப்பியம்,

“........................................ மறைந்தவை உரைத்தல்
புறஞ்சொல் மாணாக்கிளவி’’[136]

என்று கூறும்.

தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையார் கூட்டத்துள் ஒருத்தியை விரும்பி மணம் செய்து கொண்டான் என ஊரார் கூறினர். அக்கூற்று,

“களிறுகவர் கம்பலைபோல,
அலர் ஆகின்றது பலர்வாய்ப் பட்டே’’[137]

என்பதாகும். இதில் ஊரார் பேசும் அலராக எழுந்தது எனத் தலைவனிடத்துத் தோழி மொழிவது ‘புறஞ்சொல் மாணாக்கிளவி’’ ஆகும்.

**தொகுப்புரை**

- எண்ணங்களை உளவியற் நோக்குடன் ஆராயும் போது அவை மெய்ப்பாடுகளாக வெளிப்படும் நுண்மையை உணரமுடிகின்றது. என்பதுடன் சங்க இலக்கிய அகப்பாடல்கள் மனத்தை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டவை எனலாம்.

- சங்க இலக்கியத்தில் பாலுணர்வு அகப்பாடல்களின் அடிப்படை எனலாம். இவை இயல்பு திரியாது பயன்படுத்தப்பட்ட வெளியீடுகள் இவ்வுணர்வுச் சிக்கல்களைத் தீர்க்க வேண்டிய முயற்ச்சியில் ஈடுபட வேண்டும் என்ற நோக்கத்தில் ஒவ்வொரு பாடலையும் பாத்திரங்களின் தனிநிலைக் கூற்றுகளாக அமைத்துள்ளனர்.

- போர், காதல், தலைவி, பரத்தை, புலவி எனத் திரும்ப திரும்ப பாடினும் சுவை மெய்ப்பாடுகள் மனித உள்ளத்து உணர்ச்சிகளின் வெளிப்பாடுகள் . மொழி, இனம், நாடு இவற்றால் வேறுபட்டாலும், மனிதமனம் வெளிப்படுத்தும் அடிப்படை உணர்ச்சிகள் இல்லாமல் இருப்பது இல்லை.

- சங்க இலக்கியத்தில் அகவாழ்வில் நிகழும் ஒவ்வொரு உணர்வுகளும், உள்ளவாறே விளக்கப்பட்டுள்ளன. மாந்தர்களின் ஏக்கங்கள், எதிர்பார்புகள் போன்றவை பாடல்களில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. உணர்வுகளை வெளிப்படுத்தும் திறன் அனைவருக்கும் உண்டு. ஆனால் அவற்றைப் புரிந்து கொள்ளுதல் என்பது அனைவராலும் இயலாது.

- பிறர் உணர்வுகளையும், தன் உணர்வுகளாக எண்ணி வெளிப்படுத்தும் பாங்கு புலவர்க்கே உரித்தானது ஆகும். புற அழகை நோக்காமல், அகஅழகையும், அகஉணர்வுகளையும் நேசித்தவர்கள் சங்கப்புலவர்கள் என்பது வெளிப்படை.

- தலைவியின் எண்ணத்தை, உணர்வை அப்படியே பாடலாக்கித் தந்திருக்கும் புலவரின் திறன் போற்றத்தக்க ஒன்றாகும். சங்கப்புலவர்கள் அத்தகைய நுண்மான் நுழைபுலம் மிக்கவர்களாக திகழ்ந்துள்ளனர்.

- தலைவன், தலைவியின் உணர்ச்சிகளை உள்வாங்கி அவற்றை அவர்கள் வாயிலாவே வெளிப்படுத்தியுள்ள பாங்கு சிறப்பாக அமைந்துள்ளது. மெய்ப்பாடுகளைப் பயன்படுத்திய முறையும். அதனை வெளிப்படுத்தியுள்ள திறனும் புலவர்களின் சிந்தனை ஆற்றலை வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளது.

- உள்ளத்துணர்ச்சிகள் எண்ணில, எனவே காதல் வயப்பட்ட தலைமக்களிடம் காதல் உணர்ச்சியின் அடிப்படையில் தோன்றும் காதல் மெய்ப்பாடுகளின் அளவு இவ்வளவு தான் என வரையறுத்து கூறு இயலாது. மொழி, இனம், நாடு இவற்றால் வேறுபட்டாலும், மனிதமனம் வெளிப்படுத்தும் அடிப்படை உணர்ச்சிகள் இல்லாமல் இருப்பது இல்லை.

- மனித வாழ்க்கை அக, புற உணர்வுகளை புறத்தே நிகழும் நிகழ்ச்சிகளால் வெளிப்படுத்தக் கூடியவை. போரில் பெற்ற வெற்றியும், அவற்றால் வந்தடையும் பெருமிதமும் வெளிப்படையாக அமைவன. ஆனால், காதல் உணர்வு தனித்துத் தம்முள் தாமே மகிழவேண்டிய ஒன்று என்பதை சங்க இலக்கியங்களை ஆராயும் போது வெளிப்படுகிறது.

- பெரும்பான்மையான மெய்ப்பாடுகள் தலைவியிடம் மட்டுமே தோன்றுகின்றன. ‘பசலை படர்தல்’ ‘பசியட நிற்றல்’ போன்ற பெரும்பான்மையான மெய்ப்பாடுகள் தலைவியிடமோ தோன்றுகின்றன.

- தொல்காப்பியர் கூறியது போல உணர்வுநடை மாந்தர்களால் உணரப்படும் மெய்ப்பாட்டை குறிப்பிட்ட ஆய்வு எல்லையால் வரையறுத்து காட்டவது இயலாத ஒன்று. எனவே, அவரவர் உணர்வு நிலைக்கேற்ப ஆய்வுகள் பெரு வாய்ப்புண்டு.

## அடிக்குறிப்புகள்

1. மு.பொன்னுசாமி, சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள், ப.45.
2. தொல். பொருள். நூ.11, ப.1
3. ரா.சேதுபதி, திருக்குறளில் தொல்காப்பிய மெய்ப்பாடுகள், ப.41.
4. தொல். பொருள். நூ.263. ப.263
5. தொல், சோமசுந்தர பாரதியார், பொருட்படலம், புலத்துறை பக்.47–48.
6. தொல்,பொருள்,மெய்ப்பாட்டியல்.நூ.261.
7. குறுந்.பாட.132.
8. மு.பொன்னுசாமி, சங்க இலக்கியத்தல் காதல் மெய்ப்பாடுகள், பக்.92.
9. குறுந்.பாட.132.
10. திருக். குறள்.1094.
11. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி.ப.192.
12. அகம், பாட.136
13. ஐங்கு, பாட.185.
14. குறுந், பாட.119.
15. நற்றி, பாட.155.
16. குறுந், பாட.169.
17. நற்றி, பாட.155.
18. அகம், பாட.261.
19. ஐங்கு, பாட.197.
20. அகம், பாட.86.
21. அகம், பாட.110.
22. தொல்.பொருள்,மெய்.நூ.262

23. அகம், பாட.158.

24. அகம், பாட.136.

25. அகம், பாட.218.

26. அகம், பாட.142.

27. நற்றி, பாட.20.

28. ஐங்கு, பாட.19.

29. நற்றி, பாட.20

30. தொல், பொருள், மெய்.நூ.265.

31. ஐங்கு, பாட.191.

32. அகம், பாட.142.

33. ஐங்கு, பாட.191

34. கலித், பாட.112

35. அகம், பாட.328.

36. பரிப், பாட.9.

37. வ.சுப.மணிக்கம், தமிழ்க்காதல், ப.53

38. தொல்,பொருள், மெய்.நூ.264.

39. தி.வே. கோபாலையர். தமிழ் இலக்கணப் பேரகராதி,ப.89.

40. குறுந், பாட.3.

41. குறுந், பாட.226.

42. ஐங்கு, பாட.256.

43. ஐங்கு, பாட.40.

44. ஐங்கு, பாட.112.

45. கலித், பாட.60.

46. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.49

47. குறுந், பா214

48. மேலது, பா.340.

49. அகம், பா.216.

50. கலித், பா.155.

51. தொல், பொருள், மெய்.நூ.265.

52. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி, ப.95.

53. ஐங்கு. பா.112.

54. அகம். பா.49.

55. குறுந். பா.57.

56. ஐங்கு. பா.115.

57. தொல், பொருள், மெய்.நூ.266.

58. குறிஞ், பா.9–10, ப.335.

59. குறிஞ், பா.10–11, ப.335.

60. ஐங், பா.116.

61. மேலது, பா.116.

62. குறுந், பா.57.

63. தொல், பொருள், மெய்.நூ.270.

64. நற்றி, பா.364.

65. குறுந், பா.38.

66. அகம், பா.364.

67. நற்றி, பா.69.

68. அகம், பா.170.

69. குறுந், பா.307.

70. மேலது, பா.307.

71. அகம், பா74.

72. ஐங்கு, பா418.

73. மேலது, பா.216.

74. கலித், பா.23.

75. ஐங்கு, பா.168.

76. மேலது, பா.200.

77. கலித், பா.33.

78. நற்றி, பா.219.

79. கலித், பா.77.

80. குறிஞ், பா.3.

81. நற்றி, பா.297.

82. அகம், பா.85.

83. நற்றி, பா.319.

84. கலித், பா.139.

85. ஐங்கு, பா.448.

86. கலித், பா.128.

87. கலித், பா.41.

88. கலித், பா.288.

89. குறுந், பா.21.

90. அகம், பா.223.

91. கலித். பா.83.

92. குறு, பா.25.

93. குறுந். பா.161.

94. கலித். பா.20.

95. குறுந், பா.23.

96. குறுந், பா.57.

97. ஐங்கு, பா.111.

98. வ.சுப, மாணிக்கம், தமிழ்க்காதல், ப.36.

99. தொல், மெய்.நூ.217.

100. அகம், பா.122.

101. குறுந், பா.4.

102. அகம், பா.52.

103. குறுந், பா.320.

104. அகம், பா, 128

105. நற்றி, பா.151.

106. மேலது, பா.288.

107. நற்றி, பா.102.

108. மேலது, பா.54.

109. குறுந், பா.161.

110. அகம். பா.128.

111. ஐங்கு, பா.23.

112. குறுந், பா.340.

113. குறுந், பா.337.

114. தொல், மெய்,நூ.272.

115. அகம், பா.225.

116. தொல், மெய். நூ.272.

117. கலித், பா.16.

118. குறுந், பா.339.

119. குறிஞ்சி, பா.206.

120. கலித், பா.91.

121. கலித், பா.92.

122. ஐங்கு, பா.32.

123. ஐங்கு, பா.66.

124. கலித், பா.125.

125. மேலது, பா.178.

126. மேலது, பா,144,

127. குறுந், பா.252.

128. அகம், பா.80.

129. குறுந், பா.193.

130. குறிஞ்சி, பா.235.

131. பட்டின.பா, பா.219.

132. முல்லை, பா.21–23.

133. கலித், பா.2.

134. அகம், பா.66.

135. தொல், பொருள்.நூ.268.

136. அகம்,பா.96.

# இயல்–3

## பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் மெய்ப்பாடுகள்

பொருள், பொருட்களை அகம் என்றும் புறம் என்றும் இரண்டு பிரிவுகளாக்கி அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினுள் அடக்குவர். மக்களுக்கு உறுதிபயக்கக் கூடிய இந்நான்கு குறிக்கோட் பொருள்களில் இன்பம் அகப்பொருளிலும், மற்ற அறம், பொருள், வீடு ஆகிய மூன்றும் புறப்பகுதியிலும் அடங்கும். தமிழக வரலாற்றில் மூன்றாம் நூற்றாண்டிற்கும் ஆறாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட நிலையில் தோன்றியது பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், சங்ககாலத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்த பரத்தையர் உறவு, கள்ளுண்ணுதல், புலால் உண்ணுதல் போன்ற பழக்கங்கள் பெரும் பாவச் செயல்களாக கருத்தப்பட்டன. சங்க இலக்கியத்தில் தலைமைக் கருவாக இலக்கியத்தில் இடம் பெற்றிருந்த காதல் வாழ்வும் போர்வாழ்வும் பின்னுக்குத் தள்ளப்பட்டது. இக்காலத்தில் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் முதல் தமிழ் காப்பியங்களான சிலப்பதிகாரமும், மணிமேகலையும் இயற்றப்பட்டன. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் நீதியைமட்டும் கொண்டவை பதினொன்று. களவழிநாற்பது போர்கள நிகழ்ச்சியை விளக்குகிறது. கார்நாற்பது, திணைமொழி ஐம்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை என்னும் ஆறும் அகவாழ்வை பற்றி விளக்குகின்றன. தனிமனித நலன் மற்றும் சமுதாய நலனுக்காகத் தோன்றியவையே அறநூல்கள், தமிழ் இலக்கிய வரலாற்றில் எண்ணற்ற அறநூல்கள் இடம் பெற்றிருப்பினும் குறிப்பாகப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களையே அறஇலக்கியங்கள் என்பர் சான்றோர்.

ஓர் இல்லத்தின்கண் கணவனும் மனைவியும் உள்ளங்கலந்து மகிழ்ந்து மக்களுடனும், மற்றவர்களுடனும் அன்புடன் இணைந்து அறநெறியில் நின்று வாழக்கூடிய வாழ்க்கையே இல்வாழ்க்கையாகும். இல்லறம் என்பது இல்வாழ்க்கையைக் குறிப்பதாகும். 'இல்' என்பது 'வீடு' எனப் பொருள்படும். வாழ்க்கை என்பது வாழ்தல் எனப் பொருள்படும். ஒத்த தலைவனும் தலைவியும் கூடி வாழ்தலே இல்வாழ்க்கை, ஒருவன் மணம் புரிந்து இல்லறத்தை நடத்துவது இன்பத்திற்காக மட்டும் அன்று, அறத்திற்காகவும் தான். இவை இரண்டும் இணைந்ததே இல்லறமாகும்.

இல்லற வாழ்வை பற்றி இலக்கணவிளக்கம் என்ற நூலில்,

"அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கனுள் வீடுபேறு சிந்தையும், மொழியும் நூல்களால் நுவலப்படுவன. அறம், பொருள், இன்பம் என்ற மூன்றே, அவை தொகுத்துக் கூறும் நூல் மரபிலே அகம், புறம் என்று இரு பகுதியாக வழங்கப்பட்டு அணிநலன்களோடு செய்யுளகத்துக் கூறப்படும். அவற்றுள் அகமாவது அறம், பொருள், இன்பம் என்ற மூன்றனுள் இன்பம் என்னும் வகையதாகி, உள்ளத்தாலே நுகர்ந்து இன்புறும் காம இன்பமாகும்.''[1]

என்று இல்லறத்தைப் பற்றி விளக்கம் கூறுவதைக் காணலாம்.

இல்வாழ்வு என்பது திருமணத்திலிருந்து தொடங்குகிறது. ஆண், பெண் இருவரும் ஒருமனப்பட்டு வாழும் வாழ்க்கையை கூறுவது. திருமணம் என்பது உள்ளங்களின் சேர்க்கையாகும். அவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க நெறிகளைக் கூறுவதே இல்லற நெறியாகும்.

## 3.1.பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் நகைமெய்ப்பாடு தோன்றும் இடங்கள்

### இளமை பற்றி வரும் நகை

திணைமொழி ஐம்பதில், தலைவன் அழகைப் பற்றி விவரிப்பதைக் காணலாம்.

"அஞ்சனக் காயா மலரக் குருகிலை
யொண்டொடி நல்லர் முறுவல் கவின்கொளத்
தண்கமழ் கோட றுடுப்பீனக் காதலர்
வந்தார் திகழ்கநின் தோள்"[2]

தலைவியின் தோள் அழகுக்கு, காயாமலர்கள், குருகிலைகள், குளிர்ந்த கோடல்கள், என்று உவமையாக வருவதைக் காணலாம். இங்கு தலைவியின் இளமைப்பற்றி குறிப்பிடுவதால் 'இளமை' மெய்ப்பாடு பயின்று வருவதைக் காணலாம்.

"வேனிற் பருவத் தெதிர்மல ரேற்நூதுங்
கூனிவண் ட ன்ன குளிர்வய னல்லூரன்
மாணிழை நல்லா ரிளநல முண்டவர்
மேணி யொழிய விடும்"[3]

தலைவன் தன் இளமை நலமான இன்பத்தை மட்டும் பகிர்வான். என்றும், தன் இளமை நீங்கியவுடன் தன்னைவிட்டு பிரிவான் என்று கூறுவதிலிருந்து 'இளமை'மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

" சாந்த மெறிந்துமுத சாரற் சிறுதினைச்
சாந்த மெறிந்த விதண்மிகைச் சாந்தங்
கமழக் கிளிகடியுங் கார் மயுலன்னா
ளிமிழக் கிளியெழா வார்த்த"[4]

கார் காலத்தில் தோகையை விரித்து ஆடும்படியான மயிலை ஒத்த தலைவி, என்று தலைவியின் இளமையை பாராட்டும் போது 'இளமை' மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

**பேதைமைப் பற்றி வரும் மெய்ப்பாடுகள்**

பேதைமை என்பது அறியாமையை எடுத்துரைப்பது.

"காதலிற் றீரக் கழிய முயங்கன்மி
னோதந் துவன்று மொலிபுன லூரனைப்
பேதைப்பட் டேங்கன்மி னீயிரு மெண்ணிலா
வாசை யொழிய வுரைத்து''[5]

தலைவனின் அன்பின்மையை எடுத்துச் சொன்ன பரத்தையரிடத்து தலைவி கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இங்கு 'பேதைமை' மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

" ஒழுகு திரைக்கரை வான்குழுகின் றூவி
யுழிதரு மூதை யெடுக்குந் துறைவனைப்
பேதையா னென்றுணரு நெஞ்சு மினிதுண்மை
யூதிய மன்றோ வுயிர்க்கு''[6]

தலைவன் அறியாமை ஒன்றையே கொண்ட மனத்தை உடையவன் என்று தலைவி கூறுவதன் மூலம் 'பேதைமை' மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

**மடமைப் பற்றி வரும் மெய்ப்பாடு**

தலைவியின் மடத்தனத்தினால் ஏற்படும் மெய்ப்பாடு குறிக்கப்படுகிறது.

"மண்ணார் குலைவாழை யுட்டொடுத்த தேனமதென்
நுண்ணாப்பூந் தாமரைப்பூ வுள்ளுங்– கண்ணார்

வயலூரன் வண்ணமறிந்து தொடுப்பான்

மயலூரரரவர் மகள்’’[7]

குலையினையுடைய வாழை மடத்தினிடத்தே வைக்கப் பெற்ற தேனினை, தலைவனின் மேல் உள்ள மயக்கத்தினால், மடமையினாலே அருந்தி மயக்கமுற்ற தலைவி என்று தோழி கூறுவதிலிருந்து ‘மடமை’ என்னும் மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

**பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் அழுகை தோன்றுமிடம்**

இழிவு பற்றி வரும் மெய்ப்பாடு:

“ கானந் தலைசெயக் காப்பார் குழற்றோன்ற

வேன மிடந்த மணியெதிரே– வான

நகு வது போன் மின்னாட – நாணிலென்னாவி

யுகுவது போலு முடைந்து’’[8]

நாணத்தினால் என்னுயிரானது வருந்தி உதிர்ந்து விழுவது போலவுளது என்று தலைவிதான் இறந்து நேரிடும் துன்ப வேதனை கூறுவதைக் காணலாம்.

**அசைவு மெய்ப்பாடு தோன்றும் இடம்**

அசைவு என்பது மனத்தளர்ச்சி. இவற்றைத் தலைவி திணைமாலை நூற்றைம்பதில் கூறப்பட்டுள்ளதை,

“பொன்வாளாற் கருவரை போர்த்தாலு

மென்வாளா வென்றி யிலங்கெயிற்றாய்! என்வாள் போல்

வாளிழந்த கண்டோள் வனப்பிழந்த மெல்விரலு

நாளிழந்த வெண்மிக்கு நைந்து’’[9]

தலைவி தன் 'இளமை' தன்னைவிட்டு நீங்கிச் சென்றதாக தோழியிடம் கூறுவதைக் காணலாம். இதன் பொருட்டு இங்கு 'அசைவு' தலைவிக்கு மனதளர்ச்சி மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

பிரிவினால் ஏற்படும் அழுகையை ஐந்திணை ஐம்பதில்,

"கொண்கண் பிரிந்த குளிர்பூம் பொழினோக்கி

யுண்கண் சிவப்ப வழுதே னொளிமுகம்''[10]

தலைவன் பிரிவை எண்ணி தலைவி அழுததால் 'அழுகை' மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

**வறுமைப் பற்றி வரும் மெய்ப்பாடு**

பொருளில்லாத நிலையை பாலைநிலம் மூலமாக உணர்த்துகிறார் ஆசிரியர்.

"ஒல்வா ருளரே லுரையா யொளியாது

செல்வாரென் நாய்நீ சிறந்தாயே–செல்லா

தசைந் தொழிந்த யானை பசியாலாட் பார்த்து

மிசைந் தொழியு மத்தம் விரைந்து''[11]

பசிமிகுதியால் வேறு எதுவும் உண்பதற்கு இல்லாத வறுமைநிலையினால் இறந்த யானைகளை உண்ணும் பாலை நிலம் என்று கூறுவதைக் காணலாம்.

**பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் இளிவரல் மெய்ப்பாடு**

மூப்பினால் வரும் இளிவரல் மூப்பு என்பது வயது முதிர்ச்சியால் வரும் வருத்தம் ஐந்திணை ஐம்பதில்,

“தண் வய லூரன் புலக்குந் தகையமோ
நுண் அறல்போல நுணங்கிய வைங்கூந்தல்
வெண்மாற் போல நிறந்திரிந்து, வேறாய
வண்ண முடையேமற் றியாம்’’[12]

இப்பாடலின் மூலம் மூப்பினால் வரும் வருத்த மெய்ப்பாட்டோடு ஒரு பெண்ணின் இயல்பை உணர்த்துகிறது. தன் கணவன் செய்தது தவறு என்று தெரிந்தும், அவனைத் தவறு செய்யாமல் தடுக்கும் இயல்பு தன்னிடம் இல்லையே என்று வருந்தினாள் தலைவி.

பிணி என்பது நோயினால் வரும் வருத்தம் திணைமொழி ஐம்பதில், தலைவனைப்பிரிந்த தலைவிக்கு வரும் நோயினைப் பற்றி,

“..........................................................................
..........................................................................
மருவி வரலுற வேண்டுமென் றோழி
உருவழி வுண்ணோய் கெட’’[13]

உன்னை மணக்க வேண்டும் என்ற உள்ள நோயானது ஒழியும் படியாக நீ விரைவில் வரவேண்டும் என தலைவனுக்கு தோழி உரைப்பதைக் காணலாம்.

“நறுந்தண் டகரம் வகுள மிவற்றை
வெறும்புதல் போல் வேண்டாதுவேண்டி–யெறிந்துழுது
செந்தினை வித்துவார் தங்கை பிறர் நோய்க்கு
நொந்தினைய வல்லளோ நோக்கு’’[14]

இங்கு தலைவி பிறர் நோய்க்கு தளர்ந்து வருந்த தகுதியானவளோ? என்று கூறுவதிலிருந்து தலைவி படும் வருத்தத்தினை உணர முடிகிறது.

தோழி கூற்றாக வரும் பாடலில்,

“செந்தாமரை மலரும் செய்வயல் னல்லூர,

நொந்தான் மற்று உன்னைச் செயப்படுவது கன் உண்டாந்

தந்தாயு நீயே! தரவந்த நன்னலங்

கொண்டாயும் நீயாயக் கால்’’[15]

தலைவன் மீது வருத்தப்பட்டு என்ன செய்ய முடியும், தலைவிக்கு அழகை தந்தவனும் (இன்பத்தை) நீயேதான், அதைத் எடுத்துக் கொண்டு தலைவிக்கு வருத்தத்தை கொடுத்தவனும் நீதான் என்று தோழி கூறுவதிலிருந்து, ‘வருத்த’ மெய்ப்பாடு தோன்றுகிறது.

காதலன் காதலிகளின் அன்பு நிறைந்த வாழ்க்கை முறையை எடுத்துக்காட்டுவதே இந்நூலாகும். ஆணும் பெண்ணும் இணைந்து ஒன்றுபட்ட உள்ளமுடன் வாழும் நிலை ஏற்பட்ட பிறகு தான் மக்களிடையே நாகரீகம் தழைத்தது. அறம், பொருள், வீடு பற்றிய எண்ணங்கள் தோன்றி வளர்வதற்கு அடிப்படை ஆண் பெண்களின் அன்பிலே தோன்றிய குடும்ப வாழ்வுதான்.

**‘மென்மை’ தோன்றும் மெய்ப்பாடுகள்**

‘மென்மை’ என்பது வலிமையை இழப்பதால் வரும் மென்மை இயல்புகள் திணைமொழி நூற்றைம்பதில்,

“நாணாக நாறு நனைகுழலா ணல்கித்தன்

பூணாக நேர்வளவும் போகாது– பூணாக

மென்றே னிரண்டாவ துண்டோ மடன்மாமே(ல்)

னின்றேன் மறுகிடையே நேர்ந்து’’[16]

தலைவன், தன் மனவலிமையை இழப்பதனால் மடலேறுவதாக கூறுகிறான். இங்கு 'மென்மை' என்னும் மெய்ப்பாடு தோன்றுகிறது. "மடலேறி அடைதலாவது மடல் என்பது பனங்கருக்கு, பனங்கருக்கால் குதிரை ஒன்று செய்து அதன்மீது ஏறி, அதனை இழுக்கச் செய்தல் அதனை இழுத்துச் செல்லுங்கால் அவன் தான் விரும்பிய பெண்ணின் ஓவியம் வரையப்பட்ட துணி கட்டிய கொடி ஒன்றை வைத்திருப்பதாக பனங்கருக்கு அவன் உடல் உறுப்புகளை அறுக்கும். செந்நீர் வடிவும் இந்நிலையைக் காணும் அந்நாட்டுச் சான்றோர் பெண்ணின் பெற்றோரை நெருங்கி அவனுக்கு அப்பெண்ணை மணமுடித்துக் கொடுக்குமாறு வேண்டுவர். பெற்றோரும், பெண்ணும் அவன் பால் இரங்கி இசைவு தெரிவிப்பர். மணம் நிகழும் இல்லையேல் உயிரை விட்டுவிடுவர் இதுவே மடலேறுதல்"[17] என்ற மடலேறுதலைப் பற்றி விளக்கம் தருகிறார் சி.இலக்குவனார்.

**மருட்கை மெய்ப்பாடு தோன்றுமிடம்**

வியப்பு தோன்றும் இடமே 'மருட்கை' ஆகும்.

"மேனோக்கி வெங்கதிரோன் மாந்திய நீர்கீழ் நோக்கிக்
கானோக்கங் கொண்டழகாக் காண்மடவாய் –மானோக்கி!
போதாரி வண்டெலா நெட்டெழுத்தின் மேற்புரியச்
சாதாரி நின்றறையுஞ் சார்ந்து"[18]

என்ற பாடல் மூலம் வியப்பு தோன்றுகிறது.

**பெருமை**

'பெருமை' என்னும் மெய்ப்பாடு மிகப்பெரிய தாளத்திலிருந்து பெரும் பாடலை எண்ணிப் பாடுதல்,

“நல்வய லூர னறுஞ்சாந் தணியகலம்
புல்லிப் புடைபெயரா மாத்திரைக்கட் – புல்லியார்
கூட்டு முதலறைஞ் கோழி துயிலெடுப்பப்
பாட்டு முரலுமாம் பண்’’[19]

தலைவனோடு கூடியிருந்த தலைவி விலகாத நிலையிலே, சேவலானது கூவித் தூக்கத்தினின்றும் எழுப்ப, அதனால் வண்டுகள் பின் இசையோடு கூடிய பாடல்கள் பாடி பெருவியப்பைத் தருகிறது. இதில் ‘என்ன’ புதுமை என்று வியந்ததை அறிய முடிகிறது. இதில் ‘புதுமை’ என்னும் மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

**அச்சம் மெய்ப்பாடு தோன்றுமிடம்**

“.................................................................
புகைகொடுக்கப் பெற்ற புலவோர் – துகள் பொழியும்
வானுயர் வெற்ப! இரவின் வரல்வேண்டா
யானை யுடைய சுரம்’’[20]

நீ வரும் வழியிலே யானை உண்டு. ஆதலால் நீ இனி இரவிலே வர வேண்டாம் என்று தலைவனுக்கு கூறுகின்றாள் தோழி. இங்கு விலங்கினால் ஏற்படும் அச்சம் மெய்ப்பாடாக தோன்றுகிறது.

**கள்வரினால் ஏற்படும் அச்சம்**

“கல்லதர் வாயிற் கடுந்துடி கள்பம்பும்
வில்லுழுது வாழ்நர் குறும்புள்ளும் போவர்கொ
லெல்வளை மென்றோ ணெகிழப் பொருணசைஇ
நல்கா துறந்த நமர்’’[21]

பொருள் வேண்டிப் எம்மை பிரிந்த நம் காதலர், அச்சத்தை உண்டாக்கும் படியான உடுக்கைகளையுடைய மறவர்களின் ஊர்களினிடையே செல்வாரோ ? என்று தலைவி தலைவனை நினைத்து அச்சப்படுவதைக் காணலாம்.

**பெருமிதம் பற்றிய மெய்ப்பாடு**

**தறுகண்**

வீரன் படையில் முன்நின்று வரும் பெரும் படையைக் கொன்று குவித்தல்.

“சென்றார் வருதல் செறிதொடி! சேய்த்தன்றா
னின்றார் சொற் றேறாதாய்! நீடின்றி வென்றா
ரெடுத்த கொடியி னிலங்கருவி தோன்றுங்
கடுத்த மலைநாடு காண்’’[22]

போரின்கண் வெற்றியுற்றவர் உயர்த்துக் கட்டிய கொடியாகிய வெண்சீலையினைப் போன்று வேனிலால் வறண்ட இம்மலைநாடு என்று வெற்றியைப் பற்றி குறிப்பிடுவதைக் காணலாம்.

**புகழ் பற்றிய மெய்ப்பாடு**

வந்தால் போகாதது இரண்டு ‘அவை புகழும் பழியும்’ என்பர். அவ்வகையில் ஒருவரை உயர்வுபடுத்துவது ‘புகழ்’ மட்டுமே அப்புகழைப் பற்றி திணைமாலை நூற்றைம்பதில்,

“ கோடாப் புகழ்மாறன் கூட லனையாளை
யாடா வடகினுங் காணேன்போர் –வாடாக்
கருங்கொல்வேன் மன்னர் கலம் புக்க கொல்லோ
மருங்குல்கொம் பன்னாண்மயிர்’’[23]

தலைவி, தலைவனைப்பற்றிக் கூறும் போது, தலைவனுடைய கூந்தல் மயிர்கள் போர்களத்தினிடத்தே பின்வாங்காத வேற்படையினைக் கொண்ட அரசர் அணியும் முதன்மை அணிகலமாகி முடியாக விளக்கியதைக் கூறுவதிலிருந்து 'தறுகண்' (புகழ்) மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

புகழுடன் வாழ்வது மக்கள் கடமை. பிறர் துன்பத்தைக் களைந்து உதவி செய்வதே நல்லறம். அந்த நல்லறமே புகழைத்தரும் இந்நீதியையும் இந்நூல் உணர்த்துகிறது.

"மிக்க மிகுபுகழ் தாங்குபவவோ ? தற்சேர்ந்தா

ஒற்கம் கடைப்பிடியாதார்''[24]

தன்னை அடைந்தவர்களின் தளர்ச்சியைத் தன்னுடையதாகக் கொண்டு அதைக்களைய முன்வராதவர் மிகுந்த புகழைப் பெறமுடியாது என்று புகழைப்பற்றி எடுத்துரைப்பதைக் காணலாம்.

"மண்இயல் ஞாலத்து மன்னும் புகழ்வேண்டிப்

பெண்இயல் நல்லாய் பிரிந்தார்''[25]

நிலையான புகழ்பெற விரும்பியே பொருள்தேடப் பிரிந்தார்.

மேலும்,

"புகழ்வேள்வித் தீப்போல எச்சாரும்

மின்னும் மழை''[26]

புகழுக்குரிய யாக்கினிபோல், மேகம் எப்பக்கமும் ஒளிவீசும்படி மின்னுகின்றது. என்று குறிப்பிடுவதன் மூலம் 'புகழ்' பற்றிய மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

**கொடைப்பற்றிய மெய்ப்பாடு:**

தம்மிடம் இல்லை என்று வந்தவர்களுக்கு கொடுப்பது தான் கொடை. இவற்றை கார்நாற்பதில் காணலாம்.

“நச்சியார்க்கு ஈதலும் நண்ணார்த் தெறுதலும்

தற்செய்வான் சென்றார் தரூஉந் தளிரியலாய்’’[27]

தம்மை நாடி வந்தவர்க்குக் கொடுப்பதும், பகைவரை அழிப்பதும் தமக்கு புகழ்தரும் என்று நினைத்துப் பொருள் தேடச் சென்றார். தம்மிடத்தே வருபவருக்கு கொடுப்பதன் மூலம் ‘கொடைச்’ சிறப்பை அறியலாம்.

**வெகுளி–மனம் வெந்து சினத்தல்**

வெகுளி என்பது சினத்தினால் (கோவத்தினால்) ஏற்படும் ஒருவகை உணர்ச்சி.

“ ஐந்துருவின் வில்லெழுதி நாற்றிசைக்கு முந்நீரை

யிந்துருவின் மாந்தியிருங்கொண்மூ– முந்துருவி

னொன்றாய் யுருமுடைத்தாய்ப் பெய்வான்போற் பூக்கென்று

கொன்றாய்! கொன்றாய்யெற் குழைத்து’’[28]

தலைவி கொன்றை மரத்தைப் பார்த்து மனம் சினந்து கூறுவதாக அமைந்துள்ளது. இங்கு ‘வெகுளி’ மெய்ப்பாடு தோன்றுவதை அறியலாம்.

திணைமொழி நூற்றைம்பதில்,

“எங்கை யரிலுள்ளா னேபாண! நீ பிறர்

மங்கையரி லென்று மயங்கினாய்– மங்கையரி

லென்னா திறவா திவணின்னி கற்தேகல்

பின்னாரி லந்தி முடிவு’’[29]

தலைவி பாணனிடம் தன் மனையை தவறாக பரத்தையர் மனையென்று நினைத்து வந்து விட்டாய். காலைவேளையாகிவிட்டது. பரத்தையர் மனைக்கு செல் என்று சினந்து கூறுவதைக் காணலாம். இங்கு ‘வெகுளி’ மெய்ப்பாடு தோன்றுதைக் காணலாம்.

“பாலையாழ்ப் பாண்மகனே! பண்டு நின் னாயகற்கு

மாலையா ழோதி வருடாயோ– காலையாழ்’’

செய்யு மிடமறியாய் சேந்தாநின்பொய்ம் மொழிக்கு

றையுமிடமறிந்த நாடு’’[30]

தலைவி, பாணனிடம் தலைவனுக்கு, காலைவேளையில் பாடும் படியான பண்ணினை பாட தவறிலைத்தாய். அதனால், உன்னுடைய பொய்யான சொற்களுக்கு இங்கு இடம் இல்லை என்று தலைவி சினந்து கூறுவதன் மூலம் வெகுளி மெய்ப்பாடு தோன்றுகிறது.

**உவகை மெய்ப்பாடு தோன்றும்மிடம்**

உவகை என்பது பெரும் மகிழ்வை குறிப்பதாகும்.

**செல்வம்:**

செல்வம் உள்ளவர்களே வாழ்க்கையில் இன்பம் அடையமுடியும். புகழ் உள்ளவர்களாக வாழமுடியும், இல்லறத்தில் வாழ்வோர் பொருளீட்டுவதை முதன்மையாக கொள்ள வேண்டும் என்பதைக் கருத்தில் கொண்டு கார்நாற்பதில்,

“புணர்ந்தரு செல்வம் தருபாக்குச் சென்றா்

வணரொலி யைம்பாலாய்வல் வருதல் கூறுப்’’[31]

என்று செல்வத்திற்கு தரும் எடுத்துக் காட்டுகளாக குறிப்பிடுகிறார்.

நல்வினையால் தான் ஒருவருக்குச் செல்வம் பெருகும் என்ற நம்பிக்கை பண்டைத் தமிழரிடம் இருந்தது. அவற்றை,

“வினை விளையச் செல்வம் விளைவதுபோனீடாப்’’[32]

என்று கூறுவதைக் காணலாம்.

**புணர்வு மெய்ப்பாடு**

தலைவனும் தலைவியும் உடலால் இணைவது ‘புணர்ச்சி’ என்பர்.

“ஈர்ந்தண் பொழிலு னிருங்கழித்தண் சேர்ப்பன்

சேர்ந்தென் செறிவளைத்தோள் பற்றிக் தெளித்தமை

மாந்தளிர் மேனியார்! மன்ற விடுவனவோ

பூந்தண் பொரிலுட் குருகு’’[33]

தலைவி, தோழியிடம் வரைவு வேட்கையைக் கூறுவதாகக் இப்பாடல் அமைந்துள்ளது. இயற்கை புணர்ச்சிப் பற்றி, காதல் வயப்பட்ட தலைவியும், தலைவனும் உள்ளத்தால் இணைந்தது போல, (உள்ளப்புணர்ச்சி) உடலால் இணையும் மெய்யுறு புணர்ச்சியையும் மேற்கொண்டுள்ளனர்’’[34] என்று குறிப்பிட்டுள்ளார். இங்கு தலைவி, தலைவனோடு கொண்ட இயற்கைப் புணர்ச்சியைக் குறிப்பிடுவதாக அமைந்துள்ளது இங்கு ‘புணர்வு’ மெய்ப்பாடு தோன்றுகிறது.

**விளையாட்டு:**

விளையாடுவதன் பொருட்டு ஏற்படும் உவகை

" கடும்புலால் புன்னை கடியுந்துறைவ!

படும்புலாற் புட்கடிவான் புக்க—தடம் புலாற்

தாழைமா ஞாழற்றதைத் துயர்ந்த தாழ்பொழி

லேழைமா னோக்கி யிடம்''[35]

தலைவியிடம் விளையாட்டு ஆயத்தைக் குறிப்பிடுவதன் மூலம் 'விளையாட்டு' மெய்ப்பாடு தோன்றுவதைக் காணலாம்.

## 3.2.பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் களவுக்கால, கற்புக்கால மெய்ப்பாடுகள்

அகவாழ்வின் இருகூறுகள் களவும், கற்புமாகும், திருமணம் எனப்படும் கற்பியலுக்கு அழைத்துச் செல்லும் நெறியே களவுநெறி கற்பென்பது நல்வாழ்வு என்றால் அக்கற்பினை அடைவதற்குரிய நன்னெறியே களவாகும். அகவாழ்வின் சிறப்பை அகஇலக்கியங்கள் எடுத்துரைக்கும். ஆயினும் அறத்தையே பெரிதும் வலியுறுத்தும் அறஇலக்கியங்களிலும் அகவாழ்வு சித்தரிக்கப்பட்டுள்ளது.

### களவின் இயல்பு

அறநிலை வழுவாது காதலர்கள் கலந்தொழுகும் ஒழுக்கம் களவு எனப்படும். இக்களவொழுக்கம் உள்ளிருந்து சுரக்கும் அன்புப் பெருக்கினால் வருவது. இது தலைவன் தலைவி என்ற வேற்றுமையின்றி இருவரும் ஒருவராய் ஒழுகும் உள்ளப்புணர்ச்சியாகும் இவ்வுள்ளப் புணர்ச்சி அவர்களை மீண்டும் மீண்டும் சந்திக்கத் தூண்டும்.

"களவு ஒரு குறிக்கோள் அன்று முடிவான பயன் அன்று ஒரு குறிக்கோளை, முடிந்த பயனை அடைதற்குரிய நெறியாகும்''[36]

என்று களவிற்கு விளக்கம் தருகிறார். வ.சுப.மாணிக்கம்.

தலைவன், தலைவி இருவரும் ஒருவரையொருவர் பார்த்தலும், அளவளாவலும் தொடர்ந்து நடைபெறுவது இயலாது. எனவே, தலைவன் தோழனின் துணையையும், தலைவி, தோழியின் துணையையும் நாடுவர். உள்ளத்தில் கள்ளமில்லா வழி இருவரும் சந்திக்க தடை இருக்காது. ஆனால், இருவரின் உள்ளத்திலும் பெற்றோரிடம் காதலை மறைக்கும் களவெனும் கள்ளம் தோன்றியதால் மறைவில் சந்திக்க விரும்புகின்றனர். அகனைந்திணைக்கே பெரும்பான்மையாக உள்ள மெய்ப்பாடுகளுள் களவிற்கும் கற்பிற்கும் உரியனவற்றைத் தனித்தனியே கூறுவர். இங்ஙனம் கூறும் போது முதலில் 'களவு'என்னும் ஒழுகலாற்றிற்குச் சிறந்து வரும் மெய்ப்பாடுகளை வகைப்படுத்திக் கூறுவதைக் காணலாம்.

**புகுமுகம் புரிதல்**

தலைவி தன் முகத்தைத் தலைவன் காணுதலை விரும்புதல் எனப் பொருள் கொள்ளலாம். முதலில் தலைவன் கண்டவுடன் தலைவியிடம் தோன்றுவது இவ்விருப்பமே, புகுமுகம் புரிதல் மெய்ப்பாடு அகநூல்களில் நகுநய மறைத்தல், சிதைவுப்பிறர்கின்மை, துன்பத்துப்புலம்பல், ஏதம் ஆய்தல், பசியடநிற்றல், பசலைபாய்தல் போன்ற மெய்ப்பாடுகள் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் இடம்பெறவில்லை. எனவே பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான திருக்குறளில் இருந்து உதாரணம் தரப்பட்டுள்ளது.

“கூற்றமோ ? கண்ணோ ? பிணையோ ? மடவரல்

நோக்கும் இம்மூன்றும் உடைத்து’’ குறள்–1085.

என்று திருக்குறள் இம்மெய்ப்பாட்டைச் சுட்டுகிறது.

**நகுநய மறைத்தல்**

தலைமகனிடம் தோன்றிய குறிப்புகளால் அவனுடன் பேசி மகிழ வேண்டும் என்ற விருப்பம் தலைவியின் உள்ளத்தே தோன்றிய போதும், அதனையும், அப்போது ஏற்படும் சிறுநகைப்பையும் தலைவிமறைப்பாள்.

“முகை மொக்குள் உள்ளது நாற்றம் போல் பேதை

நகை மொக்குள் உள்ளதொன் றுண்டு’’ குறள்–1274.

என்ற குறளில் இக்குறிப்பு வந்துள்ளது.

**சிதைவு பிறர்க்கின்மை**

சிதைவு என்பது மனம் நிறைதளர்தல் தலைமகள் தனது விருப்பத்தினை மறைத்தாலும், அவளது மனம் தலைவனின் பால் ஈடுபட்டு நிறை தளர்ந்தான் அதனை அவள் பிறர்க்குப் புலனாகாமல் மறைப்பாள் தலைவியின் சிதைவைத் தலைவன் அறிவான் எனலாம்.

“மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பின்றித்

தும்மல் போல் தோன்றி விடும்’’ குறள்–1253.

என்ற குறட்பாவில் இக்குறிப்பை அறியலாம்.

தொல்காப்பியர் கூறிய இருபத்திநான்கு மெய்ப்பாடுகளுள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் இவ்வகை மெய்ப்பாடுகள் தோன்றுகின்றன.

**3.3. பிரிவுக்கால மெய்ப்பாடுகள்**

**இன்பத்தை வெறுத்தல்:**

இன்பத்தை வெறுத்தல் என்பது கோலஞ்செய்தல் முதலியவற்றை வெறுத்தலும், தென்றலும் நிலவு முதலாயினவற்றை வெறுத்தலும்,

“சிறுகுழல் ஓசை செறிதொடீஇ வேல்கொண்
டெறிவது போலும் எமக்கு” குறள்–1127.

என்ற குறளில் அறியலாம்.

**துன்பத்துப் புலம்பல்**

துன்பத்தின் கண்ணேபுலம்புதல்,

“இன்பங்கடல் மற்றும் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது” குறள்–1166.

எனவரும் திருக்குறளை இதற்குச் சான்றெனலாம்.

எதிர்பெய்து பரிதல்

இது உருவு வெளிப்பாடு ஆகும். தலைவனையும் அவன் தேர் முதலாயினவற்றையும் தன்னெதிர் பெய்து கொண்டு பிரிந்து கையறுதல்,

“ கண்ணுள்ளிற் போகார் இமைப்பிற் பருவரார்
நுண்ணியர் எங் காதலவர்” குறள்–1126.

**ஏதம் ஆய்தல்**

கூட்டத்திற்கு வரும் இடையூறு உண்டென்று பலவும் ஆராய்தல்.

“துப்பின் எவனாவர் மற்கொல்துயர் வரவு
நட்பினுள் ஆற்று பவர்” குறள்–1165.

என்ற குறளில் அறியலாம்.

**பசியட நிற்றல்**

பசி வருத்தவும் அதற்குத் தளராது ஊண் உண்ணாமை,

"பசந்தாள் இவளென்பதல்லால் இவளைத்

துறந்தார் அவரென்பார் இல'' குறள்–**1188.**

பசலை பாய்தல்: பசலை பரத்தலே பசலை பாய்தலாகும்.

"இவர் திரை நீக்கியிட்ட டெக்கர் மணன்மேல்

கவர்கா லலவன் நனபெடை யோடு

நிகரி லிருங்கழிச் சேர்ப்ப! என்றோழி

படர் பசலை யாயின்று தோள்''[37]

கடற்கரைத் தலைவனை நினைத்து தன் தோழியாகிய தலைமகளின் தோள் நின் பிரிவாலோ படரப்பெற்ற பசலை பூக்களைப் பெற்று வருந்தா நின்றது. தலைவனை வந்து பசலை நோயை நீக்குவாயாகா, என்று தோழி வேண்டிக் கொள்வதாக இப்பாடல் அமையப் பெற்றுள்ளது.

**உடம்புநனி சுருங்கல்**

உண்ணாமை காரணமாகத் தன் உடம்பு மிகச் சுருக்க முறுதல்,

"பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணை நீங்கித்

தொல்கவின் வாடிய தோள்'' குறள்–**1234.**

என்றுவரும் குறளடிகள் இம்மெய்ப்பாடு காட்டி நிற்கின்றன.

**கண்துயில் மறுத்தல்!**

இது உறங்காமையாகும். தலைவன் வரும் காட்டு வழியில் புலிகளும் யானைகளும் மிகுந்திருக்கும். புலியின் பிடியிலிருந்து விடுபட்டு அஞ்சி, மிக மெதுவாக நடக்கும் யானை. அத்தகைய கொடியகானகம் வழியாக இருளில்

தலைவன் வருகிறானே என எண்ணி அஞ்சிய தலைவி இரவு முழுவதும் உறங்காமல் தவிப்பதைக்

" கொடுவரி வேங்கை பிழைத்துக் கோட்பட்டு

மடிசெவி வேழம் மரீஇ– அடியோசை

அஞ்சி யொதுங்கும் அதருள்ளி யாரிருட்

டுஞ்சா சுடர்த்தொடி கண்''[38]

என்ற தோழியின் கூற்று விளக்குகிறது.

மேலும், திருக்குறளில்

"மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா

என்னல்லாது இல்லா துணை'' குறள்–1168.

என்ற அடிகள் உணர்த்தும்

**கனவோடு மயங்கல்**

கனவை நனவென மயங்குதல். தலைவனைக் காண இயலாத போது தலைவி, அவனைக் கனவிற்கண்டு மயங்குவாள். மலைநாட்டு அருவியைக் காணும் பொழுதெல்லாம் தலைவன் எண்ணம் தோன்ற அழுதலும், வரைவு நீட்டிப்பினால் உறக்கம் வராமல் தளர்த்தலும், இன்ப உணர்ச்சி அற்ற வளாகத் திகழ்தலுமாகிய தலைவியின் நிலையினைத் தோழி தலைவனிடம் கூறுகிறாள். இதை,

"மணிநிற நெய்தல் ஒருங்கழிச் சேர்ப்ப

னணிநல முண்டகன்றா னென்று கொலெம்பொற்

..........................................................................................................

றிணிமண லெக்கர்மேலோதம் பெயரத்

துணிமுந்நீர் துஞ்சாதது’’[39]

என்ற பாடல் விளக்கும்.

தலைவனை நெடுநாள் பிரிந்த தலைவி அவனைப் பார்த்த பின்னும் இன்ப உணர்வு தோன்றாதவளாகச் சித்தரிக்கப்படுகிறாள்.

இவற்றை திருக்குறளில்,

“நனவினால் நல்காக் கொடியோர் கனவினான்

என்னெம்மைப் பீழிப் பது’’ குறள்–1217.

எனவரும் குறட்பா இம்மெய்ப்பாடு காட்டி நிற்கின்றது.

**ஆங்கு நெஞ்சழித்தல்**

ஆங்கு நெஞ்சழித்தல் என்பது அறன் அழிவது போலக் கூறினாலும் அதற்காக உள்ளம் உளைந்து வருந்துதல்,

“பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும்

அறாஅ இடும்பைத்தென் நெஞ்சு’’ குறள்–1295.

என்று வரும் குறட்பாவில் இம்மெய்ப்பாடு உணரப்படுகிறது.

**எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல்**

எம்மெய்யாயினும் ஒப்புமைக்கோடல் என்பது யாதானும் ஒரு பொருள் கண்டவிடத்துத் தலைமகனோடு ஒப்புமை படுத்திக் காணல்.

“புன்கண்ணை வாழி மருள்மாலை எம்கேள் போல்

வன்கண்ண தோநின் துணை’’ குறள்–1222.

என்ற குறட்பா இதற்குச் சான்றாகும்

### 3.4.வரைவுக்கு வழிவகுக்கும் மெய்ப்பாடுகள்

களவுகாலத்தில் தலைவியைச் சந்திக்கத் தலைவன் இரவுக்குறி, பகற்குறிகளைத் தேர்வான். குறியிடத்தைத் தலைவன் நீட்டிக்கும் போதெல்லாம் தோழி, தலைவனிடம் ஊரலர். இற்செறிப்பு, வெறியாட்டு, நொதுமலர் வரைவு போன்ற இன்னல்களிலிருந்து தலைவி விடுதலை பெற விரைவில் திருமணம் செய்தலே ஏற்புடைத்து என வலியுறுத்துவாள். தலைவியைக் களவில் கூடும் வழக்கத்தை விடுத்து விரைவில் மணம் செய்தலே அறமெனத் தலைவனை வலியுறுத்தும் முறையில் தோழியின் உரையாடல்கள் அமையும் தோழியின் இம்முயற்சியே 'வரைவு கடாதல்' ஆகும்.

'வரைவு' என்பது திருணம் 'கடாதல்' என்பது வன்மையாகச் சொல்லுதல் வரைவு கடாதல் என்பது தலைவனின் மனதில் திருமணம் விரைந்து செய்யும்படி ஆழமாகப் பதிய வைக்குமாறு அறிவுறுத்துவதாகும்.

டாக்டர் வ.சுப.மாணிக்கனார் தமது நூலில் தோழியின் நோக்கம் குறித்துக் கூறும் போது "காமம் காழ்கொண்ட இளைய நெஞ்சங்களுக்கு செய்ய வேண்டுவன புலயடா. எண்ணிப் பார்க்கும் அறிவு சில நாளைக்குத் தோன்றாது. இவ்விருவர் செய்கையைத் தோழி, அறிவு நிலையில் நின்று நாடுகிறாள். இளைளாயினும் பொறுப்பு உணர்ந்தவளாதலின் திருமணம் செய்து கொள்க! என தலைவனை இடித்துரைக்கிறாள்''[40] என்று வரைவுகடாவும் தோழியின் இயல்பு பற்றிக் கூறுவர். இவற்றால் தலைவனுக்கு, தலைவியின் இன்னல்களை எடுத்துக்கூறி அறிவுறுத்துதலே வரைவுகடாதல் என்பது பெறப்படும்.

**அச்சத்தின் அகறல்**

தலைவி களவுக் காலத்தில் தலைவன் தன்னைக் காண இரவு இருளிடை வரும் போது அவனுக்கு ஏற்படும் இடையூறுக்கு அஞ்சி நீங்குதல் ‘அச்சத்தின் அகறல்’ மெய்ப்பாடாகும்.

தலைவியைச் சந்திக்க இரவுப் பொழுதில் தலைவன் வருதலால் அவனுக்கு ஏதும் துன்பம் ஏற்படுமோ என அஞ்சி தலைவி அழுவதைப்,

“தன்பரப்பு பாயிருள் நீவரின் தாழ் கோதையாள்
கண்பரப்பக் காணீர் கசிந்து’’[41]

எனத் திணைமாலை நூற்றைம்பது மொழியும்.

**அவன் புணர்வு மறுத்தல்**

களவு வாழ்க்கை நீளும் போது, தலைவிக்கு பலவகை இடையூறுகளும், துன்பங்களும் ஏற்படவாய்ப்புண்டு. ஆதலால், விரைந்து களவு கற்பாக வேண்டுமென்ற நோக்கில் தலைவனுக்கு தோழியால் குறிமறுக்கப்பெறும்.

திணை முற்றியதால் தினைப்புனத்திற்கு தலைவி வர இயலாது எனப் பகற்குறியும், இரவுப்பொழுதில் வழி இடர்கருதி இரவுக் குறியும் மறுக்கப் பெற்றன. எனினும் இரு குறிகளும் தலைவியின் வாழ்க்கைக்கு ஏற்றதல்ல என்ற சூழலில் குறிமறுக்கப் பெறுகிறது. விரைவில் நடைபெறும் திருமணமே தலைவியின் நலனுக்குத் தக்க பாதுகாப்பு எனக் கருதியே தோழியால் தலைவனுக்கு குறிமறுக்கும் நிகழ்வு அமைகிறது.

“பகல்வரிற் கவ்வை பலவாம் பரியா(து)
திரவரி னேதமு மன்ன – புகவரிய

தாழை துவளும் தரங்நீர்ச் சேர்ப்பிற்றே

யேழை நுளையரிடம்’’[42]

என்ற பாடல் தலைவனுக்கு இரவுக்குறி, பகற்குறி மறுக்கப்படுவதற்குத் தக்க சான்றாகும்.

### 3.5. கற்புக்கால மெய்ப்பாடுகள்

தலைவனும் தலைவியும் திருமணத்தால் இணைந்து குடும்பமாக வாழ்தலே இல்வாழ்க்கையாகும். “திருமணம் செய்த கொண்ட பிறகு தலைவனும், தலைவியும் பெறுகின்ற வாழ்க்கை நெறிதான் கற்பு என்பது திருமணத்திலிருந்து தொடங்குவது கற்பு வாழ்க்கை திருமணம் என்பது தலைவன், தலைவியை தன்னுடைய துணையாக ஏற்றுக்கொள்வது’’[43] இல்லறவாழ்வு நல்லறவாழ்வாக மலர்ந்தமையினைப் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் மொழியும் அவ்வாழ்க்கைச் சிறப்பினைத் திணைமாலை நூற்றைம்பது,

“ நல்வயல் லூர நறுஞ்சாந்(கு) தணியகலம்

புல்லிப் புடைபெயரா மாத்திரைக்கட் புல்லியார்

கூட்டு முதலுறையும் கோழி துயிலெடுப்பப்

பாட்டு முரலுமாம் பண்’’[44]

என மொழியும். இங்குத் தலைவன், தலைவியரின் அன்பு வாழ்க்கை பெறப்படுகிறது. ‘புல்லிப்புடை பெயரா’ ஒன்றினார் வாழ்க்கையில் அஃறிணை உயிரான சேவல்குரல் எழுப்பி அவர்களைப் புடைபெயரவைக்கிறது. ஆசிரியரின் இக்கூற்று இல்லறவாழ்வின் செம்மையை விளக்கும்.

**புரையறத்தெளிதல்:**

தனக்கு ஒத்த தலைமகளது உள்ளத்தில் தோன்றும் எண்ணம். இல்லறம் இன்னதென்று தலைமகளது உள்ளத்தே தோன்றுதல் அதுவே புரையத்தெளிதல்.

“தேரோன் மலைமறையத் தீங்குழல் வெய்தாக
வாரான் விடுவானோ வாட்கண்ணாய்! காரார்
குருந்தோடு முல்லை குலைத்தனகா ணாமும்
விருந்தோடு நிற்றல் விதி’’[45]

தலைவனுக்கு விருந்து முதலியன செய்து காத்திருத்தல் நமது கடமையாம் என தோழி தலைவிக்கு இல்லறத்தின் மாண்பை ‘விருந்தோம்பல்’ மூலம் கூறுவதைக் காணலாம்.

**புணர்ந்துழி உண்மை:**

‘புணர்ந்துழி உண்மை’ என்பது தலைவன் தலைவியோடு ஒற்றுமையோடு இருந்த காலத்தில் தோன்றிய உள்ளநிகழ்ச்சியை கூறுதல்.

“குளிரும் பருவம்தே யாயினுந் தென்றல்
வளியெறியின் மெய்யிற் கினிதாம். ஒளியிழாய்
ஊடியிருப்பினும் மூரனறுமேனி
கூடலினிதாம் மெனக்கு’’[46]

என்ற ஐந்திணை ஐம்பதில் தலைவி புணர்ந்துழி உண்மை கூறுகிறாள்.

**அருள்மிக உடைமை**

தலைவனின் பிரிவை விட, அவனிடம் கொண்ட அன்பே சிறந்தது என்ற தலைவியின் எண்ணத்தில் தோன்றுகிறது. பொருள்வயிற் பிரிந்து தலைவன் செல்லும் வழிக்கொடுமையை எண்ணிக் கலங்குபவளாகவும், தலைவி படைக்கப்பட்டுள்ளாள். பாலைநிலமும், கள்வர் அச்சமும், தண்ணீர் இன்மையும் தலைவன் செல்லும் வழியின் இயல்புகள் இதனை,

"கடிதோடும் வெண்டேரை நீராமென் றெண்ணிப்

..........................................................................................

வெடியோடும் வெங்கானம் சேர்வார்கொல் நல்லாய்''[47]

என்றவரி இயம்பும். வினையே ஆடவர்க்கு உயிராகும். அவ்வினை மேற்செல்லுங்கால் துன்பம் ஏற்படுதல் இயல்பேயாயினும் அத்துன்பத்தைக் கண்டு துன்படுதல் தலைவியின் வருத்தமும் இயல்பினதே. இவ்வியல்பு தலைவியின் அன்பின் ஆழத்தைப் புலப்படுத்துவதாக அமைகிறது.

**அன்புதொக நிற்றல்**

மகவு பெற்ற தலைவியின் கூந்தலைத் தலைவன் வருடிக் கொடுத்தலும், இளம் புதல்வனை மடியில் படுக்க வைத்து அன்பு பேணுதலும் இல்லறத்தின் மாண்பாகும். இங்கு தாய்மையிலும் தலைவன், தலைவியின் அன்பு வாழ்க்கை வெளிப்படுகிறது. இதனைத்,

"தேங்கமழ் பொய்கை அகவயல் ஊரனைப்

பூங்கண் புதல்வன் மிதித்துழக்க– ஈங்குத்

தளர்முலை பாராட்டி என்னுடைய பாவை

வளர்முலைக்கண் ஒழுக்கு வார்’’[48]

என்ற பாடல் விளக்கம் பெற்றோருக்கு மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் தரும் அதனையே ‘பூங்கண் புதல்வன் மிதித்துழக’ எனும் தொடரால் குறிப்பிடுவார் மூவாதியார். இங்குப் புதல்வர் போற்றின் சிறப்பு விளக்க முடிகிறது. அந்நல்லறத்தாலேயே குழந்தைப் பேற்றின் பின்னரும் இல்லறம் வாழ்வில் அன்பு பாராட்டும் மாண்பினைத் தலைவன், தலைவியை வருடிக் கொடுத்தலால் அறிகிறோம். அன்பில் மலரும் குடும்பங்களே பண்பில் சிறந்து விளங்க முடியும் என்பதற்குப் பதினெண்கீழ்க்கணக்குப் பாடல்கள் சான்றாகின்றன.

**பிரிவாற்றாமை**

இல்லறம் செம்மையாகப் பொருள் இன்றியமையாதது. பொருளில்லார்க்கு இவ்வுலகில் இன்பம் அமையாது. தலைவியை வருந்தாது காக்கத் தலைவன் பொருள்வயிற் பிரிதல் இயல்பு. ஆனால் தலைவி அன்பிற்க்கு ஆட்பட்டவள். அன்பே அவளின் வாழ்வு. அவ்வன்பின் ஊற்றாக இருக்கும் தலைவனின் பிரிவு அவளால் தாங்க முடியாது துயரைத்தரும். ஆதலால், பொருள் வயிற்பிரிவும் தலைவனை அருளில்லாதவளாகப் பேசுகிறாள். இதனை,

“மெல்லியல் கண்ணோட்ட மின்றிப் பொருட்கிவர்ந்து

நில்லாத உள்ளத்தவர்’’[49]

என்ற வரியால் உணரலாம். இங்கு ‘கண்ணோட்டம் இன்றி’ எனத் தலைவி கூறுவது அன்பின் ஆழத்தினால் கூறுவதாகும். ‘அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்’ என்ற வள்ளவரின் கூற்று, இங்குத் தலைவனின் பிரிவு அன்பினை அடைக்கும் தாழாகி விடுமோ என்ற தலைவியின் ஐயத்தை மூவாதியாரின் கூற்றால் உணரமுடிகிறது.

## தொகுப்புரை

- இலக்கியங்கள் உலகியல் அறத்தை வலியுறுத்துவன. அறநூல்கள் தமிழர்களின் தனிப்பட்ட வாழ்க்கைச் சிறப்பை காதலன்–காதலிகளின் அன்பு வாழ்க்கையை எடுத்துரைக்கின்றன.

- உயிர்களுக்கு இன்பம் பொதுவானது. அவ்வகை இன்பம் ஒழுக்கத்தின் அடிப்படையில் அமைதல் வேண்டும் என்பதையே அறஇலக்கியங்கள் வலியுறுத்தப்பட்டுள்ளது.

- அறஇலக்கியங்களில் ‘ஒழுக்கம்’ பெரும்பாலும் தோழியால் வலியுறுத்தப்பட்டுள்ளது.

- தந்தை, தாயர், தமருக்குத் தலைவியின் களவினை, தோழி வெளிப்படுத்துவதைக் காணலாம். களவினை வெளிப்படுத்தும் செயல்களே அறத்தோடு நிற்றலாகும்.

- வரைவு கடாதலும் சமுதாய அறம் பிறழாமைக்கு ஊன்று கோலாய் அமைவதை அறநூல்களில் காணலாம்.

- திருமணத்திற்குப் பிந்தைய இல்லறச்சிறப்பு தாய்மையிலும், குழந்தைப் பேற்றிலும் அமைகிறது.

- தலைவன் பொருள்வழிப் பிரிவில் வருந்தும் தலைவியின் நிலைமை அவளது அன்பின் ஆழத்தைப் புலப்படுத்துகிறது.

- பரத்தையர் பிரிவிற்குப் பின்னரும் தலைவனுடன் இணைவது தலைவியின் அன்பு மனத்தை புலப்படுத்துகிறது.

## சான்றெண்விளக்கம்

1. இலக்கண விளக்கம் பொருளதிகாரம் அகத்திணையியல் முற்பகுதி, ப.25.
2. தி.மொ.ஐம். பா.21.
3. மேலது. பா.35.
4. தி.மா.நூ.ஐம், பா.3.
5. ஐந்.எழு.பா.50.
6. மேலது. பா.55.
7. தி.மா.நூ.ஐம்.பா.140.
8. மேலது. பா.122.
9. மேலது. பா.99.
10. ஐந்.ஐம்.பா.44.
11. தி.மா.நூ.ஐம்.பா.80.
12. ஐந்.ஐம்.பா.27.
13. தி.மொழி.ஐம்.பா.46.
14. தி.மாலை.நூற்.ஐம்.பா.24.
15. தி.மொழி.ஐம்.பா.36.
16. மேலது.பா.16.
17. சி.இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப.144.
18. தி.மா.நூ. பா.95.
19. மேலது. பா.143.

20. தி.மொ.ஐம்.பா.1.

21. மேலது.பா.17.

22. தி.மொ.நூ.ஐம்.பா.79.

23. மேலது.பா.4.

24. ஐந்.ஐம்.பா.4.

25. கார்.நாற்.பா.8.

26. மேலது.பா.51.

27. மேலது.பா.7.

28. தி.மா.நூ.ஐம்.பா.104.

29. மேலது.பா.132.

30. மேலது.பா.133.

31. கார்.நாற்.பா.1.

32. தி.மா.நூ.ஐம்.பா.5.

33. ஐந்.எழு.பா.45.

34. சங்க இலக்கியத்தில் குடும்பம் பெ.மாதையன்.ப.30.

35. தி.மா.நூ.பா.44.

36. தமிழ் காதல், வ.சுப.மாணிக்கம், ப.79.

37. ஐந்.எழு.பா.65.

38. ஐந்.ஐம்.பா.16.

39. ஐந்.எழு.பா.58.

40. தமிழ்க்காதல்,வ.சுப.மாணிக்கம்.ப.70

41. தி.மா.நூ.ஐம்.பா.34.

42. மேலது.பா.59.

43. தமிழ்க்காதல், வ.சுப.மாணிக்கம், ப.79.

44. தி.மா.நூ.ஐம்.ப.143.

45. மேலது.பா.112.

46. ஐந்.ஐம்.பா.30.

47. மேலது. பா.36.

48. ஐந்.ஐம்.பா.47.

49. ஐந்.எழு.பா.28.

# இயல்– 4

# சங்க இலக்கியம்– பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் மெய்ப்பாடுகள்– ஓர் ஒப்பீடு

தமிழ்மொழி வளமான இலக்கியப் பரப்பையும், இலக்கிய வகைகளையும் கொண்ட மொழியாகத் திகழ்கின்றது. தமிழ்மொழியின் இலக்கியங்கள் உலகிலுள்ள அனைத்து மொழிகளின் இலக்கியங்களுடனும் கருத்துக்களுடனும் ஒப்பிடக்கூடிய பண்புகளைப் பெற்றுக் காணப்படுகின்றது. ஒப்பிலக்கியத் திறனாய்வு, இலக்கியத்தை விளக்குவதற்கும், புதிய புதிய தகவல்களை வழங்குவதற்கும் வாய்ப்பளிக்கின்ற ஒன்றாகும். இன்றளவில் ஒப்பிலக்கியம் மிகவும் வளர்ச்சியடைந்த ஒரு துறையாக உள்ளது. அதுமட்டுமன்றி அறிஞர்களின் கவனத்தைக் கவரக்கூடிய துறைகளில் இதுவும் ஒன்று எனலாம்.

“இலக்கியத்தை பகுத்தாய அறிவியல் வழிதேவை. இலக்கியத்தைப் புரிந்துகொள்ள கலையியல் வழிதேவை. ஒன்றின்று ஒன்று அமையாது ஆராய்ச்சி படைப்புக்குத் துணைசெய்யும் இவ்விரண்டு இலக்கியங்களும் இணைந்து பிறக்கும் இலக்கியக் கொள்கைகளைத் தருவதே ஒப்பியல் இலக்கியமாகும். ஒப்பிலக்கியம் புதிய இலக்கியம் படைப்பதற்கும் துணை செய்யும். இவ்வாறு தனிமைத்திறன், போற்றும் இலக்கியத்தைப் பொதுமைத் திறங்காணும் அறிவியலில் வைத்துப் புதுமையாக ஆராயும் துறையைத்தான் இலக்கிய ஒப்பீடு என்று பெயர்”[1]

### 4.1. ஒப்பிலக்கியத் திறனாய்விற்கான அடிப்படை

1. ஒப்பீட்டுமுறைத் திறனாய்வு நிகழ்த்துவதற்கு அடிப்படையான கருதுகோள்கள் ஒத்த சமுதாய வரலாற்று சூழல்களில் பிறக்கும் இலக்கியங்கள் ஒத்த தன்மையைப் பெற்றிருக்கக்கூடும்.

2. ஏற்புத்திறனைச் சார்ந்து ஓர் இலக்கியம் இன்னொரு இலக்கியத்தை தனது செல்வாக்கிற்கு உட்படுத்தக்கூடும்.

3. மொழியாலும், இனத்தாலும், அரசியல், புவியியல் பரப்பாலும் வேறுபட்டாலும் அத்தகைய வரையறைகளை மீறி இலக்கியங்கள் தமக்குள் ஒன்றுபட்ட பண்புகளையும், பயன்களையும் பெற்றிருக்க வேண்டும்.

4. ஒன்றுபட்டும் வேறுபட்டும் அமைகின்ற பின்புலங்களிலிருந்து பார்க்கிறபோது குறிப்பிட்ட இலக்கியத்தின் பண்புகளும் கூறுகளும் தெளிவாகவும் விளக்கமாகவும் புலப்படக்கூடும்.

இவ்வாறெல்லாம் இலக்கியப் பனுவல்களை விளக்கவாய்ப்பு இருப்பதனால் தான் ஒப்பீட்டுமுறைத் திறனாய்வு உலக இலக்கியங்கள் அனைத்திலும் செல்வாக்குள்ள ஒரு முறையாக நின்று நிலவுகிறது.

நம் அகப்பாடல் நாடக வடிவினது தனிநிலைப்பாடல் போன்ற கருத்தோட்டம் உடையது. மூன்று வகைமைகளாக அங்கே கிளைத்த இலக்கியம். இங்கு முப்பண்பும் ஒன்றில் ஒரு பண்பு கூடியும் மற்றது குறைந்தும் அமைந்த நிலையில் வளர்ந்தமை தனியாய்வுக்குரியது.

“புறச்சூழல்களான சமுதாய அமைப்பு, அரசியல் சூழ்நிலைகள் அறக்கோட்பாடுகளின் இயல்பு, புதுவிதமான சமய அறிவியல் பாதிப்புகள் அவை சமுதாய மனப்போக்கில் (Collective psychology) ஏற்படுத்தும் தாக்கங்கள் போன்றன அடிப்படை உணர்வுகளையும், ஓரளவு பாதித்து நிற்பதால், வடிவத்தோடு இலக்கிய உள்ளீடும் (Literary Content) காலத்திற்கு காலம் மாறுபடுகிறது”[2] இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள் இம்மாறுபாட்டிலுள்ள உலகம் தழுவிய பொதுமைப்பண்புகளை அடிப்படையாகக் கொண்டே இலக்கியங்களை ஒப்பியல் நோக்கில் உள்ளீடு (Theme) அடிப்படையில் ஆய்கின்றோம்.

**இலக்கியக் கொள்கைகள்**

இலக்கியங்களைச் செம்மைப்படுத்துவதற்குப் பல்வேறு இலக்கியக் கொள்கைகள் உள்ளன. நவீன இலக்கியங்களான நாவல், சிறுகதை, கவிதையில் மேலை நாட்டுக் கொள்கைகள் அதிகமாக உட்படுத்திப் பார்க்கப்பட்டுள்ளன. இவை தவிர்த்துப் பழமையான தமிழ் இலக்கியங்களிலும் புகுத்தித் திறனாய்வு செய்யப்பட்டுள்ளன. அவை விளக்கமுறைத் திறனாய்வு, மதிப்பீட்டு முறைத் திறனாய்வு, பகுப்பு முறைத் திறனாய்வு ஆகியவையாகும். மேலும் சமுதாயவியல், வரலாற்றியல், மொழியியல் முதலியனவும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. இச்சிந்தனைக் கொண்டு தமிழ் இலக்கியத்தின் தகுதிபாட்டினைத் திறனாய்வாளர்கள் வெளிக்கொணர்ந்துள்ளனர்.

தமிழ்த் திறனாய்வாளர்கள் உலக அளவிலான தரத்தினை நிறுவுவதற்கு ஒப்பியல் ஆய்வையே மேற்கொண்டுள்ளனர். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஒப்பியல் ஆய்வைச் செய்துள்ளனர். தமிழ் இலக்கியங்களை உலகமொழி இலக்கியங்கள் அனைத்தோடும் ஒப்பிட்டு பார்த்து இருக்கின்றனர்.

உலகில் என்று மனிதன் எண்ணத் தொடங்கினானோ அன்றே ஒப்பீட்டு நோக்கும் முறையும் உடன் தோன்றியது எனலாம். மேலும், மனிதனின் கற்பனை ஒப்பீட்டுமுறை உருவாவதற்கும் உறுதுணையாய் உள்ளது.

"உள்ளதை உணர்ந்தவாறு கூறும் இலக்கியத்தில் கற்பனையே மூலக்கூறு எல்லா மொழிகளிலும், எல்லா இலக்கியங்களிலும் எக்காலத்தும் கற்பனை இருக்கக் காண்கிறோம் இவ்வகையில் உலக இலக்கியக் கருவூலங்களை அறிவியல்– தத்துவ– ஒப்பீட்டு முறையில் ஒப்பிட்டுக் கண்டால் பல பேருண்மைகள் வெளிப்படும்"[3]

**இலக்கியத்தில் கற்பனை**

ஒப்பிலக்கியத்தினால் ஏற்படக்கூட பயன்கள் காலம், இடம் இனவாழ்வு, சுற்றுச்சூழல் ஆகியவற்றைக் கடந்து ஒப்புநோக்கும் கற்பனை பரந்து பட்டதாய் உள்ளது என்பது சிறிது கற்பனை செய்தால் தெளிவாக விளங்கும் அறிவியற் கற்பனைகள் சில பல விதிமுறைகளின் மேல் உருவாகும். இலக்கியக் கற்பனைக்கோ வரையறை தேவை இல்லை. ஆனால், இலக்கியத்தைப் படைக்கும் கலைஞன் தன் மொழியில் உள்ள சொற்களில் பெரும்பாலும் கட்டுண்டு அவைகளின் வாயிலாகக் கருத்துக்களை விளக்கும் நிலையில் இருக்கிறான். புதிய புதிய எண்ணங்களை வெளிப்படுத்தப் புத்தம் புதிய சொற்களைக் கவிஞன் ஆக்கிக் கொள்ள முடியாது. இலக்கியக் கலையில் பயின்று வரும் சொற்களையே கலைஞன் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். உலகெங்கிலும் கவிஞர்களுடைய எண்ணப் படைப்புகள் சமுதாயத்தின் எதிரொலிகளாக அமைந்து கிடப்பதோடு மட்டுமல்லாமல் பல்வேறு சூழல்களுக்கு ஏற்றவாறு மாறவும் செய்கின்றன. இப்படிப்பட்டவைகளை

ஒப்பிட்டு நோக்கும் போது பல உண்மைகள் நமக்குப் புலனாகின்றன. இதனால் இலக்கியச் சுவை மேம்பட வாய்ப்பு ஏற்படுவதோடு, கண்மூடித்தனமாக ஒரு சில இலக்கியங்களை மட்டும் கற்பதால் ஏற்படும் தவறான எண்ணங்கள் நீங்கவும் வழிவகை செய்கிறது.

**ஒப்பாய்வின் பயன்கள்**

இலக்கியத்திற்கு மட்டும் ஒப்பீடு உரியதன்று. முன்புகூறியவாறு பிறதுறைகள் அனைத்தும ஒப்பீட்டை ஏற்றபிறகே இலக்கியம் இறுதியாக அதனை ஏற்றுள்ளது. அதுபோல, இலக்கிய ஆராய்ச்சிக்கும் ‘ஒப்பீடு’ மட்டும் வழியன்று. பிறமுறைகள் பலவும் உள. பொருளறிதல், சுவையுணர்தல், நலம்பாராட்டல், சொல்லாட்சித்திறன் அறிதல், கற்பனைச் சிறப்பை எடுத்துக்காட்டுதல் என எத்தனையோ முறைகள் உள்ளன. இலக்கிய ஆய்வில் இம்முறைகள் எல்லாம் பயன்படுத்தப்பட்ட பிறகே இன்று ஒப்பீட்டு முறை போற்றப்படுகிறது.

மனித சமுதாயத்தின் மொத்த வளர்ச்சியிலும், மாற்றத்திலும் பொதுமைப் பண்பு நிலவுவதால், அதன் அனுபவ எண்ண வெளியீடான இலக்கியத்திலும் பொதுமைப்பண்பை நாம் காணமுடிகிறது. இப்பொதுமைப்பண்பு இலக்கிய ஒப்பாய்விற்கு வித்திட்டு அதை வளர்க்கத் துணைநிற்பதோடு அத்துறையின் ஒளிமயமான எதிர்காலத்தைப் பற்றிய அசைக்கமுடியாத நம்பிக்கையினையும் ஒப்பியலறிகளின் உள்ளங்களின் தோற்றுவித்துள்ளது’’[4]

**4.2.ஒப்பீட்டுத்துறையில் ஆராய்ச்சிகள்**

ஒப்பீட்டு முறையில் தொடர்ந்து பல்வேறு ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. வ.வே.சு.அய்யரின் ‘‘Kamba Ramayana A study

எனும் நூல், கம்பனை வால்மீகியுடனும் மில்டனுடனும் ஒப்பிடுகின்றது''[5] தமிழ் இலக்கியத்தை உலக இலக்கியங்களோடு மட்டுமல்லாமல் இந்திய இலக்கியங்களோடும் ஒப்பாய்வு செய்துள்ளனர். இதற்கு மோகனராசுவின் 'தொல்காப்பியமும் திருக்குறளும், ஓர் ஒப்பாய்வு எனும் நூலும், அ.அ.மணவாளனின் 'இலக்கிய ஒப்பாய்வுக் காப்பியங்கள்' எனும் நூலும் சான்றுகளாகும். தற்காலத்தில் பழந்தமிழ் இலக்கியத்தின் காலம், பாடுபொருள், பாடியோன், சமூகம், அரசியல், பொருளாதாரம், பண்பாடு, கலாச்சாரம், வடிவம், கட்டமைப்பு, ஆகியவற்றைக் கொண்டு பிற்கால இலக்கியத்தை ஒப்பிட்டு பார்த்தல் சிறப்பாக நடந்து வருகிறது.

சமுதாயப் பின்னணியும் வாய்மொழி அடிப்படையும் உலக இலக்கியங்கள் அனைத்திற்கும் பொதுவானவை. எனவே உலகளாவிய கண்ணோட்டத்தில் இவ்வகை பொதுப் பண்புகளை ஆராய்வதும் ஒப்பிலக்கிய எல்லைக்குள் வருகிறது. காலம்,  இடம், இனவாழ்வு, சுற்றுச்சூழல் ஆகியவற்றைக் கடந்து ஒப்பு நோக்கும் கற்பனை பரந்துபட்டதாய் உள்ளது என்பது சிறிது கற்பனை செய்யின் தெளிவாக விளங்கும். அறிவியல் கற்பனைகள் சில பல விதிமுறைகளின் மேல் உருவாகும். ஆனால், இலக்கியத்தைப் படைக்கும் கலைஞன் தன் மொழியில் உள்ள சொற்களில் பெரும்பாலும் கட்டுண்டு அவைகளின் வாயிலாகக் கருத்துக்களை விளக்கும் நிலையில் இருக்கிறான். புதிய புதிய எண்ணங்களை வெளிப்படுத்தப்புத்தம் புதிய சொற்களைக் கவிஞன் ஆக்கிக் கொள்ளமுடியாது.

''ஒப்பிலக்கியத்தின் குணநலன்கள் அதன் குறைளைவிட மிகுந்து காணப்படும். இலக்கியத்தைப் பற்றிய தவறான கருத்தக்களை அது போக்குகிறது. தேசிய வட்டாரச் சூழலுக்குள் கட்டுப்பட்டிருந்தாலும்,

ஒப்பிலக்கிய எல்லா இலக்கியங்களையும் பல உபநதிகள் சேரும் பெரிய நதியினைப் போல ஒரு பரந்துபட்ட தனிப்பொருளாகவே கருதுகிறது. பொதுவாக இலக்கிய வளர்ச்சிக்கு அந்த இலகியங்கள் எத்துணைப் பயன்பட்டுள்ளன என்பதையும் ஒப்பிலக்கியம் ஆய்வு செய்யும். இவ்வாறு இலக்கிய ஆய்வின் உள்ளீடுகளையும் முழுப்பொறுப்பினையும் ஒப்பிலக்கியம் ஒத்துக்கொள்கிறது. எந்தக் கலாச்சாரப் பின்னணியில் இருந்தாலும், இலக்கியப்பணி, தெளிவு, விளக்கம், ஆகிய பொது நோக்கோடு பணியாற்றுவோரிடம் தாம் ஒரு கற்றுணர்ந்த குழுவினைச் சார்ந்தவர்கள் என்ற உணர்வினை ஏற்படுத்துகிறது'[6]

இலக்கியக் கலையில் பயின்று வரும் சொற்களையே கலைஞன் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். உலகெங்கிலும் கவிஞர்களுடைய எண்ணப்படைப்புகள் சமுதாயத்தின் எதிரொலிகளாக அமைந்து கிடப்பதோடு மட்டுமல்லாமல் பல்வேறு சூழல்களுக்கு ஏற்றவாறு மாறவும் செய்கின்றன. இப்படிப்பட்டவைகளை ஒப்பிட்டு நோக்கும் போது பல உண்மைகள் நமக்குப் புலனாகின்றன. இதனால் இலக்கியச் சுவை மேம்பட வாய்ப்பு ஏற்படுகிறது.

''ஒப்புமைக்கான காரணிகளைக் கண்டறிவதும், ஒப்புமைகள் தோன்றக் காரணமாயிருந்த பகைப்புலத்தை விளக்கிக் கொள்வதும், இலக்கியங்களைப் படைக்கும் கர்த்தர்களுக்கும் சூழலுக்குமுள்ள பரஸ்பரத் தொடர்பினை அறிந்து கொள்வதும் ஒப்பியலின் பண்புகளாம்.''[7] இக்கருத்தாக்கத்தின் படி சங்க இலக்கியம் மற்றும் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களின் ஒப்பாய்வில் வெளிப்பட்டிருக்கும் கூறுகளை அணுகினால் அவ்ஒற்றுமை வெளிப்படும்.

**ஒப்பிலக்கியம்**

ஒப்பிலக்கியம் என்பதை ஆங்கிலத்தில் Comparative literature என்று கூறுவர். இத்தொடரில் ‘comparative’ என்ற சொல்லின் மூலம் இலத்தீன் மொழியிலுள்ள ‘compartion’ என்ற சொல்லாகும். இச்சொல்லை ‘ஒப்பு நோக்கல்’ என்ற பொருளில் **1558** இல் பிரான்சிஸ் போர்ஸ் என்பவர் பயன்படுத்தியுள்ளார். கிரேக்க மொழியின் Gram என்ற சொல்லின் இலத்தீன் மொழிபெயர்ப்பே ‘literature’ என்ற சொல். இச்சொல் முதலில் எழுத்தையும் பின்னர் பல்துறை நூல்களையும் குறித்து இன்று இலக்கியத்தைக் குறிக்கிறது.

‘‘சமூக உருவாக்கம் என்பது வரலாற்று நிலைப்பட்டது. சமூகம் எல்லாம் காலங்களிலும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. சமூக மாற்றம் அவ்வக் காலகட்டச் சூழலுக்கு ஏற்ற இலக்கிய படைப்புகளையும் உள்ளடக்கியது’’[8]

சங்க காலத்தில் சங்க இலக்கியங்கள் இயற்றப்பட்டன. களப்பிரர் ஆட்சிக்காலத்தில் நீதிநூல்கள் தோன்றின. இவ்விரு இலக்கியங்களுக்கும் இடைவெளி இருந்த போதிலும் இடையில் சில ஒப்புமைக்கூறுகள் காணப்படுகின்றன. அகத்திணையில் பல்வேறு ஒப்புமைக்கூறுகள் உள்ளன. அவ்ஒப்புமைச் செய்திகளை விளக்குவதே இவ்வியலின் நோக்கம்.

**4.3.காதலும் வீரமும்**

சங்க இலக்கியம் காதலையும், வீரத்தையும் அடிப்படையாகக் கொண்டு விளங்குகின்றது. பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் நீதியையும் காதலையும் வீரத்தையும் அடிப்படையாகக் கொண்டு விளங்குவன. சங்க இலக்கியங்களும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் முறையே அன்பையும், அறத்தையும்

அடிப்படை உணர்ச்சிகளாக பெற்றுத் திகழ்கின்றன. சங்க இலக்கியத்தில் தலைவன் தலைவி இருவரிடையே இயன்ற அன்பு காணப்படும். இதனை,

''யாயும் யாயும் யாராகியரோ

எந்தையும் நுந்தையும் எம்முறைகேளிர்

யானும் நீயும் எவ்வழி அறிதும்''[9]

என்ற பாடலடிகள் மூலம் காணலாம். பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஐந்திணை ஐம்பதில் தலைவன், தலைவி கடந்து சென்ற வழியைக் குறிப்பிடும் போது

''சுணைவாய்ச் சிறுநீரை யெய்தாதென் றெண்ணிப்

பிணைமா னினிதுண்ண வேண்டிக் – கலைமாத்தன்

கள்ளத்தி னூச்சுஞ் சுரமென்பர் காதல

ருள்ளம் படர்ந்த நெறி''[10]

சுணையில் உள்ள நீரைப் பிணைக்கு உண்ண நிரம்பாது என்று எண்ணிப் பொய்யாக உறிஞ்சும் சுரம் என்று குறிப்பிடுவது மேற்கண்ட கருத்தோடு ஒப்புநோக்கத்தக்கது.

**அறத்தோடு நிற்றல்**

தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியத்திலும் காணப்படும். மற்றொரு குறிப்பிடத்தக்க அகமரபு அறத்தோடு நிற்றலாகும். இதனை,

''யானே காதலற் கெடுத்த சிறுமையோடு நோய் கூர்ந்து

ஆதிமந்திப் போலப் பேதுற்று

அலந்தனன் உழல்வேன் கொல்லோ பொலந்தாது''[9]

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

**அறத்தோடு நிற்கும் முறையும் பயனும்**

களவு கற்பாக மலர அறத்தோடு நிற்றல் இன்றியமையாதது. அறத்தோடு நிற்றல் என்பது களவில் ஈடுபட்ட தலைவியின் திருமணம் நிறைவேற உறுதுணையாக அமைதலாகும். அறத்தோடு நிற்றல் தலைமகளால் தோழிக்கும், தோழியால் செவிலிக்கும், செவிலியால் நற்றாய்க்கும், நற்றாயால் தந்தை தமருக்கும் அறிவிக்கப்படும்.

'அறத்தோடு நிற்றல் என்பது இற்செறிப்பு, வெறியாட்டு என்பனவற்றுக்குப் பின் நிகழும் முக்கியச் செயலாகும் காதலைத் தோழிக்கும், தாயார்க்கும் வெளிப்படுத்தும் அறநெறியாக அமைந்துள்ளது. அது மரபுக்கு முரணானது என அறியப்பட்ட நிலையிலும் அறத்தோடு நிற்றல் சங்க இலக்கியத்தில் பெற்றுள்ள அபத்தமான செயற்பாடு, இளம்சமுதாயத்தினரிடையே காதல் எத்துணை அளவுக்கு வலிமையுடன் ஆழமாக வேரூன்றி இருந்தது என்பதை வெளிப்படுத்துகிறது. அது முழுக்கப் பெண்டிர்தம் செயற்பாடாகவே அறத்தோடு நிற்றலாகிய காதல் வெளிப்படுத்தச் செயற்பாடு நடைபெற்றுள்ளது.'[11]

பதினெண்கீழ்க்கணக்கிலும் தோழி, மெய்யாக நடந்த ஒன்றைக் கூறியோ, பொய்மையான ஒரு நிகழ்வைக் கற்பித்தோ, தலைவியின் நாணம் சிதையாது அவளின் நெஞ்சத்தை அறிவாள் தோழி. தலைவி தன் களவினைத் தோழிக்கு உணர்த்தக்கூடிய நிலையே 'அறத்தோடு நிற்றல்' எனப்பட்டது.

''வில்லார் விழவினும் வேலாழி சூழுலகி
னல்லார் விழவகத்து நாங்காணே – நல்லாய்!

உவர்க்கத் தொரோவுதவிச் சேர்ப்பனொப் பாரைச்

சுவர்க்கத் துளராயிற் சூழ்''[12]

தலைமகனை கோலஞ்செய்து, அக்கோலத்தினை வியந்து பார்த்து, இவளுக்கு தக்கவன் யாரவன் என்று வினவிய செவிலிக்கு தோழி, தலைமகனைப் பற்றி மூவுலகத்திலும் இவனைப் போன்ற ஆடவர் இல்லை. சுவர்க்கத்தில் உளராயின் ஆராய்வோம் என்று தலைவனைப் பற்றி மிகப் பெருமையாக உரைத்து செவிலிக்கு அறத்தோடு நிற்பதைக் காணலாம்.

**காமம் மிக்க கழிபடர் கிளவி**

களவொழுக்கத்தின் கண் பிரிவு நேர்ந்தபோது தலைவிக்கு ஏற்படும் மிகையான துன்பப் பெருக்கே 'காமம் மிக்க கழிபடர் கிளவியாகும்'. சங்க இலக்கியத்தில் காணப்படும் மரபினை பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களிலும் காணமுடிகிறது.

''குவி இணர்த் தோன்றி ஒண்பூ அன்ன

தொகுசெந் நெற்றிக் கணம்கொள் சேவல்!

நள்ளிருள் யாமத்து இல்எலி யார்க்கும்

பிள்ளை வெருகிற்கு அல்கு இரைஆகி

கடுநவைப் படீஇயரோ, நீயே, நெடுநீர்''[14]

நீண்டநாள் பொருள்முற்றித் தலைவன் தன் இல்லம் வந்து, தலைவியோடு கூடி மகிழ்ந்தான். அவ்வின்பத்தை சேவலானது கூவித் துயில் எழுப்பியதால் தலைவி அச்சேவலனின் மேல் மிகுந்த சினம் கொள்கிறாள். இங்கு தலைவியின் காமம்

வெளிப்படுவதைக் காணலாம். இதே போல பதினெண்கீழ்க்கணக்கு அகநூலில் திணைமாலை நூற்றம்பதில்,

“மாக்கடல்சேர் வெண்மணற் றண்கானற் பாய்திரைசேர்
மாக்கடல்சேர் தண்பரப்பன் மார்பணங்கா மாக்கடலே!
என்போலத் துஞ்சா யிதுசெய்தார் யாருரையா
யென்போலுந் துன்ப நினக்கு”[15]

தலைவி, தலைவனை நினைத்து காமத்தினால் உறங்காது தவிக்கிறாள். அதுபோல் கடலும் உறங்காது எப்போதும் ஓலமிட்டுக் கொண்டு இருக்கிறாய். அதனால் உனக்கும் துன்பத்தைத் தந்தவர் யார் என்று தலைவி கடலைப் பார்த்து கூறுவதாக அமைந்துள்ளது. இவ்வாறு சங்க இலக்கியப் பாடல்களிலும் பதினெண்கீழ்க்கணக்கு நூலிலும் தலைவி காமநோயினால் படும் துன்பத்தைக் காணலாம்.

**வெறியாடல்**

காதல் வயப்பட்ட தலைவியின் பசலையும், உடல்மெலிவும், உண்ணாமையும், துயிலின்மையும், மகளின் காதலை அறியாத தாயின் மனதில் துயரத்தைத் தோற்றுவிக்கும். தனக்குரிய தலைவனைத் தானே தேர்ந்தெடுப்பாள் என்ற சிந்தனை அன்னைக்கு இல்லாமையால் மகளின் நோய்க்கு வேலனைக் காரணமாக்குவாள். மகளின் பருவச் செயல்களான ஒப்பனையும், தனியே யிருத்தலும், குழந்தையின் விளையாட்டாகக் கருதுவது தாய்மையின் பண்பு ஆதலின் அகவன் மகளை அழைத்துக் கழங்கு பார்த்தும், வேலனை அழைத்து வெறியாடியும் நோயினை நீக்க முயலுவாள். அச்சமயம்

தோழி செவிலியிடம் தலைவியின் நோய்க்கு அவளைத் தலைவன் பால் சேர்த்தலே சிறந்த மருந்து என மொழிகிறாள். இதனை,

"வேலனார் போக, மாறிவிடுக்க வேரியும்
பாலனார்க்கு, கீக பழியிலாள்– பாலாற்
கடும்புனலின் நீந்திக் கரைவைத்தாற்கு, கல்லா
னெடும்பணைபோ றோணேராணின்று"[16]

எனத் திணைமாலை மொழியும் தலைவியின் காதல் நோய்க்கு வெறியாட்டுத் தேவையில்லை என்பதால் வெறியாடுவதற்கெனச் சேர்த்த பொருள்களை 'வேண்டியார்க்கு ஈக" என மொழிகிறாள் தோழி, சங்க இலக்கியத்திலும் தலைவி மெய்வேறுபடுவாள். இவ்வேறுபாட்டை அறிய நற்றாய், தோழி உள்ளிட்டோர் வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்துவர். இவ்வகையில் சங்க இலக்கியத்தில் நாற்பது பாடல்கள் உள்ளன. வெறிவிலக்கலை,

"நோய்தணி காதலர் வர ஈண்டு
ஏதில் வேலற்கு உவந்தமை கண்டோ"[17]

என்னும் பாடலை காமக் கண்ணியார் என்ற புலவர் சிறப்பாகப் பாடியதால் வெறி பாடிய காமக்கண்ணியார் என்னும் பெயரால் அவர் அழைக்கப்படுகிறார்.

களவுக்கால, கற்புக்கால மெய்ப்பாடுகளுள், சங்க இலக்கியம், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் காணலாகும் ஒற்றுமைகள்

**1. பசலை பாய்தல்**

தலைவனின் பிரிவை நினைத்து, தலைவி அழகு கெட வருந்தும் பசலை, சங்க இலக்கியத்திலும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலும் பயின்று வருவதைக் காணலாம்.

தலைவன் பிரிவால் தலைவி பசலையுற்று வாடியதை,

'பிறையேர் திருநுதல் பாஅய பசப்பே'[18]

என்றும்

'நன்னுதற் பரந்த பசலைகண் டன்னை'[19]

என்றும்,

'பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றாளை'[20]

என்று குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

**நொதுமலர் வரைவு கூறல்**

அலர், இற்செறிப்பு, வெறியாட்டு போன்றவை களவு வாழ்க்கையில் தலைவிக்கு ஏற்படும் துன்பங்கள். ஆனால், நொதுமலர் வரைவு தலைவியின் எண்ணத்தையும், செயலையும் வேரோடு சாய்ப்பதை ஒக்கும். அதனால் தலைவியின் களவைச் செவிலிக்குப் புலப்படுத்துவாள் தோழி. (நொதுமலர் வரைவு– அயலார் திருமணம் செய்யப் பெண்கேட்டு வருதல்)

நொதுமலர் வரைவு கருதி வந்த போது தலைவி பாலும் உண்ணாள். நெஞ்சம் கலங்கிச் செய்வது அறியாது திகைப்பாள். தலைவியின் நிலைகண்ட செவிலி, தோழியை வினவத் தோழி,

''தந்தார்க்கே ஆமால் தடமென்தோள் இன்னநாள்
வந்தார்க்கே ஆம்என்பார் வாய்காண்பாம்
காவா இளமணல் தண்கழிக் கானல்வாய்ப்
பூவா இளஞாழல் போது''[21]

என்கிறாள்.

கோங்கினது பூவினைத் தந்த தலைவர்க்கே தலைவியின் தோள்கள் தகுதியுடையன என்றும் மணம் பேச வந்தவர்களுக்குத் தகுதியுடையன அல்ல என்றும் மொழிவாள் தோழி. தோழியின் இக்கூற்று தலைவியின் களவை வெளிப்படுத்தி அறத்தோடு நிற்றலாக அமைகிறது. இஃது அறத்தோடு நிற்றலுக்கு காலம், இடம், சூழல் இன்றியமையாதது என்பதை உணரவைக்கிறது. நொதுமலர் என்னும் சொல் சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மிக முக்கியமான சொல்லாக உள்ளது.

''நொதுமலர் வரைவின்கண் செவிலி கேட்குமாற்றால் தலைமகள் தோழிக்கு அறத்தோடு நின்றது குறித்து உரைத்தது.''[22]

நொதுமலர் வரைவு வேண்டி விட்டுழித் தலைமகட்கு உளதாகிய வருத்தம் நோக்கி இவள் இவ்வாறாதற்குக் காரணம் என்ன ? என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தோடு நின்றது''[23]

நொதுமலர் வரையும் பருவத்து தோழி தலைவிக்கு அறத்தோடு நிலை பயப்பச் சொல்லியது''[24]

எனும் கூற்றுகள் இதற்குச் சான்று.

நொதுமலர் வரைவு என்பதற்கு 'அலரறிவுறுத்தல்' எனப்பொருள் தரப்பட்டுள்ளது. ''காதலனே அயலவனாக இருக்கும் சூழல்களும் உண்டு. இற்செறிப்பு வேளையில் வேற்றுவரைவுச் சூழலில் அறத்தொடு நிற்றல் நடைபெற்றுள்ளது''[25]

நொதுமலர் எனும் அயலார் பெண்கேட்டு மணமுடிக்க வரும் சூழல்கள் குடிக்குள் நடந்த மணமுறைக்கு வெளியே ஏற்பட்ட மணவுறவின் வெளிப்பாடுகளாக உள்ளன.

**பிரிவு**

காதல் வாழ்வில் தலைவன் தன் இல்லறகடமைகளை நினைத்து, அவற்றை நிறைவேற்றுதற்கு வேண்டிய பொருளை ஈட்டுவதற்காக தலைவியைப் பிரிந்து செல்வதாகப் புலவர்கள் பாடியுள்ளனர்.

தலைவியிடத்துக் கொண்ட பெருங்காதல் சிறிதும் குறையவில்லை யென்றாலும் கடமையுணர்வு அவனைப் பொருள்வயின் பிரியத் தூண்டுகின்றது.

“கேள்ளே டுன்றவும் கிளைஞர் ஆரவும்

கேளல் கேளிர் கெழீ இயனர் ஒழுகவும்

ஆள்வினைக் கெதிரிய ஊக்கமொடு”[26]

என்று குறிப்பிடப்படுவதைக் காணலாம்.

பதினெண்கீழ்க்கணக்கு நூலிலும் தலைவன் பொருள்வயிற்பிரிந்து சென்று கார்காலத்தில் திரும்புவதாகக் கூறுகிறான்.

“பெருங்கடல் வண்ணன் பனைமார்பில் தார்போல்

திருவில் விலங்கூன்றித் தீம்பெயல் தாழ”[27]

என்ற பாடலடியில் திருமாலின் திருமார்பில் அணிந்த மலர்மாலை போல வானவில்லைக் குறுக்காக நிறுத்தி மழைபெய்யும் காலத்தில் தலைவன் வருவான் என்று கூறுவதைக் காணலாம். இவ்வாறு பதினெண்கீழ்க்கணக்கிலும், சங்க இலக்கியத்திலும் ‘பிரிவு’ ஒத்து வருவதைக் காணலாம்.

**செலவழுங்கல்**

இல்லறக் கடமைகளை இனிது நிறைவேற்றுதற்குப் பொருளீட்டுதற் பொருட்டுத் தான் தலைவியைப் பிரிந்து செல்ல விழைதலை அவளுக்குக் கூறி அவளை அதற்கு இசைவிக்குமாறு தலைவன் தோழியை வேண்டுவான்.

பிரிவால் தலைவிக்கு நேரக்கூடிய பெருந்துயரினை எடுத்துச் சொல்லிச் செலவினைத் தவிர்க்குமாறு தோழி கூறுவாள். அவ்வாறு அவள் கூறுதல் ‘செலவழுங்குவித்தல்’ எனப்படும்.

“புறவணி நாடன் காதன் மடமகள்
ஒண்ணுதல் பசப்ப நீசெலின் தெண்ணீர்ப்
போதவிழ் தாமரை யன்ன நின்
காதலம் புதல்வன் அழுமினி முலைக்கே”[28]

தலைவனது பிரிவினைத் தாங்கும் ஆற்றல் இல்லாத தலைவி இறந்துவிடுவாள் என்பதனை வெளிப்படையாகக் கூறாமல் ‘புதல்வன் முலைக்கு அழும்’ எனக் கூறுவதன் வாயிலாகக் குறிப்பிடுவதால் அவனது பிரிவு தலைவியின் அழுகைக்குக் காரணமாவதோடு அவன் புதல்வன் அழுகைக்கும் காரணமாகும் என்பதனை விளக்கித் தோழி செலவழுங்குவிப்பதாக இக்கற்பனை அமைந்துள்ளது. இவற்றை “ஏதேனும் ஒரு காரணமாகத் தலைவன் தலைவியைப் பிரிதல் இயல்பு. அவ்வாறு அவன் பிரிந்தால் அவன் பிரிவால் தலைவிக்குத் துன்ப உணர்வு மிகுதலும் இயல்பு. தலைவன் அவனுடைய பிரிவைத் தலைவியிடம் கூற முற்படும் போது, அவளுடைய துன்பநிலைகண்டு அவன் தன் செலவைக் கைவிடுகின்றான்.”[29]

ஐந்திணை ஐம்பதில் தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடிச் செல்கிறான். அதனால் தோழி அதனைத் தடுக்கிறாள் கொடுமைகள் நிறைந்த பாலை வழியே செல்லுதல் கூடாது என்று கூறுகிறாள். ஏனெனில் நீ சென்றால் தலைவி இறந்து படுவாள். எனவே செல்லற்க என்று குறிப்பாக உணர்த்துகிறாள் தலைவி. இதனை,

“கோட்டமை வல்விற் கொலைபிரியா வன்கண்ண

ராட்டிவிட் டாறலைக்கும் மத்தம் பலநீந்தி

வேட்ட முனைவயிற் சேறிரோ வைய! நீர்”[30]

என்ற பாடலடிகளின் மூலம் உணரலாம்.

**பரத்தையிற் பிரிவு**

கற்பு வாழ்க்கையில் பொருளீட்டுதற்காகவும், போரிடுவதற்காகவும் தூதிற்காகவும் ஓதுதற்காகவும் பிரிகின்ற தலைவன், பரத்தையின் பொருட்டு ஏற்படும் பிரிவையும் சங்க நூல்களால் அறியலாம். தலைவன் பரத்தையோடு இன்பம் நுகர்தல் பற்றியும், மீண்டு வந்து தலைவனிடம் தலைவி கொள்ளும் ஊடல் பற்றியும் சங்க நூல்களில் இடம்பெற்றுள்ளன.

பரத்தையின் நெற்றியும் ஒளியுடன் அழகு பொருந்திய தன்மை உடையதாக இருந்ததென்பதை,

“மதியே ரொண்ணுதல் வயங்கிழை யொருத்தி”[31]

என்று குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

மேலும்,

“தீரா முயக்கம் பெறுநர்ப் புலப்பவர்

யார்நீ வருநாட்போல் அமைக்குவம்யாம் புக்கீமோ

மாரிக் கவாவுற்றுப் பீள்வாடும் நெல்லிற்காங்கு

ஆராத் துவலை யளித்தது போலும் நீ

ஓர் யாட் டொருகால் வரவு”[32]

கதிர்விட்டு நிற்கும் நெல்லிற்குச் சிறு தூறல் போன்று ஒரு ஆண்டுக்கு ஒருமுறை மட்டுமே வரும் நின் வரவு எமக்கு இன்பம் தருவதாக இல்லை. நீ பரத்தையரிடமே செல்வாயாக என்று தலைவி கூறுவதைக் கண்டோம்.

பதினெண்கீழ்க்கணக்கில்,

அழகும், எழிலும் கொண்ட தன்னிடம் அன்புடன் நடந்து கொண்ட தலைவன், குழந்தைப் பேற்றிற்குப் பின் அன்புமாறி பரத்தையிடம் சென்றான் இதனை,

“செவ்வழியாழ்ப் பாண்மகனே! சீரார்தேர்கையினால்
லிவ்வகை யீர்த்துய்ப்பான் றோற்றாமு னிவ்வழியே
யாடினா னாய்வயலூரன்மற்றெங்கையர்தோள்
கூடினான் பின்பெரிது கூர்ந்து”[33]

என பாணனிடம் தலைவி கூறுவதால் வெளிப்படுகிறது. இவ்வாறு ‘பரத்தையர் பிரிவு’ பற்றி சங்க இலக்கியத்திலும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலும் பயின்று வந்துள்ளது.

**ஊடல்**

கற்பொழுக்கத்தில் ஈடுபட்டுள்ள தலைவன் தலைவியின் வாழ்வில் சுவை கூட்டி இன்பம் பெருக்குவது அளவோடமைந்த தலைவியின் ஊடலாகும்.

பரத்தையொடு கூடி மகிழ்ந்து மீண்டுவந்த தலைவன் தலைவியின் கூந்தலைத் தழுவுதற்கு முயல்கின்றான்.

“யாரிவன் எங்கூந்தல் கொள்வான்”[34]

எனச் சினந்தெழுகின்ற தலைவி, எம்மனை வாரல் நீ! என்று வன்மொழி கூறுவதைக் காணலாம்.

பதினெண்கீழ்க்கணக்கு நூலில்,

“ஒள்நாட்டம் சான்றவர் தந்த நசையிற்றென்(று)

அண்ணார்க்குக் கண்ணோட்டம் தீர்க்கும் என்(று) – எண்ணி

வழிபாடு கொள்ளும் வளையல் ஊரன்

பழிபாடு நின் மேலது”[35]

தலைவன் பரத்தைவயிற் பிரிந்து சென்று, பின் இப்போது உன்மீது அன்பு கொண்டு வந்துள்ளான். அவனுடன் ஊடாது வாழ்வாயாக என்று தோழி தலைவியிடம் கூறுவதைக் காணலாம்.

முன்பு தலைவனுக்குக் கரும்பு போல் இருந்த தலைவி இன்று கரும்பின் சாறு பிழிந்த சக்கைபோல் ஆகிவிட்டேன் என்று தன்னிலை உணர்த்தும் தன்மையினை

“விரும்புநாள் போலான் வியன்நலம் உண்டான்

கரும்பின்கோ(து) ஆயினேம் யாம்”[36]

என்ற வரிகள் உணர்த்தும் கரும்புக்கு பயனாவது அதன்சாறு அதுபோல தலைவிக்கு அழகு தருவது இளமையின் எழில் அந்நலனைத் தலைவன் அடையுங்கால் கரும்பாகத் தலைவன் கருதியதாகவும், நலனழிந்த கரும்பின் கோதாகவும் கருதியதால் பரத்தையிடம் சென்றான் என்னும் தலைவியின் கூற்று சிறப்புடையதாகிறது.

## 4.4.சங்க இலக்கியம் மற்றும பதினெண்கீழ்க்கணக்கு பாடலில் பொதுமைக் கூறுகளும் சிறப்புக் கூறுகளும்

தமிழ் இலக்கியம் என்றால் ‘சங்க இலக்கியம் தான்’ என்று சொல்லுமளவிற்குச் சங்க இலக்கியப் பாடல்கள் உயர்வுடையதாக

இருக்கின்றன. எத்தகைய ஆய்வுகளை மேற்கொண்டாலும் சங்க இலக்கியப் பாடல்களைச் சுட்டிக்காட்டாமல் யாரும் இருப்பதில்லை. காரணம் சங்க இலக்கியப் பாடல்கள் செம்மையுடையதாக இருக்கின்ற அமைப்பு, வடிவம், பாடுபொருள், செம்மாந்த குறிக்கோள், நிலைபேறு தன்மை, உலகப்பொதுமை என்று வலுவாக அமைந்திருக்கின்றன. இத்தகைய சிறப்புகளால்தான் இரண்டாயிரமாண்டுகளைக் கடந்து இன்றும் கூட சங்க இலக்கியம் மிக உயர்ந்த இடத்தில் அமைந்துள்ளது.

சங்க இலக்கியம் பலவகைகளில் சிறப்புடையது என நம்மால் உணரமுடிகிறது. ஆனால், அதனை பிறர்க்கு விளக்கும் வண்ணமோ, பிறர் ஏற்கும் வண்ணமோ நம்மால் எடுத்துச் சொல்லமுடியாது. பிறமொழியினரும் பிற நாட்டினரும் ஏற்குமாறு சங்க இலக்கியம் திட்ப நுட்பங்களை வெளிக்கொணர வேண்டும். அதற்கான ஆராய்ச்சி அணுகுமுறைகள் பலவற்றைப் பெறுதற்கு நமக்கு ஒப்பிலக்கியம் சிறந்த கருவியாகும்.

- தம்மிடம் உள்ளதைப் பகுத்துண்ணும் நெறி, புலவர் போற்றல், புலவர்தூது, யாதும் ஊரே யாவரும் கேளீர் போன்ற பொதுநோக்கு வாழ்வியல் சிந்தனைகளைச் சங்க இலக்கியம் படம்பிடித்துக்காட்டுகிறது.

- இல்லறத்தில் 'விருந்தோம்பல்' சிறந்த அறமாக மகளீரால் மேற்கொள்ளப்பெற்றது. ஆற்றுப்படை இலக்கியங்கள் விருந்தோம்பல் சிறப்பினை உரைக்கின்றன.

**நீதி இலக்கியங்கள்**

- சங்க இலக்கியங்கள் வீரத்தையும், காதலையும் போற்றி உரைப்பன. பதினெண்கீழ்க்கணக்கில் உள்ள அறநூல்கள் வாழ்வியலறங்களையும் சமுதாய அறங்களையும் மிகுதியாக எடுத்துரைப்பன.

- ஈகை வலியுறுத்தல், இரத்தல் இழிவு, யாதொன்றும் தீமையில்லாத செயலே, சொல்லே வாய்மை எனப்படும்.

- அறம், பொருள், இன்பம் என்ற பிரிவுகளில் திருக்குறள் உணர்த்தும் குறட்கருத்துக்கள் அனைத்தும் செவ்வியல் இலக்கிய நெறிகளுள் விளங்குகின்றன.

**4.5.சிறப்புக் கூறுகள்– சங்க இலக்கியம்**

- சங்க இலக்கியத் தலைவன் தலைவியர் தன்னிகரில்லாத தலைமை மாந்தராகப் படைக்கப்பட்டுள்ளமையைக் காணலாம்.

- சங்க இலக்கிய அகப்பாடல்கள் பெரும்பாலும் தலைவியின் காதல் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுவதற்காகவே பாடப்பட்டதாகத் தெரிகிறது. பகல், இரவுக் குறியீடுகள், தலைவனின் பிரிவு, தாய்க்காப்பு, நொதுமலர் வரைவு, ஆகியவை திருப்புமுனைகளாயமைந்து களவு நாடகத்தை விறுவிறுப்புடையதாக்குகின்றன. தலைவன், தலைவியின் களவு வாழ்விற்காகவே தோழி, செவிலி, நற்றாய், பாங்கன் ஆகியோர் படைக்கப்படுகின்றனர்.

- சிறைப்புறமாகத் தோழி தலைவியிடம் பேசுவது, தலைவி தோழியிடம் பேசுவதும் நாடகப்பாங்கைத் தெளிவாகப் புலப்படுத்துகிறது. இருவர் ஓரிடத்தில் பேசுவதை மற்றொருவர் அப்பாலிருந்து கேட்பது நாடக உத்தியேயாகும்.

- நாடகத்தில் ஐந்து அங்கங்கள் உள்ளன. அகத்துறை இலக்கியத்தில் இயற்கைப் புணர்ச்சியே தோற்றம் பாங்கி மதி உடன்பாடு, வளர்ச்சி,

பகற்குறியும் இரவுக்குறியும் முதிர்வு, அவற்றின் இடையீடு, அறத்தோடு நிற்றல், உடன்போக்கு முதலியன திருப்பம், வரைதல், முடிவாகும். சங்க இலக்கியம் இவ்வாறு நாடகப் போக்கில் அமைகிறது.

- உரையாடல், நாடகத்தின் இன்றியமையாத கூறாகும். நாடகப் பாத்திரங்களின் தனிக்கூறுகளாக அமைந்தவை உரையாடல்கள். ஆனால் கலித்தொகையில் தனிக்கூறுமட்டுமின்றி உரையாடல்களும் கலந்துள்ளன. தோழியின் கூற்றுகள் உணர்ச்சி நிலைகளை நாடகத்திற்கு வேண்டிய மெய்ப்பாட்டு நிலைகளை படம்பிடித்துக் காட்டுகின்றன.

- அகப்பாட்டில் பெரும்பாலும் ஒருவர் கூற்று மட்டுமே நிகழ்த்துவதாக உள்ளது. அந்தக் கூற்று படிப்பவரையும் முன்நிறுத்திக் கூறுவது போல நாடகப் பாங்கில் உள்ளது.

- சிறைப்புறமாகத் தோழி தலைவியிடம் பேசுவதும், தலைவி தோழியிடம் பேசுவதும் நாடகப்போக்கை தெளிவாகப் புலப்படுத்துகிறது.

- அகப்பொருள் மரபுகளுக்கேற்பக் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகியவற்றில் அகப்பொருள் பாத்திரங்களில் தனிநேர்கூற்றுகள் அமைகின்றன. தனிக்கூற்றுகளே உணர்வை முழுமையாகத் தெளிவாக ஈர்க்கக் கூடியவை.

- அகப்பாடல்கள் உணர்வைப் பாடுபொருளாக கொண்டவை. உணர்வு சார்ந்த அகப்பொருள் கூறு உரிப்பொருள் ஆகும். உரிப்பொருள்கள் பால்

உணர்வு வழியே உள்ள நிறைவு கொடுக்கும். காதலைப் பெற்று அதனால் உயிரின் நிறைநிலையை எய்துவது அகப்பாடல்களின் நோக்கம்.

- அகத்திணைப் பாடல்கள் சுட்டி ஒருவர் பெயர் கொள்ளாமல் தலைவன், தலைவி, தோழி எனப் பொதுப்படவே அமைகின்றன.

- அகத்துறை சங்கப்பாடல்கள் ஒற்றைக் காட்சி நாடகமாக அல்லது ஒரு கூற்று நாடகமாக அமைந்திருக்கின்றன. ஆனால் கலித்தொகையில் பல பாடல்கள் ஓரங்க நாடகமாக விளங்குகின்றன. முல்லைக்கலியில் ஏறுதழுவுதல் பாடல்கள் நாடகப்பாங்கில் அமைந்துள்ளன.

**தொகுப்புரை**

**ஒற்றுமை**

- சங்க இலக்கியமும் பதினெண்கீழ்க்கணக்கு நூலும் வெவ்வேறு காலத்தினை சார்ந்தது என்றாலும், இரு நூலிலும் காணப்படும் நோக்கம் ஒன்றாகும். களவு வாழ்வில் இடம்பெற்றுள்ள தலைவனும் தலைவியும் கற்பு வாழ்வில் இணைந்து வாழ்தல் வேண்டும் என்ற நோக்கம் இருவரிடமும் உள்ளது.

**வேற்றுமைகள்**

- சங்க இலக்கியத்தில் தலைவன், தலைவியை முடிமுதல் அடிவரை உவமித்துக் கூறுகிறான். ஆனால் பதினெண்கீழ்க்கணக்கில் அவ்வாறு தலைவியை உவமித்துக் கூறுவதில்லை. சங்க இலக்கியத்தில் தோழி, தலைவியை கண்கள், தோள்கள், முகம், உருவம், பற்கள், கூந்தல் போன்றவற்றை அதிகமாகத் தோழி உவமிக்கிறாள்.

- செலவழுங்குதல், பரத்தைவயிற் பிரிந்த தலைவனைக் கழறல், வாயிற் நேர்தல், என்று எல்லாத் துறைகளிலும் தோழியரின் சொற்கள், செயல்கள் ஒத்துக் காணப்படுகின்றன.

- சங்க இலக்கியங்களில் 1862 பாடல்கள் அக இலக்கியப் பாடல்கள் ஆகும். பதினெண்கீழ்க்கணக்கில் 422 பாடல்கள் மட்டுமே அக இலக்கியங்களைப் பற்றிய பாடல்கள்.

## அடிக்குறிப்புகள்

1. ஒப்பிலக்கிய அறிமுகம், தமிழண்ணல், ப.83
2. இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள், டாக்டர் ஜி.ஜான்சாமுவேல், ப.7
3. ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம், கதிர்மகாதேவன், ப.26
4. இலக்கிய ஒப்பாய்வுக்களங்கள், டாக்டர் ஜி.ஜான்சாமுவேல், ப.6
5. திறனாய்வுக்கலை, தி.சு.நடராஜன், ப.26
6. ஒப்பிலக்கியம் ஓர் அறிமுகம், வை.சச்சிதானந்தம், பக்.60
7. ஒப்பியல் இலக்கியம், க.கைலாசபதி, ப.29
8. தமிழ்ச்செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், பெ.மாதையன், பக்.68
9. குறுந்.பா.40
10. ஐந். ஐம். பா.38
11. அகம். பா.45
12. சங்க இலக்கியத்தில் குடும்பம், பெ. மாதையன், ப.26
13. தி.மா.நூ.ஐம். பா.62
14. குறுந்.பா.107
15. தி.மா. நூ.ஐம். பா.38
16. தி.மா. நூ.ஐம். பா.12
17. அகம். பா.22
18. நற்றி.பா.167
19. நற்றி.பா.288
20. கலித். பா.99
21. தி.மா. நூ.ஐம். பா.39
22. ஐங்கு. பா.201

23. ஐங்கு. பா.205

24. நற்றி.பா.165

25. சங்க இலக்கியத்தில் குடும்பம், பெ.மாதையன், ப.38

26. நற்றி. பா.193

27. ஐந். ஐம். பா.11

28. ஐங்கு. பா.424

29. சங்க இலக்கியத்தில் உருவழி உணர்வு வெளிப்பாடு, முனைவர் இரா.சந்திரசேகர், பக்.107

30. ஐந். ஐம். பா.34

31. அகம். பா.306

32. கலித். பா.71

33. தி.மா. நூ.ஐம். பா.124

34. கலித். பா.88

35. ஐந். எழு. பா.53

36. தி.மொ. ஐம். பா.39

# முடிவுரை

- ஒவ்வொரு காலக்கட்டத்திலும் மனிதனுடைய எண்ணங்கள், சிந்தனைகள் மாறிக்கொண்டே இருக்கின்றன என்பதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இலக்கியங்கள் உணர்த்தும் உணர்வுகளைப் புரிந்துகொள்ள மெய்ப்பாடு முக்கியமானதாகும்.

- தொல்காப்பியம் வாழ்க்கைக்குரியது என்று ஒரு சாரரும், இலக்கியத்திற்கு உரியது என்று மற்றொரு சாரரும் கூறுவர்.

- மெய்ப்பாட்டிற்கான இலக்கணத்தை தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் விளக்குகிறது. சங்க இலக்கியங்களில் மெய்ப்பாடுகள் இயல்பாக பதிவுசெய்யப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

- தொல்காப்பியத்திற்கு முன்பு இருந்த இலக்கியங்கள் நமக்கு கிடைக்கவில்லை. அவ்விலக்கியங்களில் கூறப்பட்டுள்ள மெய்ப்பாட்டுக் கூறுகள், பண்புகள், மக்களின் உணர்வுகள், வாழ்க்கைமுறை, சமூகம் போன்ற செய்திகளை தொல்காப்பியத்தின் வழி அறியலாகிறது. சங்கப்பாடல்களில் மெய்ப்பாடுகள் பெரிதும் கையாளப்பட்டு உள்ளதைக் காணும்போது அதன் முக்கியத்துவத்தை நன்கு அறியமுடிகிறது.

- மெய்ப்பாடுகள் செய்யுளுக்கு அளித்த இடத்தில் முதன்மை பெறுவது அதன் பண்புகள் தான். அதில் இடம்பெற்றுள்ள எட்டுவகை மெய்ப்பாடும் அதன் உணர்வுகள் ஆகும்.

- சங்க இலக்கியம் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு என்பன தொகை முறையில் ஒன்றுபோல அமைகின்றன. இப்பாடல்களையெல்லாம் பாடினோரும்

பலர். பாடிய அகத்துறைளும் பல. அகநானூற்றில் உரிப்பொருளைக் காட்டிலும், முதல் கருப்பொருளுக்கு சிறப்பிடம் தரப்படுகிறது.

- பத்துப்பாட்டில் குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, நெடுநல்வாடை முல்லைப்பாட்டு ஆகியவை அகத்துறை நெடும்பாடல்களில் அமைந்து ஏதேனும் ஒரு வகையில் புதுமை புகுத்த முயன்றுள்ளனர். இவை கதைத் தொடர்புடன் காப்பியத்தன்மை கொண்டு விளங்குகின்றன.

- குறிஞ்சிப்பாட்டில் தலைவன், தலைவி பெயர் சுட்டப்படவில்லையே தவிர, நிகழ்ச்சிகள் நாடகக்கதைப்போக்கில் சொல்லப்பட்டுள்ளன.

- சங்கப்பாடல்கள் அமைப்பாலும், நடையாலும் உரையாடல் தன்மையாலும் கருத்தமைதியாலும் நிகழ்ச்சிப் பின்னலாலும் நாடக அடிப்படையில் ஒத்த நிற்பவை

- சங்க அக இலக்கியங்களில் திணை, துறைகளுக்குத் தரும் சிறப்பைக் காட்டிலும் அகமாந்தர்களின் மன உணர்வுகளுக்குச் சிறப்பிடம் தருகின்றன. சங்க அக இலக்கியங்கள் அகமாந்தரின் கூற்று அடிப்படையில் அமைந்தள்ளதைக் காண்கிறோம்.

- சங்க இலக்கியம் வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டு, நாடகப்பாங்கு பெற்றிருப்பதால், அக இலக்கியத்தில் வரும் துறைகள், மெய்ப்பாடுள், கூற்றுகள் முதலியன மனித இயல்பை ஒட்டியவை. இவை பெண்களின் மன இயல்பினைத் தெளிவாக எடுத்துக்காட்டும் சிறப்புடையன.

- மெய்ப்பாடு என்பது உள்ளம் சார்ந்ததாக இருப்பினும் சூழலுக்கு ஏற்ப அவை மாறுபடுகின்றன. உணர்வுகள் மற்றும் எண்ணங்கள் ஆகியவற்றின் பிரதிபலிப்பாகவே மெய்ப்பாடு அமைந்துள்ளன.

- மெய்ப்பாடுகள் பற்றிய விளக்கம் உலக இலக்கியம் அனைத்திற்கும் ஏற்றதாகக் கோட்பாடுகளைக் கொண்டுள்ளது.

- மெய்ப்பாடு என்பது உலகப்பொதுமைக்கோட்பாடாகும். மெய்ப்பாடு பற்றி தொல்காப்பியரின் விளக்கம், உரையாசிரியரின் விரிவுரையும் மெய்ப்பாட்டின் விளக்கமும் குறிப்பிடத்தக்கது.

- முதல் மெய்ப்பாடாக நகைச்சுவையையும் இறுதி மெய்ப்பாடாக உவகைச் சுவையையும் தொல்காப்பியர் கூறுதல் காணலாம். அனைவரும் விரும்பும் நகைச்சுவையை முதலாவதாகவும், அதற்கு மறுதலையாகிய அழுகையை அதன் பின்னும், அழுகையை ஒத்த இளிவரலை அடுத்தும் ,தான் இளிவரலுற்றால் பிறர் பொருளை வியப்பதால் பின் வியப்பையும், வியப்பு பற்றியும் அச்சம் பிறக்குமாதலால் பின் அச்சத்தையும், அச்சத்திற்கு மறுதலையாக வீரத்தை தன் பின்னும், வீரத்தின் பயனாகிப் பிறர்க்கு வரும் வெகுளியை அதன்பின்னும், வெகுளிக்கு மறுதலையான உவகையை இறுதியிலும் வைத்திருக்கும் அமைப்பு முறையைத் தொல்காப்பியத்தில் காணலாம். இது ஒரு உளவியல் தன்மையால் அமைந்துள்ளது எனலாம்.

- தொல்காப்பியரின் மெய்ப்பாட்டு இயலை சங்க இலக்கியம் மற்றும் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் பொருத்திப் பார்க்கும்பொழுது சங்க இலக்கியங்களில் பெண்ணின் உணர்வுகளுக்கு மதிப்பளித்து, தலைவனைப் பிரிந்த நிலையில் தனிமையில் தலைவியின் மெய்ப்பாடுகளாக இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல் முதலிய இருபது மெய்ப்பாடுகள் இடம்பெற்றுள்ளது.

- அகத்திணையில் களவுக்குரிய மெய்ப்பாடுகள் கற்புக்குரிய மெய்ப்பாடுகள் குறித்து அறியப்பட்டன.

- வரைவு வேட்கைக்குரிய மெய்ப்பாடுகள், வரைந்தபின் நிகழும் மெய்ப்பாடுகள் குறித்தும் ஆராயப்பட்டன.
- தூண்டுதல் என்ற கருவியே மெய்ப்பாட்டினை தோற்றுவிக்கிறது. இத்தகைய தூண்டுதல் இன்பவழியாகவும், துன்பவழியாகவும் அமைகிறது.
- களவின் போது தலைவியை உள்ளத்தில் எண்ணுவது தலைவனுக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.
- மிகுந்த அன்பு கொண்ட தலைவியை, தலைவன் அடைய முடியாத தலைவன் உள்ளத்தில் எழும் உணர்ச்சிப் பெருக்கே 'ஏக்கமாக' சங்க இலக்கியங்களில் பல பாடல்ளில் காணமுடிகிறது.
- பெண்கள் பிறரைச் சார்ந்து வாழ்ந்து பழகினமையால் புதிதாக எந்த ஒரு பொருளையும் காணும்போது அவர்களுக்கு அச்சம் தோன்றுகிறது.
- போர்க்களம், அவுணர், முரசுஇ பேராந்தையின் குரல், ஞாயிறு, போன்றவற்றால் உண்டான அச்சம் அணங்கினால் தோன்றிய அச்சத்தினைக் குறிக்கிறது.
- தலைவிக்கு களவில் தலைவன் வரும் வழியில் உள்ள விலங்குகளுக்கும் மேலோருக்கும், அலருக்கும் அஞ்சுவதால் தலைவிக்கு அச்சமெனும் துன்ப மெய்ப்பாடு தோன்றுகிறது.
- களவில் நேரும் இடையூறுகள் அதனால் உண்டான பிரிவு, பிரிவினால் உண்டாகும் நோய், நோயினால் உண்டாான அலர் போன்றவற்றினால் தோழிக்கு 'வருத்தம்' என்ற மெய்ப்பாடு உண்டானது.

- களவில் தலைவியிடம் மட்டுமே பொறிநுதல் வியர்த்தல், சிதைவுபிறர்க்கின்மை போன்ற மெய்ப்பாடுகள் தோன்றுகின்றன. இம்மெய்ப்பாடுகள் தலைவிக்கு மட்டுமே உரியவை.
- பகற்குறியில் தலைவனைக் காணாமல் தலைவியின் உள்ளம் துன்பமுறுகிறது. அதனைத் தாங்காமல் அழுகையாக தனது மெய்ப்பாட்டினைத் தலைவி வெளிப்படுத்துகிறாள். தலைவனை பிரிந்து இரவு முழுவதும் தலைவி விழித்திருந்து வருந்தியதால் 'தூங்காமை' என்ற மெய்ப்பாடு தோன்றுகிறது.
- தலைவனைப் பிரிந்துள்ள நிலையில், தலைவி தலைவனுடன் மகிழ்வது போன்ற கனவு காண்கிறாள். இதனால் 'கனவு' என்னும் மெய்ப்பாடு தோன்றுகிறது.
- தலைவனைப் பிரிந்து தலைவி துன்புறுதலால் தலைவிக்கு பசலை நோய் உண்டாகிறது.
- உயிர்களுக்கு இன்பம் பொதுவானது. அவ்வகை இன்பம் ஒழுக்கத்தின் அடிப்படையில் அமைதல் வேண்டும் என்று அறஇலக்கியங்கள் வலியுறுத்தப்படுவதை பற்றி இங்கு விளக்கப்பட்டுள்ளது.
- அற இலக்கிய அகநூல்களில் ஒழுக்கம் பெரும்பாலும் தோழியால் வலியுறுத்தப்பட்டுள்ளது.
- பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களிலும் எண்வகை மெய்ப்பாடுகள் இடம்பெற்றுள்ளதை விளக்கப்பெற்றுள்ளது.
- திருமணத்திற்குப் பிந்தைய இல்லறச்சிறப்பு தாய்மையிலும் குழந்தைப்பேற்றிலும் அமைகிறது என்பதை பற்றி விளக்கப்பட்டுள்ளது.

- சங்க இலக்கியத்திலும் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களிலும் களவிற்கு அடுத்து வரைவு கடாதலை முக்கிய நோக்கமாக கையாண்டுள்ளனர்.
- திணைமாலை நூற்றைம்பதில் தலைவியைக் காண இரவில் வரும் தலைவனை நினைத்து தலைவி அழுவதை இங்கு விளக்கப்பட்டுள்ளது.
- வெறியாடல், பசலைபாய்தல், நொதுமலர் வரைவு கூறல், கண்துயில் மறுத்தல், பரத்தையிற் பிரிவு, ஊடல் போன்றவை சங்க இலக்கியத்தை ஒத்து காணப்படுவதைக் குறித்து ஆராயப்பட்டுள்ளது.
- புகுமுகம் புரிதல், நகுநய மறைத்தல், சிதைவுபிறர்க்கின்மை, துன்பத்துப்புலம்பல், ஏதம் ஆய்தல், பசியடநிற்றல் போன்ற களவுக்கால மெய்ப்பாடுகள் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் இடம்பெறவில்லை.
- சங்க இலக்கியமும் பதினெண்கீழ்க்கணக்கு அகநூலும் இருவேறு காலகட்டத்தைச் சார்ந்து ஆயினும் இவ்விரு இலக்கியங்களின் நோக்கமும் ஒன்றே களவு வாழ்வில் இடம்பெற்றுள்ள தலைவனும், தலைவியும் கற்பு வாழ்வில் இடம்பெற்றுள்ள தலைவனும், தலைவியும் கற்புவாழ்வில் இணைந்து வாழ்தல் வேண்டும் என்ற நோன்ககம் இரு இலக்கியங்களிலும் காணலாம்.

# துணைநூற்பட்டியல்

**சங்க இலக்கிய நூல்கள்**


1. பாலசுப்பிரமணியன், கு.வெ. (உ.ஆ.) – அகநானூறு (மூலமும் உரையும்)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41– பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை– 600 098
நான்காம் அச்சு – அக்டோபர் 2011.

2. பாலசுப்பிரமணியன், கு.வெ. (உ.ஆ.) – ஐங்குறுநூறு (மூலமும் உரையும்)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41– பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை– 600 098
நான்காம் அச்சு – அக்டோபர் 2011.

3. பாலசுப்பிரமணியன், கு.வெ. (உ.ஆ.) – கலித்தொகை (மூலமும் உரையும்)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41– பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை– 600 098
நான்காம் அச்சு – அக்டோபர் 2011.

4. பாலசுப்பிரமணியன், கு.வெ. (உ.ஆ.) – நற்றிணை (மூலமும் உரையும்)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41– பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை– 600 098
நான்காம் அச்சு – அக்டோபர் 2011.

5. பாலசுப்பிரமணியன், கு.வெ. (உ.ஆ.) – குறுந்தொகை (மூலமும் உரையும்)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41– பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை– 600 098
நான்காம் அச்சு – அக்டோபர் 2011.

6. பாலசுப்பிரமணியன், கு.வெ. (உ.ஆ.) – பரிபாடல் (மூலமும் உரையும்)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41– பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை– 600 098
நான்காம் அச்சு – அக்டோபர் 2011.

7. பாலசுப்பிரமணியன், கு.வெ. (உ.ஆ.) – புறநானூறு (மூலமும் உரையும்)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41– பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை– 600 098
நான்காம் அச்சு – அக்டோபர் 2011.

8. பாலசுப்பிரமணியன், கு.வெ. (உ.ஆ.) – பத்துப்பாட்டு (மூலமும் உரையும்)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41– பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை– 600 098
நான்காம் அச்சு – அக்டோபர் 2011.


**பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்**


9. கௌமாரீஸ்வரி, எஸ். (தொ.ஆ.) – பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் (மூலமும் உரையும்)
ஜி–4 சாந்தி அடுக்ககம்
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு
ராயப்பேட்டை
சென்னை–14
முதற்பதிப்பு– மார்ச்சு 2009.

10. உலகநாதன். செ. – திருக்குறள்
பாவை பப்ளி கேஷனஸ்
சென்னை–600 014
நான்காம் பதிப்பு– டிசம்பர் 2014.

11. மாணிக்கம், சு. – நாலடியார் தெளிவுரை
மணிவாசகர் பதிப்பகம்
31, சிங்கர் தெரு
பாரிமுனை
சென்னை– 600 018
மூன்றாம்பதிப்பு– 2003.

**இலக்கண நூல்கள்**

12. இளம்பூரணர் (உ.ஆ.) – தொல்காப்பியம் பொருளதிகாரம்
கழக வெளியீடு
சென்னை
12வது பதிப்பு–ஏப்ரல் 2000.

13. சோமசுந்தரபாரதியார் – தொல்காப்பிய பெரும்படலப் புத்துரை
மெய்ப்பாட்டியல்
நாவலர் புத்தக நிலையம்
மதுரை
1975.

14. வெள்ளைவராணன்.கா. – தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல்
உரைவளம்
மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை
1986.

15. தாமோதரம்பிள்ளை.சி.வை. – வீரசோழியம்
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்
தரமணி
சென்னை–600 113
முதற்பதிப்பு–2003.

16. ஞானசம்பந்தம் (உரை) – தண்டியலங்காரம் தெளிவுரை
கதிர் பதிப்பகம்
திருவையாறு– 61320
1976.

17. வைதியநாததேசிகர் – இலக்கண விளக்கம்
வித்தியா நூபாலயைாத்திரசாலை
சென்னை
1976.

அகராதிகள்

1. கதிரைவேற்பிள்ளை.நா. – தமிழ்மொழி அகராதி திருத்தியது
ஏசியன் கல்விச்சோலை
புதுடெல்லி
பத்தாம்பதிப்பு–1998.

2. க்ரியா – க்ரியாவின் தற்காலத் தமிழகராதி
க்ரியா பதிப்பு
சென்னை
1992.

3. சண்முகசுந்தரம். வீ.ப. கா. (தொ.ஆ.) – சங்க இலக்கிய வரலாறு
ம.ரா.களஞ்சியம் III
காவ்யா,16
இரண்டாம் குறுக்குத்தெரு
கோடம்பாக்கம்
சென்னை–600 024
முதற்பதிப்பு–2010.

4. இராமசுப்பிரமணியன். வ. த. (தொ.ஆ.) – திருமகள் தமிழ் அகராதி
புதிய எண்–16
வெங்கட் நாராயணா ரோடு
தி.நகர்
சென்னை–17
2002.

5. அரங்கசாமி. பழனி. – பெருஞ்சொல்லகராதி (தொகுதி–3)
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
நவம்பர்–1992.

6. சந்தியா – மதுரைத் தமிழ்ப்பேரகராதி
சந்தியா பதிப்பகம்
சென்னை
1992.

7. கோபாலையர். தி. வே. – தமிழ் இலக்கணப் பேரகராதி
தமிழ் மண் பதிப்பகம்
சென்னை–2005.

8. பாலுசாமி. நா. (ப.ஆ.) – வாழ்வியல் களஞ்சியம்
தஞ்சாவூர் தமிழ்ப்பல்கலைக்கழகம்
வெளியீடு–1988.

**பொதுவான நூல்கள்**

1. ஹம்ஸா.மு. – தொல்காப்பியரின் பொருள் இலக்கணக்கோட்பாடுகள் –ஐ
ராபியா பதிப்பம்
எண்–6, சக்தி கார்டன்ஸ்
சேலையூர்
சென்னை–600 073
2007.

2. இலக்குவனார். சி. – தொல்காப்பிய ஆராய்ச்சி
வள்ளுவர் பதிப்பகம்
புதுக்கோட்டை
1961.

3. ஏஞ்சல்ராணி – பதினெண்கீழ்க்கணக்கில் தோழி
பாவை பப்ளிகேஷன்ஸ்
ஜானி ஜான்கான்சாலை
இராயப்பேட்டை
சென்னை–600 014.

4. ஜான்சாமுவேல். ஜி. – இலக்கிய ஒப்பாய்வுக்களங்கள்
ஆசியவியல் நிறுவனம்
சென்னை
ஜனவரி–2013.

5. கதிர்மகாதேவன். – ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம்
செல்லப்பா பதிப்பகம்
48, தானப்ப முதலி தெரு
மதுரை–625 001
2009.

6. கைலாசபதி – ஒப்பியல் இலக்கியம்
குமரன் பப்ளிஷர்ஸ்
3, மெய்கை விநாயகர் தெரு
வழி குமரன் காலனி 7வது தெரு
வடபழனி
சென்னை–600 026
முதற்பதிப்பு–1999.

7. சச்சினாந்தன், வை. – ஒப்பிலக்கியம் ஓர் அறிமுகம்
ஆக்ஸ்போர்டு யுனிவர்சிட்டி பிரஸ்

8. சரளா ராசகோபாலன் – சங்க இலக்கியம் (அகம்)
ஒளிப்பதிப்பகம்
63, டாக்டர் ரங்காச்சாரி சாலை
சென்னை– 600 018
முதற்பதிப்பு–1992.

9. சந்திரசேகர். இரா. – சங்க இலக்கியங்களில் உருவழி உணர்வு
வெளிப்பாடு
திருக்குறள் பதிப்பகம்
66, பெரியார் தெரு
எம்.ஜி.ஆர். நகர்
சென்னை–600 078
2013.

10. சுப்பிரமணியன். அ.வெ. – அகப்பொருளில் அச்ச மெய்ப்பாடுகள்
சேகர் பதிப்பகம்
சென்னை
2004.

11. சுப்பிரமணியம். ச.வே. – தொல்காப்பிய பொருளதிகாரம்
அகத்திணை
சோலை நூலகம்
சதாசிவ நகர்
மதுரை–625 050
1978.

12. சேதுபதி. ரா. – திருக்குறளில் தொல்காப்பிய
மெய்ப்பாடுகள்
பாவை பப்ளிகேஷன்ஸ்
இராயப்பேட்டை
சென்னை–600 014
முதற்பதிப்பு–1998.

13. தமிழண்ணல் – சங்கமரபு
சோலை நூலகம்
சாதசிவ நகர்
மதுரை–625 050
மூன்றாம்பதிப்பு– ஏப்ரல் 1978.

14. தமிழண்ணல் – சங்க இலக்கிய ஒப்பீடு–2
மீனாட்சி புத்தகநிலையம்
மதுரை–2
1979.

15. நடராஜன்.தி.சு. – திறனாய்வுக்கலை
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41, பி சிட்கோ இண்டர்ஸ்டிரியஸ்
சென்னை– 600 098
முதற்பதிப்பு – ஆகஸ்டு 1996.

16. பொன்னுசாமி.மு. – சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள்
இந்து பதிப்பகம்
கோயம்புத்தூர்
முதற்பதிப்பு– 1998.

17. பொன்னுசாமி.மு. – சங்க இலக்கியத்தில் காதல் மெய்ப்பாடுகள்
குமரன் புத்தகநிலையம்
சென்னை
முதற்பதிப்பு– 2005.

18. மணவாளன். அ.அ. – இலக்கிய ஒப்பாய்வு
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
41–பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ்
அம்பத்தூர்
சென்னை– 600 098
முதற்பதிப்பு– மே 2009.

19. மாணிக்கம். வ.சுப. – தொல்காப்பிய புதுமை
மணிவாசகர் தெரு
சென்னை– 600 001
முதற்பதிப்பு– 1987.

20. மாணிக்கம். வ.சுப. – தமிழ்க்காதல்
மீனாட்சி புத்தக நிலையம்
மயூரா வளாகம்
தானப்ப முதலி தெரு
மதுரை– 560 517
முதற்பதிப்பு – மார்ச் 2013.

21. மாதையன். பெ. – சங்க இலக்கியத்தில் குடும்பம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41–பி சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை– 600 098
முதற்பதிப்பு– ஜுன் 2010.

22. மாதையன். பெ. – தமிழ்ச்செவ்வியல் இலக்கியங்கள்
காலமும் கருத்தும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41–பி சிட்கோ இண்டஸ்டிரியஸ்
எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை– 600 098
முதற்பதிப்பு– ஜுலை 2011

**ஆய்வேடுகள்**

1. கவிதா.சி. – புறநானூற்றில் எண்வகை மெய்ப்பாடுகள்
தமிழ்த்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்
கோயம்புத்தூர்– 641 046
டிசம்பர்–2009.

| | | |
|---|---|---|
| 2. தமிழ்மதி.ம. | – | சங்க நூல்களில் மெய்ப்பாடுகள்<br>தமிழ் உயராய்வுத் துறை<br>தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரி<br>தருமபுரம்<br>மயிலாடுதுறை– 609 001<br>மார்ச்சு –2011. |
| 3. ஸ்ரீவித்யா | – | பதினெண்கீழ்க்கணக்கில் வாழ்வியல் நெறிகள்<br>பாரதிதாசன் பல்கலைக்கழகம்<br>திருச்சிராப்பள்ளி<br>ஜூன்–2011. |

## பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் இடம்பெற்றுள்ள மெய்ப்பாடுகள்

### மாறன் பொறையனார்– ஐந்திணை ஐம்பது

| வ. எ ண் | பா. எண் | நூல் / திணை | கூற்று | முதல்அடி | நிலைக்களன் மெய்ப்பாடு | நிலை |
|---|---|---|---|---|---|---|
| 1 | 1 | ஐந்திணை ஐம்பது முல்லை | தோழிக்கூற்று | 'மல்லர்க் கடந்தானிறம் போன் றிருண்டெழுந்து' | செல்வம் உவகை | தலைவியின் நிலை |
| 2 | 2 | ஐந்திணை ஐம்பது முல்லை | தலைவி கூற்று | அணிநிற மஞ்ஞை யகவ விரங்கி | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 3 | 3 | ஐந்திணை ஐம்பது முல்லை | தோழிகூற்று | மின்னு முழக்கு மிடியுமற்றின்ன | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 4 | 4 | ஐந்திணை ஐம்பது முல்லை | தோழிகூற்று | உள்ளார்கொல் காதலரொண் டொடி நந்திறம் | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 5 | 5 | ஐந்திணை ஐம்பது முல்லை | தோழி கூற்று | கோடுயர் தோற்றமலைதே லிருங் கொண்மூக் | இளிவு அழுகை | தலைவியின் நிலை |
| 6 | 6 | ஐந்திணை ஐம்பது | தோழி கூற்று | முல்லை நறுமல ரூதி யடுத்தும்பி | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 7 | 7 | ஐந்திணை ஐம்பது முல்லை | தோழி கூற்று | தேரோன் மலைமறைந்த செக்கர் கொள் புன்மாலை | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 8 | 8 | ஐந்திணை ஐம்பது முல்லை | தோழி கூற்று | பிரிந்தவர் மேனிபோற் புல்லென்ற வள்ளி | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 9 | 9 | ஐந்திணை ஐம்பது முல்லை | தோழி கூற்று | வருவர் வயங்கிழாய் வாளொண்கணீர் கொண் | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 10 | 10 | ஐந்திணை ஐம்பது முல்லை | தலைவன் கூற்று | நூனவின்ற பாக தேர் நொவ்விதாச் சென்றீக | இளமை நகை | தலைவியின் நிலை |
| 11 | 11 | ஐந்திணை ஐம்பது குறிஞ்சி | தோழி கூற்று | பொன்னிணர் வேங்கை கவினிய பூம்பொழிலு | புணர்ச்சி, உவகை | தலைவியின் நிலை |
| 12 | 12 | ஐந்திணை ஐம்பது குறிஞ்சி | தோழி கூற்று | மால்வரை வெற்ப வணங்கு குரலேனல் | புகழ், பெருமிதம் | தலைவியின் நிலை |
| 13 | 13 | ஐந்திணை ஐம்பது குறிஞ்சி | தலைவி கூற்று | காகை நாடன் கலவானென் நோளென்று | புணர்ச்சியின் உவகை | தலைவியின் நிலை |
| 14 | 14 | ஐந்திணை ஐம்பது குறிஞ்சி | தோழி கூற்று | புனைபூந் தழையல்குற் பொன்னன்னாய் சாரற் | இளிவரல் வருத்தம் | தலைவியின் நிலை |
| 15 | 15 | ஐந்திணை ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | வேங்கை நறுமலர் வெற்பிடை யாங்கொய்து | இளமைநகை | தலைவியின் நிலை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 16 | 16 | ஐந்திணை ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | கொடுவரி வேங்கை பிழைத்துக் கோட்பாடு | விலங்கு அச்சம் | தலைவியின் நிலை |
| 17 | 17 | ஐந்திணை ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | மஞ்சிவர் சோலை வளமலை நன்னாட | அச்சம் விலங்கு | தலைவியின் நிலை |
| 18 | 18 | ஐந்திணை ஐம்பது | தோழிகூற்று | எறிற்தெமர் தாமுழுத ஊர்ங்குரலேனன் | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 19 | 19 | ஐந்திணை ஐம்பது குறிஞ்சி | தோழி கூற்று | நெடுமலை நன்னாட நீள்வே றுணையாக | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 20 | 20 | ஐந்திணை ஐம்பது குறிஞ்சி | தலைவி கூற்று | வெறிகமழ் வெற்பனென் மெய்ந்நீர்மை கொண்ட | அச்சம் அணங்கு | தலைவியின் நிலை |
| 21 | 21 | ஐந்திணை ஐம்பது மருதம் | தலைவி கூற்று | கொண்டுழிப் பண்டம் விலையொரிஇக் கொற்சேரி | மென்மை, இளிவரல் | தலைவனின் நிலை |
| 22 | 22 | ஐந்திணை ஐம்பது மருதம் | தலைவி கூற்று | போதார் வண்டூதும் புனல்வய லூரற்குத | பேதைமை, இளமை | தலைவியின் நிலை |
| 23 | 23 | ஐந்திணை ஐம்பது மருதம் | தலைவி கூற்று | யாண ரகல்வய லூர னருளுதல் பாண | எள்ளல், இளமை | தலைவியின் நிலை |
| 24 | 24 | ஐந்திணை ஐம்பது மருதம் | தலைவி கூற்று | கோலச் சிறுகுருகின் குத்தஞ்சி யீர்வாளை | அசைவு, அழுகை | தலைவியின் நிலை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 25 | 25 | ஐந்திணை ஐம்பது மருதம் | தலைவி கூற்று | அழலவழ் தாமரையாய் வயலூரன் | இளிவரல், வருத்தம் | தலைவியின் நிலை |
| 26 | 26 | ஐந்திணை ஐம்பது மருதம் | தலைவி கூற்று | பெய் வளைக் கையாய் பெருநகை யாகின்றே | எள்ளல், இளமை | தலைவியின் நிலை |
| 27 | 27 | ஐந்திணை ஐம்பது மருதம் | தலைவி கூற்று | தண்வய லூரற் புலக்குந் தகையமோ | அசைவு, அழுகை | தலைவியின் நிலை |
| 28 | 28 | ஐந்திணை ஐம்பது மருதம் | தலைவி கூற்று | ஒல்லென் றொலிக்கு மொலிபுன லூரற்கு | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 29 | 29 | ஐந்திணை ஐம்பது மருதம் | தலைவி கூற்று | ஒல்லென் னொலி புனலூரன் வியன் மார்பம் | பேதைமை, இளமை | தலைவியின் நிலை |
| 30 | 30 | ஐந்திணை ஐம்பது மருதம் | தலைவி கூற்று | குளிரும் பருவத்தே யாயினும் தென்றல் | புணர்வு உவகை | தலைவியின் நிலை |
| 31 | 31 | ஐந்திணை ஐம்பது பாலை | தலைவி கூற்று | உதிரந் துவரிய வேங்கை யுகிர்போ | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 32 | 32 | ஐந்திணை ஐம்பது பாலை | தோழி கூற்று | விலங்கல் விளங்கிழாய் செல்வாரே வல்ல | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 33 | 33 | ஐந்திணை ஐம்பது பாலை | நற்றாய் கூற்று | பாவையும் பந்தும் பவளவாய்ப் பைங்கிளியு | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 34 | 34 | ஐந்திணை ஐம்பது பாலை | தோழி கூற்று | கோட்டாமை வல்விற் கொலை பிரியா வன்கண்ண | கள்வர் அச்சம் | தலைவியின் நிலை |
| 35 | 35 | ஐந்திணை ஐம்பது பாலை | தலைவி கூற்று | கொடுவி லெயினர்தங்கொல் படையால் வீழ்ந்த | அணங்கு அச்சம் | தலைவியின் நிலை |
| 36 | 36 | ஐந்திணை ஐம்பது பாலை | தலைவி கூற்று | கடிதோரும் வெண்டேரை நீராமென் றெண்ணி | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 37 | 37 | ஐந்திணை ஐம்பது பாலை | நற்றாய் கூற்று | தோழியர் சூழத் துறைமுன்றி லாடுங்கால் | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 38 | 38 | ஐந்திணை ஐம்பது பாலை | தோழி கூற்று | சுனைவாய்ச் சிறுநீரை யெய்தாதென்றெண்ணி | புலன், உவகை | தலைவியின் நிலை |
| 39 | 39 | ஐந்திணை ஐம்பது பாலை | தலைவி கூற்று | மடவைகா ணன்னெஞ்சே மாண்பொருண் மாட்டோடப் | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 40 | 40 | ஐந்திணை ஐம்பது பாலை | தலைவி கூற்று | இன்றல்க லீர்ம் படையுளீர்ங் கோதை தோடுணையர் | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 41 | 41 | ஐந்திணை ஐம்பது நெய்தல் | தோழி கூற்று | தெண்கடற் சேர்ப்பன் பிரியப் புலம்படைந் | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 42 | 42 | ஐந்திணை ஐம்பது நெய்தல் | தலைவி கூற்று | கொடுந்தாளலவ குறையா மிரப்பே | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 43 | 43 | ஐந்திணை ஐம்பது நெய்தல் | தலைவி கூற்று | பொரிப்புறப் பல்லிச் சினை யீன்ற புன்னை | இளிவரல், வருத்தம் | தலைவியின் நிலை |
| 44 | 44 | ஐந்திணை ஐம்பது நெய்தல் | தோழி கூற்று | கொண்கன் பிரிந்த குளிர்பூம் பொழினோக்கி | இழவு, அழுகை | தலைவியின் நிலை |
| 45 | 45 | ஐந்திணை ஐம்பது நெய்தல் | தலைவி கூற்று | ஈர்ந்தண் பொழிலு ளிருங்கழித் தண் சேர்ப்பன் | புணர்வு, உவகை | தலைவியின் நிலை |
| 46 | 46 | ஐந்திணை ஐம்பது நெய்தல் | தோழி கூற்று | ஒதற் தொகுத்த வொலிகடற் நண்முத்தம் | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 47 | 47 | ஐந்திணை ஐம்பது நெய்தல் | தலைவன் கூற்று | பெருங்கடலுள் கலந்த நுண் வலைவீசி | அணங்கு, அச்சம் (வருத்தம்) | தலைவியின் நிலை |
| 48 | 48 | ஐந்திணை ஐம்பது நெய்தல் | தோழி கூற்று | எக்க ரிடுமணன்மே லோதந்தரவந்த | புகழ் , பெருமிதம் | தலைவியின் நிலை |
| 49 | 49 | ஐந்திணை ஐம்பது நெய்தல் | தோழி கூற்று | கொடுமுன் மடற்றாழைக் கூம்ப வீழ்ந்த வொண்பூ | தறுகண், வீரம் | தலைவியின் நிலை |
| 50 | 50 | ஐந்திணை ஐம்பது நெய்தல் | தோழி கூற்று | அணிகடற் றண்சேர்ப்பன் றேர்ப் பரிமாப் பூண்ட | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |

**ஐந்திணை எழுபது – மூவாதியார்**

குறிஞ்சி மொத்தப் பாடல்கள்– 14

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1 | 1 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தோழி கூற்று | அவரை பொருந்திய பைங்குர லேனல் | புலன் உவகை | தலைவியின் நிலை |
| 2 | 2 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தலைவி கூற்று | கொல்லைப் புனத்த வகில் சுமந்து கல்பாய்ந்து | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 3 | 3 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தோழி கூற்று | இலையடா தண்குளவி யேய்ந்த பொதும்பிற் | பேதைமை, நகை | தலைவியின் நிலை |
| 4 | 4 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தலைவி கூற்று | மன்றப் பலவின் சுளை விளை தீம்பழ | மடமை, நகை | தலைவியின் நிலை |
| 5 | 5 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தலைவி கூற்று | சான்றவர் கேண்மை சிதைவின் றாயூன்றி | புலன், உவகை | தலைவியின் நிலை |
| 6 | 6 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தோழி கூற்று | பொன்னிணர் வேங்கை கமழு நளிசோலை | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 7 | 7 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தோழி கூற்று | காய்ந்தீய லன்னை இவளோ தவறில | விளையாட்டு, உவகை | தலைவியின் நிலை |
| 8 | 8 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தோழி கூற்று | வெறிகமழ் தண்சுனைத் தெண்ணீர் துளும்பக் | பேதைமை, இளமை | தலைவியின் நிலை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 9 | 9 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தலைவி கூற்று | மன்றத் துறுகற் கருங்கண் முசுவுகளுங் | புணர்வு ,உவகை | தலைவியின் நிலை |
| 10 | 10 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தோழி கூற்று | பிரைசங் கொளவீழ்ந்த தீந்தேனிறாஅன் | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 11 | 11 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தோழி கூற்று | கேழ லுழுத கரிபுனக் கொல்லையுள் | வெகுளி, அலை (சினம்) | தலைவனின் நிலை |
| 12 | 12 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தலைவி கூற்று | பெருங்கை யிருங்க ளிறைவனைமாந்திக் | பெருமிதம், புகழ் | தலைவனின் நிலை |
| 13 | 13 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தலைவி கூற்று | வார்குர லேனல் வளைவாய்க கிளைகவரு | இளமை, பேதைமை | தலைவியின் நிலை |
| 14 | 14 | ஐந்திணை எழுபது குறிஞ்சி | தலைவி கூற்று | குறையொன்றுடையேன் மற்தோழி நிறையில்லா் | அச்சம், விலங்கு | தலைவியின் நிலை |

## முல்லை 12 பாடல்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 15 | 15 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | செங்கதிர்ச் செல்வன் சினங்கரந்த போழ்தினற் | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 16 | 16 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | தடமென் பணைத்தோளி நீத்தாரோவாரார் | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 17 | 17 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | தண்ணறுங் கோட றுடுப் பெடுப்பக் காரெதிரி | கொலை, வெகுளி | தலைவியின் நிலை |
| 18 | 18 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | கதமுறை வானஞ்சிதற விதழகத்துத் | வருத்தம், இளிவரல் | தலைவியின் நிலை |
| 19 | 19 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | கொன்றைக் குழலூதிக் கோவலர் பின்னிரைத்துக் | வருத்தம் ,இளிவரல் | தலைவியின் நிலை |
| 20 | 20 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | இனத்த வருங்காலை பொங்கப் புனத்த | இளிவரல், வருத்தம் | தலைவியின் நிலை |
| 21 | 21 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | காரிகை வாடற் துறந்தாரும் வாராமுன் | இளிவரல், வருத்தம் | தலைவியின் நிலை |
| 22 | 22 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | கொன்றைக் குழலூதிக் கோவலர் பின்னிரைத்துக் | இளிவரல், வருத்தம் | தலைவியின் நிலை |
| 23 | 23 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | தேரைத் தழங்கு குரற்றார்மணி வாயதிர்ப்ப | இளிவரல், வருத்தம் | தலைவியின் நிலை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 24 | 24 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | கல்லேர் புறவிற் கவினிப் புதன்மிசை | இளிவரல், வருத்தம் | தலைவியின் நிலை |
| 25 | 25 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | கார்புடை பாண்டில் கமழப் புறவெல்லா | இளிவரல், வருத்தம் | தலைவியின் நிலை |
| 26 | 26 | ஐந்திணை எழுபது முல்லை | தலைவி கூற்று | குருந்தலை வான்படலை ஆடிச் சுரும்பார்ப்ப | இளிவரல், வருத்தம் | தலைவியின் நிலை |

**முல்லை மொத்தப் பாடல்கள் = 12**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 27 | 27 | ஐந்திணை எழுபது பாலை | தோழிகூற்று | எழுத்துடைக் கன்னிரைக்க வாயில் விழுத்தொடை | தறுகண் பெருமிதம் | தலைவனின் நிலை |
| 28 | 28 | ஐந்திணை எழுபது பாலை | தலைவி கூற்று | வில்லுழு துண்பார் கடுகி யதரலைக்குங் | உறுப்பறை வெகுளி | தலைவியின் நிலை |
| 29 | 29 | ஐந்திணை எழுபது பாலை | தலைவி கூற்று | பேழ்வா யிரும்புலி குஞ்சரங் கோட்பிழைத்துப் | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 30 | 30 | ஐந்திணை எழுபது பாலை | தலைவி கூற்று | நீரி லருஞ்சமத் தாமானினம் வழங்கு | உணர்வு உவகை | தலைவியின் நிலை |
| 31 | 31 | ஐந்திணை எழுபது பாலை | தலைவி கூற்று | பொறிகிளர் சேவல் வரிமரற் குத்த | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 32 | 32 | ஐந்திணை எழுபது பாலை | தலைவி கூற்று | மரிவா் கவரை மறுமனைச் சோ்ந்தல்இக் | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 33 | 33 | ஐந்திணை எழுபது பாலை | தலைவி கூற்று | சூரற் புறவி னணில் பிளிற்றுஞ் சூழ் படப்பை | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 34 | 34 | ஐந்திணை எழுபது பாலை | தலைவி கூற்று | முளுஉளடை மூங்கில் பிணங்கிய சூழ்ப்படப்பை | அச்சம் அணங்கு | தலைவியின் நிலை |
| 35 | 35 | ஐந்திணை எழுபது பாலை | தோழி கூற்று | பொரிபுற வோமைப் புகா்படு நீழல் | இளிவரல் வருத்தம் | தலைவியின் நிலை |
| 36 | 36 | ஐந்திணை எழுபது பாலை | தலைவி கூற்று | கோள்வல் கொடுவரி நல்வயமாக்குழுமுந் | இளிவரல் வருத்தம் | தலைவியின் நிலை |
| 37 | 37 | ஐந்திணை எழுபது பாலை | தலைவி கூற்று | கொடுவரிபாயத் துணையிழற் தஞ்சி | அச்சம் விலங்கு | தலைவியின் நிலை |
| 38 | 38 | ஐந்திணை எழுபது பாலை | தோழி கூற்று | மன்ற முது மரத் தாத்தை குரலியம்பக் | இளமை பேதைமை | தோழியின் நிலை |
| 39 | 39 | ஐந்திணை எழுபது பாலை | தோழி கூற்று | பூங்கணிட மாடுங் கனவுந் திருந்தின | இளமை பேதைமை | தோழியின் நிலை |
| 40 | 40 | ஐந்திணை எழுபது பாலை | நற்றாய் கூற்று | ஒல்லோமென்றேங்கி யுயங்கி யிருப்பளோ | வருத்தம் இளவரல் | நற்றாய் நிலை (தலைவியை நிலை) |

பாலை மொத்தப்பாடல் – 14

மருதம்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 41 | 41 | ஐந்திணை எழுபது மருதம் | தோழி கூற்று | ஆற்றலுடைய னரும் பொறி நல்லூரன் | உவகை செல்வம் | தோழியின் நிலை |
| 42 | 42 | ஐந்திணை எழுபது மருதம் | தலைவி கூற்று | அகன்பணை பூரனைத் தாமம் பிணித்த | நகை பேதைமை | தலைவியின் நிலை |
| 43 | 43 | ஐந்திணை எழுபது மருதம் | தலைவி கூற்று | போத்தில் கழுத்தாற் புதல்வனுணச் சான்றான் | அழுகை அசைவு | தலைவியின் நிலை |
| 44 | 44 | ஐந்திணை எழுபது மருதம் | தலைவி கூற்று | உழலை முருக்கிய செந்நோக்கெடுமை | அழுகை அசைவு | தலைவியின் நிலை |
| 45 | 45 | ஐந்திணை எழுபது மருதம் | செவிலி கூற்று நற்றாய்க்கு கூறியது | தேங்கமழ் பொய்கை யகவய லூரனைப் | நகை இளமை | தலைவியின் நிலை |
| 46 | 46 | ஐந்திணை எழுபது மருதம் | தலைவி கூற்று | பேதை புகலை புதல்வன் றுணைச்சான்றோ | பேதை இளமை | தலைவியின் நிலை |
| 47 | 47 | ஐந்திணை எழுபது மருதம் | தலைவி கூற்று | யாணர்நல் லூரன் றிறங்கிளப்ப லென்னுடைய | பேதைமை இளமை | தலைவியின் நிலை |
| 48 | 48 | ஐந்திணை | தலைவி கூற்று | ஒள்ளிதழ்த் தாமரைப் போதுறமு மூருனை | புணர்வு உவகை | தலைவியின் நிலை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | எழுபது மருதம் | | | | |
| 49 | 49 | ஐந்திணை<br>எழுபது மருதம் | தலைவி கூற்று | பேதைய ரென்று தமரைச் செறுபவோர் | பிணி இளிவரல் | தலைவியின் நிலை |
| 50 | 50 | ஐந்திணை<br>எழுபது மருதம் | தலைவி கூற்று | காதலிற் நீரக்கழிய முயங்கண்மி | இளமை பேதைமை | தலைவியின் நிலை |
| 51 | 51 | ஐந்திணை<br>எழுபது மருதம் | தோழி கூற்று | உண்டாட்டஞ் சான்றவர் தந்த<br>நசையிற்றென் | இளமை பேதைமை | தலைவனின் நிலை |
| 52 | 52 | ஐந்திணை<br>எழுபது மருதம் | தோழி கூற்று | உண்டுறைப் பொய்கை வராஅ லினபிரியுந் | இளமை பேதைமை | தலைவியின் நிலை |
| 53 | 53 | ஐந்திணை<br>எழுபது மருதம் | தலைவி கூற்று | பொய்கைநல் லூரன் றிரங்கிளந்த<br>லென்னுடைய | மென்மை இளிவரல் | தலைவியின் நிலை |
| 54 | 54 | ஐந்திணை<br>எழுபது மருதம் | தோழி கூற்று | வள வய லூரன் மருருரைக்கு மாதர் | செல்வம் உவகை | தோழியின் நிலை |

**மருதம் முடிவு**

**மொத்தம் 14 பாடல்கள்**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 55 | 55 | ஐந்திணை எழுபது நெய்தல் | தலைவி கூற்று | ஒழுகு திரைக்கரைவான்குழுகின் றூவி | இளமை பேதைமை | தலைவியின் நிலை |
| 56 | 56 | ஐந்திணை எழுபது நெய்தல் | தலைவி கூற்று | என்னைகொ றோழி அவர்கண்ணு நன்இல்லை | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 57 | 57 | ஐந்திணை எழுபது நெய்தல் | தோழி கூற்று | இடுமென லெக்கரகன்கானந் சேர்ப்பன் | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 58 | 58 | ஐந்திணை எழுபது நெய்தல் | தலைவி கூற்று | மணிநிற நெய்த லிருங்கழிச்சேர்ப்ப | அசைவு அழுகை | தலைவியின் நிலை |
| 59 | 59 | ஐந்திணை எழுபது நெய்தல் | தலைவி கூற்று | கண்டிரண் முத்தம் பயக்கு மிருமுந்நீர்ப் | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 60 | 60 | ஐந்திணை எழுபது நெய்தல் | தோழி கூற்று | அடும்பிவ ரெக்க ரலவன் வழங்குங் | பேதைமை இளமை | தோழியின் நிலை |
| 61 | 61 | ஐந்திணை எழுபது நெய்தல் | தோழி கூற்று | கண்ணுறு நெய்தல் கமழுங் கொடுங்கழித் | பெருமிதம் தறுகண் | தலைவனின் நிலை |
| 62 | 62 | ஐந்திணை எழுபது நெய்தல் | தோழி கூற்று | தெண்ணீரிருங்கழி வேண்டு மிரைமாந்திப் | புணர்வு உவகை | தலைவியின் நிலை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 63 | 63 | ஐந்திணை எழுபது நெய்தல் | தலைவி கூற்று | எறிசுறாக் குப்பை யினங்கலக்கத் தாக்குக | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 64 | 64 | ஐந்திணை எழுபது நெய்தல் | தோழி கூற்று | நுண்ஞாண் வலையிற் பரதவர் | புணர்வு உவகை | தலைவியின் நிலை |
| 65 | 65 | ஐந்திணை எழுபது நெய்தல் | தோழி கூற்று | இவர்திரை நீக்கியிட் டெக்கர் மணன்மேல் | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 66 | 66 | ஐந்திணை எழுபது நெய்தல் | தலைவி கூற்று | சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய் | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |

நெய்தல் –12 பாடல்கள் மொத்தம்

## கண்ணன்சேந்தனார்– திணைமொழி ஐம்பது

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1 | 1 | திணைமொழி ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | புகழ்மிகு சாந்தெறிந்து புல்லெரி யூட்டிப் | புகழ் பெருமிதம் | தலைவனின் நிலை |
| 2 | 2 | திணைமொழி ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | கணமுகை கையெனக் காந்தள் கவின | புகழ் பெருமிதம் | தலைவனின் நிலை |
| 3 | 3 | திணைமொழி ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | ஓங்க லிறுவரைமேற் காந்தள்கடிகவினப் | புணர்வு உவகை | தலைவியின் நிலை |
| 4 | 4 | திணைமொழி | தோழிகூற்று | ஏன லிடத்திட்ட ஊர்மணிகொண் | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | ஐம்பது குறிஞ்சி | | டெல்லிடைக் | | |
| 5 | 5 | திணைமொழி ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | விரைகமற் சாரற் விளைபுனங் காப்பர் | அச்சம் கள்வர் | தலைவனின் நிலை |
| 6 | 6 | திணைமொழி ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | யானை யுழலு மணிகிளர் நீள்வரைக் | மென்மை இளிவரல் | தலைவியின் நிலை |
| 7 | 7 | திணைமொழி ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | யாழுங் குழலு முழவுமியைந்தென | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 8 | 8 | திணைமொழி ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | வேங்கை மலர வெறிகமழ் தண்சிலம்பின் | இளமை பேதைமை | தலைவியின் நிலை |
| 9 | 9 | திணைமொழி ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | பிணிநிறத் தீர்ந்து பெரும் பணைத் தோள்வீங்க | வருத்தம் இளிவரல் | தலைவியின் நிலை |
| 10 | 10 | திணைமொழி ஐம்பது குறிஞ்சி | தோழிகூற்று | பலவின் பழம்பெற்ற பைங்கட்கடுவன் | புணர்வு உவகை | தலைவியின் நிலை |

